தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீடு எண். 454

# தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

இருபத்திநான்காவது தொகுப்பு

(இலக்கியப் பகுதி)




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

2003 விலை ரூ. 90

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீடு எண். 454

# தமிழ்ச் சுவடிகளின் விளக்கம்

## இருபத்திநான்காவது தொகுப்பு

(இலக்கியப் பகுதி)

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்:
புலவர் வீ. சொக்கலிங்கம்
தமிழ்ப் பண்டிதர் (ஓய்வு)
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்

2003 விலை ரூ. 90

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

—ௐ—


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | தமிழ்ச் சுவடிகளின் விளக்கம் தொகுதி 24 |
| பதிப்பாசிரியர் | : | புலவர் வீ சொக்கலிங்கம் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர் சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 454 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | பிப்ரவரி, 2003 |
| தாள் | : | 11·2 கி-கி. தமிழ்நாடு |
| நூல் அளவு | : | 34 × 48 செ. மீ. |
| பக்கங்கள் | : | 312 |
| படிகள் | : | 250 |
| எழுத்து | : | 10 புள்ளி |
| அச்சிட்டோர் | : | **ஸ்ரீ வேலன் பிரஸ்,**<br>**132, S. P. கோவில் தெரு, சிதம்பரம்.** |
| புத்தகக் கட்டு | : | அட்டைக் கட்டு |
| பொருள் | : | இலக்கியச் சுவடிகளின் விளக்க அட்டவணை |
| விலை | : | ரூ. **90** |




# வெளியீட்டாளர் முகவுரை

உலகளவில் போற்றப்படும் மாமன்னர் சரபோஜியின் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு, மராட்டி முதலான மொழிச் சுவடிகள், பனை ஓலைச் சுவடிகளாகவும், காகிதச் சுவடிகளாகவும், தம்முடைய தொன்மையினையும் சிறப்பையும் வெளிப் படுத்திக் கொண்டிருக்கின்றன.

அவற்றுள், தமிழ்ப் பகுதியிலுள்ள சுவடிகள் மூவாயிரத்திற்கும் மேற்பட்ட இலக்கியச் சுவடிகளாகவும், மருத்துவச் சுவடிகளாகவும் காணப்படுகின்றன. இலக்கியச் சுவடிகள் 1787 (இ) - 1906 (எஃப்) வரையிலான எண்களைக் கொண்டவைகட்கு விவர அட்டவணையாக இந்நூல் வெளிவருகின்றது. எஞ்சியுள்ள சுவடிகளின் விவர அட்டவணை தொடர்ந்து வெளிவர உள்ளன.

24-ஆம் தொகுதியான இந்நூலினை தக்க விளக்கங்களுடனும் குறிப்புகளுடனும் விவர அட்டவணைத் தயாரித்தளித்த, இந்நூலக முன்னாள் தமிழ்த்துறை தலைவர் புலவர் வீ. சொக்கலிங்கம் அவர்கட்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவர பொருளுதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நன்முறையில் அச்சிட்டுத் தந்த சிதம்பரம் ஸ்ரீ வேலன் அச்சகத்தாருக்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

இந்நூல் விரைவில் வெளிவர ஆவன அனைத்தும் செய்த நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், வெளியீட்டு மேலாளர் திரு. அ. பஞ்சநாதன் அவர்களுக்கும் ஏனையோர்க்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சுவடியியல் ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும், அறிஞர்களுக்கும் இந்நூல் உறுதுணையாக நின்று உதவும் என்பதில் ஐயமில்லை.

தஞ்சாவூர்
15—2—2003

சி. கோசலராமன், இ. ஆ. ப.
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்
சரசுவதி மகால் நூலகம்.

# பதிப்பாசிரியர் முன்னுரை

''மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை''

என்ற திருஞானசம்பந்தப் பெருந்தகையாரின் கூற்றுக்கிணங்க எல்லோரும் வாழ்வாங்கு வாழவேண்டுமென்ற அன்புள்ளங்கொண்ட பேராளர்கள், எண்ணற்ற தம் பேரறிவாற்றல்களை இலக்கிய, இலக்கணங்களாக்கி, ஓலைச்சுவடிகளில் எழுதிப் பாதுகாத்தனர், அவ்வாறானா ஓலைச் சுவடிகளும், காகிதச் சுவடிகளும் நம் சரசுவதி மகாலில் சேகரிக்கப்பட்டும், பாதுகாக்கப்பட்டும் வருகின்றன. இத் திருப்பணியினைத் தலைமேற்கொண்டு பெரிதும் சேகரித்துக் காத்த பெருமை, நம் மாமன்னர் சரபோஜி சத்ரபதி அவர்களையே சாரும்.

அம் மன்னரை அடியொற்றித் தொடர்ந்து மகால், பல அறிய சுவடிகளைச் சேகரித்தது. பெருங்கொடையாளர்கள், தாங்களாகவே முன்வந்து, ஏராளமான சுவடிகளை நம் மகாலுக்கு அன்பளிப்பாகத் தந்துள்ளனர். அவைகள் தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம், மராட்டி ஆகிய மொழிகளில் உள்ளன.

தமிழில் உள்ள சுவடிகள். இலக்கியம். மருத்துவம் என இரு பிரிவுகளை உடையன. அவற்றுள் இலக்கியச் சுவடிகளின் விவர அட்டவணை தயாரிக்கப்பட்டு, 1, 2, 7, 10, 6, 23, ஆகிய தொதிகளாக வெளிவந்துள்ளன. தற்போது சுவடி எண் 1787-1-1906-f வரை உள்ள சுவடிகள் 24-வது தொகுதியாக வெளிவருகின்றது. மேலும் 25, 26-வது தொகுதிகள் வெளிவரத் தயாராக உள்ளன. ஏனைய தொகுதிகள் மருத்துவம்.

இத் தொகுதியினைப் பதிப்பிக்க அனுமதியளித்த, தஞ்சை சரசுவதிமகால் நூலக இயக்குநரும், மாவட்ட ஆட்சியாளருமான உயர்திருவாளர் சி. கோசலராமன் இ. ஆ. ப. அவர்கட்கும் நூலக நிருவாக அலுவலர் உயர்திருவாளர் சாமி. சிவஞானம் M. A. அவர் கட்கும், நூலக பதிப்பு மேலாளர் உயர்திருவாளர் அ. பஞ்சநாதன் M A.,M.L.L S., அவர்கட்கும் எனது நன்றி உரித்தாகிறது.

இதனை, வெளியிடப் பொருளுதவி புரிந்த நடுவண் அரசுக்கும் நன்முறையில் அச்சிட்டுத் தந்த சிதம்பரம் ஸ்ரீ வேலன் அச்சகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகிறது.

நூல்களைச் சேகரித்துப் புகழொடு தோன்றிய எமது மாமன்னர் சத்ரபதி சரபோஜி அவர்களைப் போலப் பேராளர்கள், தம்மிடமுள்ள ஓலைச் சுவடிகளையும், பிற நூல்களையும் எமது மகாலுக்குத் தந்து, தம் புகழையும் நிலைநாட்ட வேணுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

இத் தொகுதியில் காணும் குற்றம் களைந்து குணம் கொண்டு வாசித்தல் கற்றறிந்த மாந்தர் கடன் ஆகும்.

இங்ஙனம்.

புலவர் வீ. சொக்கலிங்கம்
முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர்
சரசுவதிமகால்.

தஞ்சாவூர்
3—12—2002

# தங்களிடமிருந்த சுவடிகளை மனமுவந்து சரசுவதி மகாலுக்குத்தந்த பெருந்தகையாளர்கள்

திருவாளர் எஸ் பி. பாலுசாமி அவர்கள்
மே/பா திரு V. நடேசன் செட்டியார் அவர்கள்
தேங்காய் வியாபாரம், வாணியத் தெரு, மேலத் திருப்பூந்துருத்தி.

திரு கோ. தாமோதரன் அவர்கள்
2612, ஆறுமுக ஆசாரி சந்து, தெற்கு வீதி, தஞ்சாவூர்.

திரு G தாமஸ் அவர்கள், மாதா கோயில் தெரு, மாத்தூர் அஞ்சல், பசுபதி கோவில்.

திரு R கலியபெருமாள் அவர்கள், T. S. 85, டிபன்சாமி மடம், பாளோபா நந்தவனம், வடக்கு வாசல் அஞ்சல், தஞ்சாவூர்.

திரு A. D. குப்புசாமி அனந்தர் அவர்கள்
4, வேதகிரி வீதி, (நவநாரத பவனம்), வட ஆற்காடு.

திரு V. சேதுராமலிங்க முதலியார் B. A. அவர்கள்
ஓய்வு பெற்ற உதவி கருவூல அதிகாரி,
மே/பா, திரு. வைத்தியலிங்கம் B. A. B L. அவர்கள்
ஓய்வு பெற்ற தமிழக அரசு துணைச் செயலர், முதல் தெரு,
பெரியார் நகர், சென்னை.

திருமதி கு. ஆவுடைத் தாயம்மாள் அவர்கள்
மே/பா. திரு. அப்பாராஜ் அவர்கள், 70C 6 சிங்கப்பூர் லைன்,
லெட்சுமிபுரம் அஞ், கோவில்பட்டி.

திரு புட்டார் S. சுப்பையா நாயக்கர்,
2-வது வார்டு, தெற்குத் தெரு, தோப்பு ரெட்டிப் பட்டி,
இளையரசனேந்தல் அஞ், கோவில்பட்டி.

திரு சின்னச் செல்லையா அவர்கள்
அங்காள ஈஸ்வரி கோவில் பூசாரி, வெம்பக்கோட்டை,
சாத்தூர்.

திரு சி. கந்தசாமி மணியகாரி அவர்கள்
போலீஸ் நிலையம் எதிரில், வெம்பக்கோட்டை.

திரு B. நடராச பாரதி அவர்கள் அரண்மனை,
மந்தித்தோப்பு, கோவில்பட்டி.

திரு பி. குருசாமி நாயக்கர் அவர்கள்
மேல்ச் சத்திரம், சங்கரபாண்டிபுரம், சாத்தூர்.

திரு S. V. S B. செகநாதராசா அவர்கள்
(கடம்பூர் ஜமீன்தார்) அரண்மனை, கோவில்பட்டி.

திரு S. மகாலிங்க யோகி அவர்கள்
சித்த வைத்திய இல்லம், No. 135, ஆ. சாலைப் புதூர்,
கோவில்பட்டி.

திரு இராதாகிருஷ்ணன் அவர்கள், சோதிடர்
வளையல்காரன் புதூர், மயனூர், குளித்தலை.

திரு R. கருப்பையா அவர்கள், மேல் பகவதி பாளையம்
காக்காவாடி கிராமம், கரூர் வட்டம்.

திருமதி சுசீலா அவர்கள், மே/பா, திரு. கணபதி அவர்கள்
No. 1 சுண்ணாரத் தெரு, அம்மாபேட்டை.

திருமதி நாகம்மாள் அவர்கள், சாலியர் தெரு,
அம்மாபேட்டை.

திரு K. சத்தியமூர்த்தி அவர்கள்
21, சாலியர் தெரு, அம்மாபேட்டை.

திரு A. நாகராசன் அவர்கள், ஓய்வு பெற்ற போலீஸ்,
12, கடைத்தெரு, மெலட்டூர்.

திரு கருப்பையா சேர்வை அவர்கள்
மெலட்டூர்.

திரு S. சின்னையா அவர்கள், கரப்பை,
கோவத்தகுடி, மெலட்டூர்.

திரு வை. பாலார் கவுண்டர் அவர்கள்
437, தாளியாபட்டி, வெள்ளியணை, கரூர்.

திரு முருகேச முதலியார் அவர்கள்
மே/பா திரு இரத்தின சபாபதி அவர்கள்
3, சுண்ணாரத் தெரு, அம்மாபேட்டை.

திரு ஜி. சேதுராமன் M. A. அவர்கள்
31, கிருஷ்ணன் கோயில் தெரு, அம்மாபேட்டை.

திரு என். கே. சண்முகசுந்தரம் அவர்கள்
137, அக்ரகாரம், கொளஞ்சி வாடி, தாராபுரம்.

திரு N. S. சேகர் அவர்கள், 65, G. N. செட்டிரோடு,
தி. நகர், சென்னை.

திரு C. சுப்பராமன் அவர்கள், 84, வெங்கிடசாமி ரோடு,
R. S. புரம், கோவை.

திரு T. S. திருமலைவேலு அவர்கள், உதவிப் பேராசிரியர்,
அரசு கலைக் கல்லூரி, கரூர்.

திரு இளங்கோவன் அவர்கள், உதவி இயக்குனர்,
பதிப்புத்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை.

செப்பறை மடம், (ராசவல்லிபுரம்)
திருநெல்வேலி மாவட்டம்.

---★---

# பொருளடக்கம்

## மந்திரம்



## சோதிடம்





## பிழை திருத்தம்

**இந்த 24-வது தொகுதியில் வரிசை எண்கள் தவறாக அச்சாகியுள்ளன. எனவே சரியான எண்களை திருத்தம் செய்து கொள்ள வேண்டுகிறோம்.**

| உள்ளவை | திருத்தம் | உள்ளவை | திருத்தம் | உள்ளவை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 3862 | 2679 | 3892 | 2709 | 3922 | 2739 |
| 3863 | 2680 | 3893 | 2710 | 3923 | 2740 |
| 3864 | 2681 | 3894 | 2711 | 3924 | 2741 |
| 3865 | 2682 | 3895 | 2712 | 3925 | 2742 |
| 3866 | 2683 | 3896 | 2713 | 3926 | 2743 |
| 3867 | 2684 | 3897 | 2714 | 3927 | 2744 |
| 3868 | 2685 | 3898 | 2715 | 3928 | 2745 |
| 3869 | 2686 | 3899 | 2716 | 3929 | 2746 |
| 3870 | 2687 | 3900 | 2717 | 3930 | 2747 |
| 3871 | 2688 | 3901 | 2718 | 3931 | 2748 |
| 3872 | 2689 | 3902 | 2719 | 3932 | 2749 |
| 3873 | 2690 | 3903 | 2720 | 3933 | 2750 |
| 3874 | 2691 | 3904 | 2721 | 3934 | 2751 |
| 3875 | 2692 | 3905 | 2722 | 3935 | 2752 |
| 3876 | 2693 | 3906 | 2723 | 3936 | 2753 |
| 3877 | 2694 | 3907 | 2724 | 3937 | 2754 |
| 3878 | 2695 | 3908 | 2725 | 3938 | 2755 |
| 3879 | 2696 | 3909 | 2726 | 3939 | 2756 |
| 3880 | 2697 | 3910 | 2727 | 3940 | 2757 |
| 3881 | 2698 | 3911 | 2728 | 3941 | 2758 |
| 3882 | 2699 | 3912 | 2729 | 3942 | 2759 |
| 3883 | 2700 | 3913 | 2730 | 3943 | 2760 |
| 3884 | 2701 | 3914 | 2731 | 3944 | 2761 |
| 3885 | 2702 | 3915 | 2732 | 3945 | 2762 |
| 3886 | 2703 | 3916 | 2733 | 3946 | 2763 |
| 3887 | 2704 | 3917 | 2734 | 3947 | 2764 |
| 3888 | 2705 | 3918 | 2735 | 3948 | 2765 |
| 3889 | 2706 | 3919 | 2736 | 3949 | 2766 |
| 3890 | 2707 | 3920 | 2737 | 3950 | 2767 |
| 3891 | 2708 | 3921 | 2738 | 3951 | 2768 |

| உள்ளவை | திருத்தம் | உள்ளவை | திருத்தம் | உள்ளவை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 3952 | 2769 | 3989 | 2806 | 4026 | 2843 |
| 3953 | 2770 | 3990 | 2807 | 4027 | 2844 |
| 3954 | 2771 | 3991 | 2808 | 4028 | 2845 |
| 3955 | 2772 | 3992 | 2809 | 4029 | 2846 |
| 3956 | 2773 | 3993 | 2810 | 4030 | 2847 |
| 3957 | 2774 | 3994 | 2811 | 4031 | 2848 |
| 3958 | 2775 | 3995 | 2812 | 4032 | 2849 |
| 3959 | 2776 | 3996 | 2813 | 4033 | 2850 |
| 3960 | 2777 | 3997 | 2814 | 4034 | 2851 |
| 3961 | 2778 | 3998 | 2815 | 4035 | 2852 |
| 3962 | 2779 | 3999 | 2816 | 4036 | 2853 |
| 3963 | 2780 | 4000 | 2817 | 4037 | 2854 |
| 3964 | 2781 | 4001 | 2818 | 4043 | 2855 |
| 3965 | 2782 | 4002 | 2819 | 4044 | 2856 |
| 3966 | 2783 | 4003 | 2820 | 4045 | 2857 |
| 3967 | 2784 | 4004 | 2821 | 4046 | 2858 |
| 3968 | 2785 | 4005 | 2822 | 4047 | 2859 |
| 3969 | 2786 | 4006 | 2823 | 4048 | 2860 |
| 3970 | 2787 | 4007 | 2824 | 4049 | 2861 |
| 3971 | 2788 | 4008 | 2825 | 4050 | 2862 |
| 3972 | 2789 | 4009 | 2826 | 4051 | 2863 |
| 3973 | 2790 | 4010 | 2827 | 4052 | 2864 |
| 3974 | 2791 | 4011 | 2828 | 4053 | 2865 |
| 3975 | 2792 | 4012 | 2829 | 4054 | 2866 |
| 3976 | 2793 | 4013 | 2830 | 4055 | 2867 |
| 3977 | 2794 | 4014 | 2831 | 4056 | 2868 |
| 3978 | 2795 | 4015 | 2832 | 4057 | 2869 |
| 3979 | 2796 | 4016 | 2833 | 4058 | 2870 |
| 3980 | 2797 | 4017 | 2834 | 4059 | 2871 |
| 3981 | 2798 | 4018 | 2835 | 4060 | 2872 |
| 3982 | 2799 | 4019 | 2836 | 4061 | 2873 |
| 3983 | 2800 | 4020 | 2837 | 4062 | 2874 |
| 3984 | 2801 | 4021 | 2838 | 4063 | 2875 |
| 3985 | 2802 | 4022 | 2839 | 4064 | 2876 |
| 3986 | 2803 | 4023 | 2840 | 4065 | 2877 |
| 3987 | 2804 | 4024 | 2841 | 4066 | 2878 |
| 3988 | 2805 | 4025 | 2842 | 4067 | 2879 |

| உள்ளவை | திருத்தம் | உள்ளவை | திருத்தம் | உள்ளவை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 4068 | 2880 | 4105 | 2917 | 4142 | 2954 |
| 4069 | 2881 | 4106 | 2918 | 4143 | 2955 |
| 4070 | 2882 | 4107 | 2919 | 4144 | 2956 |
| 4071 | 2883 | 4108 | 2920 | 4145 | 2957 |
| 4072 | 2884 | 4109 | 2921 | 4146 | 2958 |
| 4073 | 2885 | 4110 | 2922 | 4147 | 2959 |
| 4074 | 2886 | 4111 | 2923 | 4148 | 2960 |
| 4075 | 2887 | 4112 | 2924 | 4149 | 2961 |
| 4076 | 2888 | 4113 | 2925 | 4150 | 2962 |
| 4077 | 2889 | 4114 | 2926 | 4151 | 2963 |
| 4078 | 2890 | 4115 | 2927 | 4152 | 2964 |
| 4079 | 2891 | 4116 | 2928 | 4153 | 2965 |
| 4080 | 2892 | 4117 | 2929 | 4154 | 2966 |
| 4081 | 2893 | 4118 | 2930 | 4155 | 2967 |
| 4082 | 2894 | 4119 | 2931 | 4156 | 2968 |
| 4083 | 2895 | 4120 | 2932 | 4157 | 2969 |
| 4084 | 2896 | 4121 | 2933 | 4158 | 2970 |
| 4085 | 2897 | 4122 | 2934 | 4159 | 2971 |
| 4086 | 2898 | 4123 | 2935 | 4160 | 2972 |
| 4087 | 2899 | 4124 | 2936 | 4161 | 2973 |
| 4088 | 2900 | 4125 | 2937 | 4162 | 2974 |
| 4089 | 2901 | 4126 | 2938 | 4163 | 2975 |
| 4090 | 2902 | 4127 | 2939 | 4164 | 2976 |
| 4091 | 2903 | 4128 | 2940 | 4165 | 2977 |
| 4092 | 2904 | 4129 | 2941 | 4166 | 2978 |
| 4093 | 2905 | 4130 | 2942 | 4167 | 2979 |
| 4094 | 2906 | 4131 | 2943 | 4168 | 2980 |
| 4095 | 2907 | 4132 | 2944 | 4169 | 2981 |
| 4096 | 2908 | 4133 | 2945 | 4170 | 2982 |
| 4097 | 2909 | 4134 | 2946 | 4171 | 2983 |
| 4098 | 2910 | 4135 | 2947 | 4172 | 2984 |
| 4099 | 2911 | 4136 | 2948 | 4173 | 2985 |
| 4100 | 2912 | 4137 | 2949 | 4174 | 2986 |
| 4101 | 2913 | 4138 | 2950 | 4175 | 2987 |
| 4102 | 2914 | 4139 | 2951 | 4176 | 2988 |
| 4103 | 2915 | 4140 | 2952 | 4177 | 2989 |
| 4104 | 2916 | 4141 | 2953 | 4178 | 2990 |

| உள்ளவை | திருத்தம் | உள்ளவை | திருத்தம் | உள்ளவை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 4179 | 2991 | 4189 | 3001 | 4199 | 3011 |
| 4180 | 2992 | 4190 | 3002 | 4200 | 3012 |
| 4181 | 2993 | 4191 | 3003 | 4201 | 3013 |
| 4182 | 2994 | 4192 | 3004 | 4202 | 3014 |
| 4183 | 2995 | 4193 | 3005 | 4203 | 3015 |
| 4184 | 2996 | 4194 | 3006 | 4204 | 3016 |
| 4185 | 2997 | 4195 | 3007 | 4205 | 3017 |
| 4186 | 2998 | 4196 | 3008 | 4206 | 3018 |
| 4187 | 2999 | 4197 | 3009 | 4207 | 3019 |
| 4188 | 3000 | 4198 | 3010 | 4208 | 3020 |
| | | | | 4209 | 3021 |

உ

தஞ்சை சரசுவதி மகால் நூலகம்

# தமிழ்ச்சுவடிகளின் விளக்கம்

## 24 - வது தொகுப்பு

## இலக்கியப் பகுதி



வரிசை எண் : 3862 சுவடி எண் : 1787-1

## சுந்தரர் வேடுபறி

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 300 அளவு : 21 × 2½ செ.மீ.

க்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேடுபறி

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

சூடுந் தமிழ்ப்பெருமாள் சுந்தரனார் வேடுபறி
பாடுந் தமிழ்க் கலிவெண் பாவுக்கு — நாடுஞ்
சிரத்திலஞ்சான் றன்னைத் திசைமுகத்தா னாக்கக்
கரத்திலஞ்சான் கையிலஞ்சான் காப்பு

முடிவு :

சுந்தரனார் வாழியவர் சொற்றமிழுஞ் சூரியருஞ்
சந்திரனா ருள்ளமட்டுந் தான்வாழி — இந்திரனார்
போற்றினான் றென்முருகனை பூண்டியானன் பரமனந்
தேற்றினான் வாழி தினம்
வெத்திவே லுத்ததுணையாக வேணும்
ஸ்ரீராம செயம்

குறிப்பு :

இது, கூடலையாற்றூரில் சுந்தரமூர்த்தி நாயனார் செல்லும் போது, அவர் கொண்டுவந்த பொன் பொருள்களை யெல்லாம் பூதகணங்கள் பறித்துச்செல்ல சிவபெருமான் மீண்டு கொடுத் தருளியதைக் கூறுவது.

இது, எமது சுவடி எண் D-எண் 334 போன்றது.

—★★—★

வரிசை எண் : 3363 சுவடி எண் : 1787–m

# திருப்புகழ்

ஏடுகள்: 2 தி. எண்ணிக்கை : 50 அளவு: 21×2½ செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் அரகர நமசிவாய ஆனந்த ரூபனாய
ஆதிகோ சாதினாய அட்சரப்பிர தெட்சணாய
அதிரத மகேசனாய ஆதி புவனேசனாய
அமார யடமடம் திரிசூலி டமரானந்தி

முடிவு :

யுச்சிட்ட மண்டலி ஓம் லிங்க நம சிவாய
ஓம் நமோ நம சிவாய ஓம் நமோ நாராயணாய
ரூபி ஓம் நமோ பகவதே உன......

குறிப்பு :

இதில்,தலைப்பேட்டின் முன்பகுதி உடைந்துள்ளதால் இன்ன திருப்புகழ் என்று அறியக்கூடவில்லை. பெரிதும் மந்திரங்களாகவே காணப்படுகின்றன.



வரிசை எண் : 3864 சுவடி எண் : 1787-ந

# ஞான உலா

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 200 அளவு : $21 \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : சங்கராச்சாரியர் பொருள் : உலா

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

*தொடக்கம் :*

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

உன்னையே பொருளென வுகந்து போற்றி
யென்னையும் பிதாவும் நீயானா தாலுமே
சொன்ன தெண்ணிட ரெல்லாத் துத்ததது
நின்மனந் தன்னிலே கருணைவைத் தருள்வைங்கரனே !

நூல்

சீரான காசி சிதம்பரத்தி லேகுடியாய்ப்
பேரான நெஞ்சமே பேசக்கேள் — ஆராய்ந்து
உன்னை யுணர்ந்த படியுலகத் தால்ஞானஉலா
தன்னை விதித்தறிவார் தான்பாட

*முடிவு :*

உண்டு களிப்பதுவே உண்மையாம் — கொண்ட
சங்கரா சாரிதமிழா லுரைத்தவுலா
யிங்காருவ் கத்து மியம்பவே — கங்காளர்
பாதம் பெறுவார் பணியி லுலகாள்வார்
வேதம் பெறுவார் மெஞ்ஞானம் — ஓது
குருவா யனவோற்குங் குணமுடையோராகித்
தருவரா யிருப்ப ரெனச் சாத்து

ஹரிஓம் குருபாதமே துணையாக வேணும்
சிவமயம் சதாசிவம். ஸ்ரீராம செயம் வேலனார் துணை

குறிப்பு :

இது, திருக்கைலாய ஞான உலாவினும் வேறாயது,
வேதாந்த செய்தி இதில் பேசப்படுகிறது.



வரிசை எண் : 3865 சுவடி எண் : 1787-ஏ

# திருப்புகழ்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 21×2½ செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம்

அரி ஓம் நமசிவாய அரகர பணசரஷ சாருப
அரிபண சரஷ்சர அஷ்ட்ட ரூபாங்க
ரூபா அகோர அகோர பிரளயகாலா
அவதார மிகுவாய்

முடிவு :

நமனொளிபவ சறுமிறுவ பவாய
மனொளி பவா சயனொளி பவா
சதாசிவ ருத்திர சண்டனை அரிதிரு மருகா
ஆறுமுக ஆறுமுகப் பெருமாளே

ஆறுமுகம் துணை
வெற்றிவே லுற்ற துணை
சிவசகாயம்

குறிப்பு :

இது, இந்நூலின் 1737-m போன்றது. மந்திர சாத்திரம் போல காணப்படுகின்றது, முழுதும் ஒரே பாட்டாக உளது.



வரிசை எண் . 3866 சுவடி எண் : 1788

# தத்துவ நூற்றிரட்டு

ஏடுகள் : 42 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 31×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 6—7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தத்துவம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

............ங்கச நூற்றேடி புணர்வா ரெனப்
பரமகுருவின் மலர்த்தாள் வேண்டுபவர்
கெள்வா ரின்னூற் குறிப்பறிந்தே

முடிவு :

தெறிவுறப் பார்த்துத் தெளிந்து பொய்யென்ற திரமதுபோன்
மருவுமுடற் சகவாழ்வு பெண்பிள்ளை மனைவகுத்த வுருவு
மடையப் பொ ...............

குறிப்பு :

ஆதியும் அந்தமுமில்லாததால் இது இன்ன நூலென்று அறிய இயலவில்லை. உரை சிறப்பாக உளது. உதாரணச் செய்யுட்கள், தாயுமானவர் பாடல், பட்டினத்தார் பாடல், தேவாரம், திருக்குறள், நாலடியார், திருவாய் மொழி, தேவாரம் சிவஞானபோதம், திருவாசகம், நீதிநெறி விளக்கம் முலதான பல நூல்களிலிருந்தும் காட்டப்பட்டுள்ளன. இடையிடையே பல ஏடுகள் இல்லை.



வரிசை எண் : 3867 சுவடி எண் : 1789

# சீவன் முத்திப் பிரகரணம்

ஏடுகள் : 106 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 20×4 செ.மீ

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : ஸ்ரீசாம்பநடேசர்? பொருள் : வேதாந்தம்

நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சத்திய ஞானானந்த பரிபூரண பரமாத்வைத ராயிருக்கிற
வியாதொரு பரம சிவனானவர் சுத்த சத்துவப் பிரதானமாய்ச்
சோடிசமாய், சூட்சும மாயா சொரூபானாவரண மாய்ச்
சுவாதீனமா யிருக்கின்ற

முடிவு :

நானுந் தமிழினாலே சொன்னே னந்தப்படிச் சொல்லப்பட்ட
விந்தத் தமிழ்மொழி ரூபமான சீவன் முத்திப் பிரகரணம்

ஸ்ரீசாம்ப நடேசருக்கே யற்பணஞ் செய்யப் பட்டுதாததா யிதிலிருக்கப்பட்ட பிழைகளை ஸ்ரீசாம்பசிவத்தாளா யிருக்கின்ற சாதுக்கள் சகித்துக் கொள்ள வேண்டியது.

சிவன் முத்திப்பிரகரணம் முற்றிற்று

அகண்ட பரிபூரண முத்துராமலிங்க தேசிகன் திருவடிகளே

சரணம் திருச்சிற்றம்பலம்

ஸ்ரீசாம்ப நடேசர் திருவடி வாழ்க

குறிப்பு :

இது, எமது ஏழாம் தொகுப்பு சுவடி எண் 1003/D-1751 போன்றது. எழுத்துக்கள் நன்றாக உள்ளன. ஏடுகள் 94—199 வரை உள்ளன.



வரிசை எண் : 3868 சுவடி எண் : 1790

# சதமுக ராமாயணம்

ஏடுகள் : 110 கி. எண்ணிக்கை : 13,000 அளவு : 39×4 செ.மீ

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : இராமாயணம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி:ஓம் நான்றாக குருவாழ்க குருவே துணை

நாடிய பொருள் கைகூடும்
ஞானமும் புகழு முண்டாம்
× × × × ×
சூடிய சீலையி ராமன் றோள்வலி கூறுவோர்க்கே.

சுபமஸ்த்து, ஸ்ரீமன் மகா மண்டலேசுபரன் அரியதள் விபாடன் பாஷைக்குத் தப்பு வராத கண்டன் மூவராயகண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு இடாதான்

முடிவு :

பூலோகத்திலே சகல பாக்கியங்களையும் அனுபவித்துக் கொண்டு
அந்திய காலத்திலே ஸ்ரீமன் நாராயண மூர்த்தியினுடைய
பாதமடைந்து வைகுந்த மடைந்ததிலே சாசுவதமாக
யிருப்பார்க ளென்றவாறு. குருவாழ்க குருவே துணை.

காலம் :

பிரபவா வருஷம் ஆனி மாதம் 22-ந் தேதி ஆதித்தவார நாள் பூராட நட்சேத்திரமும் துதிகை திதியு தனுசு லெக்கணமும் கூடின சுபதினத்தில் கன்மாவூர் ஆறுமுக பரதேசியினுடைய பேரனாகிய அப்பாசாமியுடைய சதுமுக ராமாயணம் யெழுதினது ஆறுமுக பரதேசி. யிதை ஆராமொருவர் படித்தால் படித்துவிட்டு குடுத்து விடவும். குடாதே போனால் பெரியவாள் சாபங்கிடைக்கும். வெள்ளைக்குட்டம் விழுகும். அது வறிந்து குடுத்து விடவும். ஸ்ரீமந் நாராயண மூர்த்தி யினுடைய கிடாட்ச முண்டாக வேணும். வாலாம்பிகை குருசுவாமி வயிரவர் மூர்த்தி கிடாட்சமுண்டாக வேண்டியது. ராமாயண முகிந்தது. முற்றும்.

குறிப்பு :

இது, எமது ஏழாம் தொகுப்பு சுவடி எண் 995/D-1641 போன்றது,



வரிசை எண் : 3869 சுவடி எண் : 1791

# தனியார் சாதகம்

ஏடுகள் : கி. எண்ணிக்கை : அளவு :

பக்கத்திற்கு : ஆசிரியர் : பொருள் :

நிலைமை : முழுமை : எழுத்து :

குறிப்பு :

இது, புதுக்கோட்டை கோவிந்தசாமி பிள்ளை குமரான் தொரைசாமி பிள்ளைக்கு குமாரன் பிறந்த போது கணித்த சாதகம்

வரிசை எண் : 3870 சுவடி எண் : 1792

# அரங்கேச வெண்பா - உரையுடன் நீதி சூளாமணி, விவேக சூடாமணி

ஏடுகள் : 102 கி. எண்ணிக்கை : 2500 அளவு : $0\frac{1}{2} \times 4$ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நீதிநூல்
நிலைமை : எலிகடி முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

சீர்கொண்ட காவேரித் தென்னரங்கத் தெம்பிரான்
பார்கொண்ட தாளைப் பரவியென் — ஏர்கொண்ட
ஓங்குபுகழ் வள்ளுவனா ரோதுகுறள் முற்கதையால்
பாங்குபெறச் சொல்வேன் பரிந்து
× × × × ×

நீதிசூளாமணி

கடவுள் வாழ்த்து

சொன்னகம் பத்தே மடங்கல் தோன்றுதலால்
அன்பருளத்தி னமுதமாகு மிரங்கேசா — மன்னும்
அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. என்றது
அகரமுற்றெழுத்துப் பதினெட்டும்

முடிவு :

பார்வாழி வேதியர்கள் வாழி யிதின் ........ ல்
படித்தோர் வாழி புயல்வேந்தர் கார்வாழி
ஆழியுவ ................ தரன்பர் பரமு மிகவாழி சுருதிமனு

ஆக குறள் 133. சுப்பிரமணியக் கடவுள் துணை
ஸ்ரீராம செயம்

காலம் :

(பிங்)கள வருஷம் ஆவணி மாதம் 8-ஆம் தேதி பிள்ளையார் சதுர்த்தியும் சோபனா ........யோகமும் கூடின சுபதினத்தில் அரங்கேச வெண்பா ........... சூடாமணி எழுதி முகிந்தது முற்றும் தாயுமானவர் துணை.

குறிப்பு :

இது, திருவரங்கம் அரங்கநாதப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு முன்னிரண்டடிகளிலும் கதை கூறிப் பின்னிரண்டடிகளிலும் திருக்குறளை அமைத்துப் பாடப்பட்டதாகும். 133 அதிகாரங்களை உள்ளடக்கியுளது. விளக்கமான உரையும் உள்ளது.

ஏடுகள் முன்பின்னாக உள்ளன.



வரிசை எண் : 3871 சுவடி எண் : 1793-a

# விஞ்ஞான தீப அட்டவணை

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 250 அளவு : 27 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : முத்து முனிவர் பொருள் : வேதாந்தம்

நிலைமை : சற்றே பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்
முத்தப்பச் செட்டியார் மகன் தேவறாயஞ் செட்டியார்
யெழுதிய காப்பு

விஞ்ஞான தீபம் யார்க்கும் வெளிச்சமா யிருளை நீக்கும்
அஞ்ஞானந் தன்னைப் போக்கி அறிவுக்குள் அறிவாய்த் தோன்றும்
மெஞ்ஞானம் சிரத்தின் மீதே விளங்கிடு மகுட மாகி
யெஞ்ஞான்றுந் துதிப்போர் நெஞ்சில் யிருந்திடுங் காப்புத் தானே !

சிவமயம்
அட்டவணை

1. காப்பு
2. சீடன் சரிதை வினா

முடிவு :

191. உலகத்தை விட்டு நீங்குவ தருமை யெனல்
192. சுவனுபூதி விளக்கம்
193. யிதுமது.

அட்டவணை முத்தித்து

குறிப்பு :

இது, பின் சுவ்டியின் தல்லைப்பு அட்டவண்ணை

வரிசை எண் : 3872 சுவடி எண் : 1793-b

## விஞ்ஞான தீபம்

ஏடுகள் : 48 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 27 × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : முத்து முனிவர் பொருள் : வேதாந்தம்
நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்

காப்பு

நித்தியமாய் நிஷ்களமாய் அனாதி யாகி
நிறைந்த பரவெளியாகி யாதுந் தோன்றா
சுத்த நிர்மலமாகி நிறைந்த சித்தாய்
சொருபமிலாப் பொருளாகி யெங்குந் தானாய்

முடிவு :

தேடிய பிடிக்கு யெனைவாட்டி
திகைக்கச் செய்யு மதைக்கண்டு
ஓடி விரட்டித் தனித்து மனம்
எழுமைப் படுத்திக் கொண்டேனே ! — 193

முற்றுப் பெற்றது

குறிப்பு:

இது, முன் அட்டவணைப்படி தலைப்புகளைக் கொண்டது. ஞானத்தினைத் தடை விடைகளாற் போசுகின்றது.



வரிசை எண் : 3873 சுவடி எண் : 1793-c

## சுவாமியாரான வரலாறு

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 150 அளவு : 27 × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : முத்து முனிவர் பொருள் : வேதாந்தம்
நிலைமை : சற்றே பழுது முழுமை : முற்றுமுளது. எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்

பூதலந் தனிலே அலைகின்ற வஞ்சகப் புலையர்க
ளனந்தசாமி பொய் சொல்லிச் சாண் வயற்
வளர்க்கவே காவிகள் பூண் டோடிவந்த சாமி

முடிவு :

உலகினில் பற்றுவைத்திருக்க மாட்டார்
பக்தர்களெனும் பெரிய முத்தர்களும் இவர்களே
பாரினில் அறிந்து கொள்வீர் பாடவழி தேடிவரு
பாலதேவநான தேவராயன் பாடினேன் பழனியப்பா
பண்பாக நெஞ்சினில் அஞ்சுபேர் கூடிப் பாதை
வழிகாட்டி அருளே. முற்றிற்று
× கடன் பட்டசாமி வெகு கறிகாய் பருப்பு நெய் கலந்து
சோறுண்ட சாமி

குறிப்பு :

டி முன் நூலின் ஆசிரியர் முத்து முனிவர் தான் துறவுமேற் கொண்ட வரலாற்றினைக் கூறுகின்றார்.

—★★★—

வரிசை எண் : 3874 சுவடி எண் : 1793-d

# திருச்செந்தூர் பதிகம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 200 அளவு : 27×3½ செ.மீ
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்

வீதிசுற்றிக் கீழ்புறத்தில் கடலும் கண்டேன்
விஸ்தாரக் கொடிமரத்தில் தங்கம் கண்டேன்
ஆதியெனும் மூலவிக்கிரகத் தழகுங் கண்டேன்
அடியேனும் செந்தூரை வலமாய் வந்தேன்

முடிவு :

........... கைதனை வாங்கக் கண்டேன்
கடல்கரையில் வந்து சேர்ந்து
அருப தெரிசனங் கண்டருள் பெற்றேனே

குறிப்பு :

இதில், கடைசிப்பாடல் ஏடு சிதைந்துள்ளதால் முற்றும் காண இயலவில்லை.



வரிசை எண் : 3875 சுவடி எண் ; 1793-c

# பஞ்சாட்சர வராகிமாலை

ஏடுகள் 1 கி. எண்ணிக்கை : 40 அளவு : $27 \times 3\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்

(இரண்டு சக்கரங்கள் உள்ளன)

அலைமுசலந் தண்டு அங்கையிற் சங்காளி
இலகு திருமுடிமேல் யிந்து-சிலை நுதல் வாள்
மாவடுவின் கண்ணாள் வராகி யெனுங் குளிகை
நாவடக்கி யுண்டே நமக்கு

முடிவு :

வெறியுங் கருவி வெகுமாயை நீங்கிப்பின் விற்பனனாய்
செறியும் புகழ்பெற்று நாதாந்த வீட்டினில் சேருவரே — 5

குறிப்பு :

இதில், சிறு சிறுபாடல்களாகக் காணப்படுகின்றன. இதுவே முடிவா என்பது விளங்கவில்லை.



வரிசை எண் : 3876 சுவடி எண் : 1795

# கெவுளி காதல்

ஏடுகள் : 23 கி. எண்ணிக்கை : 250 அளவு : 7×3 செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஞாயிற்றுக்கிழமை

கீழக்கே யிருந்து கெவுளி சொன்னால் லாபம்
தென்கிழக்குத் தீது
தெற்குக் காரியஞ் செயம்
தென்மேற்கு நினைத்த காரியஞ் செயம்

முடிவு :

... ... ... ... ... ... பானாலிட
... ... ... ... ... ... துன்பமெல்லா
... ... ... ... ... ... விடுந்துயரந்தர்
ன் ... ... ... ... முற்றும்

குருவே துணை

அய்யனாரப்பன் அனுதினம் வந்து துணை செய்ய வேண்டியது.

ராமசெயம்

குறிப்பு :

இது. பல்லி சொல்லுக்குப் பலன் கூறுவது.

* * * *

வரிசை எண் : 3877 சுவடி எண் : 1796-அ

# வைகுண்ட விருத்தம்

ஏடுகள் : 46 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 38½×2½ செ.மீ

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரிஓம் நான்றக குருவாழ்க குருவே துணை

ஓம்குரு வாழ்க வென்று
உலகெலா மகல நீங்கி
பாங்குட னைந்து பேரும்
பத்தினி துரோப தையும்
ஈங்குள்ள கால மெல்லாம்
யெள்ளன வரசை யற்று
தீங்கிது சதமென் றெண்ணி
திரவியில் நடந்த ஞாயம்

௰
முடிவு :

அரிகரி ராமா வென்றால் அகன்றிடும் கொடிய பாவம்
அரிகரி ராமா வென்றால் அநேகமாச் செல்வம் சேரும்
அரிகரி ராமா வென்றால் அவர்களும் மகிழ்ந்து வாழ்வார்
அரிகரி ராமா வென்றால் அவர்கள்மெய்ஞ் ஞானி யாவார் —177
வைகுண்ட விருத்தம் முற்றுப் பெற்றது.

நன்றாக

குறிப்பு :

இது, வைகுண்ட அம்மானையினும் வேறாயது. ஆனால் கதை ஒன்றே. இதன் முதல் ஏட்டில் வைகுண்ட அம்மானைப் பாடல்கள் 2 எழுதப்பட்டுள்ளன. பஞ்சபாண்டவர்கள் வைகுந்தம் சேர்ந்த வரலாற்றைக் கூறுவது. பாரதக்கதையைச் சார்ந்தது.



வரிசை எண் : 3873 சுவடி எண்: 1796-b

## மகா நவமிப் பாட்டு

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 20 அளவு : $38\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ மீ

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

24 வது தொகுப்பு

தொடக்கம் :

சிவமயம்

மாமேவு நவரற்றின மணிமகுட
மன்னில்ப் பொதிந்த முடியும்
வச்சிர நுதற்றிலகு வெண்ணீறு மோராறு
வதனவிள் பத்தி னழகும்
பரமேவு பத்தர்க்கு மடைதிறந் தனபொழுது
பன்னிரு விழிக்க ருணையும்

முடிவு :

தாமோதரானந்த கோவிந்த வைகுந்த
சாசகோ பால மருகா
சதிரமறைக ளேதத்த பரமருருவாய்வந்த
சரவண பவானந்தனே

குறிப்பு :

இதில், ஒரே பாடலே ஒரு ஏட்டில் உள்ளது. பின்னர், ஒரு ஏட்டில். பூக் கொய்தல் முதலானது எழுதி இறுதியில் திருமலை யேற வேணும் என்று முடிகிறது உள்ளது.

பின் ஒரு ஏட்டில் எண்கள் எழுதப்பட்டுள்ளன.



வரிசை எண் : 3879 சுவடி எண் : 1797

# குற்றாலக் குறவஞ்சி

ஏடுகள் : 30 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 38×3 செ.மீ

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : திரிகூடராசப்பக் கவிராயர் பொருள் : குறவஞ்சி

நிலைமை : சற்று பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரிஓம் நன்றாக

பூமலி யிதழி மாலை புனைந்தகுற் றாலத் தீசர்
கோமலர்ப் பாதம் போற்றி குறவஞ்சி தமிழைப் பாட
மாமலர்த் தருவி பாயும் மலையென வந்த் மேனி
காமலர்த் தருப்போ லய்ந்து கைவளான் காப்புத் தானே.

முடிவு :

தார்வாழி குருமுனிவன் சொன்ன
பேர்வாழி பதிசன ராமன்
பேர்வாழி நன்னகர் பேறாலோங்கும்
ஊர்வாழி குற்றால ரடியவர்கள்
வாழி நீடூழி தானே
குறவஞ்சி படித்து முற்றும் — 200

கழுகாசல மூர்த்தி துணை

சோமாரி சங்கவ னாயக்கர் மகன சங்கரப்ப னாயக்கர் குத்தால குறவஞ்சி சுவடி.

குறிப்பு :

இதன், 27–ஆம் ஏடு ஒடித்துளது. பாடல்கள் முழுதும் உள்ளன இது, திருக் குற்றால நாதர் மீதுபாடப் பட்ட குறவஞ்சியாகும் குற்றால நாதர் பவனி வருதல், மலைவளம், குறிவளம், முதலியன சிறப்பு திருகூடராசரைப் 'பெண்சேர வல்லான்' என்று குறத்தி கூறுவது அழகாக உள்ளது.



வரிசை எண் : 3880 சுவடி எண் : 1798

# உலகந்தாதி

ஏடுகள் : 45 கி. எண்ணிக்கை : 800 அளவு : 10×3 செ.மீ. பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : விசுவனாத பாரதி பொருள் : அந்தாதி நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

முந்தாதி வேதப் பொருளான சிங்கை
முதல்வியுல கந்தாதி பாடவருள் செய்யுமே
யெந்தையார் சடைமேற் பிந்தாதி மகரச்
சந்திரேகைப்பிடித் திதழிச்
செந்தாதி(கு)லோர் சிவப் பெற்றுந் தாழ்கைச்
சிறுகளிறே ! இவை காப்பு

முடிவு :

காலைக் கமலமுங் கல்லையாண விக்கிரக காத்தியும் பொன்
னோலைக் குழையும் குழற்காடும் வாளியுங் கம்மனே
உலகந்தாதி முற்றும் சற்குரு துணை சிவமயம். — 100
வேண்டியது விசுவனாத பாரதி அருளிச் செய்த
உலகந்தாதி. அம்பாள் துணை.

குறிப்பு :

இதில், 100 பாடல்களும் உள்ளன வேணும் பிழைகள் மலிந்துகிடக்கின்றன. இது, சிங்கையில் எழுந்தருளியுள்ள அம்மை மீது பாடப்பட்டது போலும்.

இதன் பின் தாயே எனமுடியும் இரண்டு பாடல்களைக் கொண்ட இரண்டு ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 3881 சுவடி எண் : 1799

# சோதிடம்

ஏடுகள் : 28 கி. எண்ணிக்கை: 250 அளவு : 7½×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : மிகப் பழுது - எலிகடி முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி : ஓம்

வேகமா நெறிசேரும் வினைகளுந் தாக போக
தாக போக விடாத தளர்ச்சியுஞ்
சோக வாரியினால் வருதுன் பமும்
போக வானை முகவனைப் போற்றுவாம்

முடிவு :

மூலையில் உசந்த மேடு சிற்றிலை
மரமுண்டு (மடி) கரையுண்டு
அந்தத் தேவதை குற்றம் விலக்கவும்
செட்டிவீடு (லா)பம் உத்தமம்.

2

குறிப்பு :

இது, கயறு போட்டுப் பார்க்கும் வகையைச் சேர்ந்தது. இடையிடையே பல ஏடுகள் இல்லை. எலி கடித்துள்ளதால் பக்க எண்கள் காண முடியவில்லை.



வரிசை எண் : 3882 சுவடி எண் : 1800

## மந்திரத் திரட்டு

ஏடுகள் : 70 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 18½×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : மந்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

பேய்களுக்கு குளிசம். (சக்கரம்)
சொப்பனத்துக்கு

இது சொப்பனங் கண்டால் இது சக்கிரம்
மந்திரம் (சக்கரம் உள்ளது)

இந்த சக்கரத்துக்கு மந்திரம்
காம மோகினி காமரூப மோகினி ... ... ...

முடிவு :

மேவுதேனென்றால் தாவுதே யின்ன மின்னம்
வறனையில் யேக மோக மோகமாகயிலை
கீதவங்கள்மங்கள மீறவே இச்சையதாக
விருந்து பிளைந்த டசிதம்,

குறிப்பு :

இதில், பல்வேறு அளவுள்ள ஏடுகள் உள்ளன. எதிரி சூனியம் வைத்தால், எதிர்க்கிறது. சபைகட்டு, ஸ்ரீகளுக்கு வசியம், மோடி வித்தை, வினோத வித்தை, கோசாதிகளுடைய வித்தை திலதமிட ராசவசியம், வாழாத பெண்களுக்கு வாழும்படியாக, புருசனை விட்டுப் பிரியாது யிருக்க சஞ்சீவி, தன்னைக்கட்டு மந்திரம், அஞ்சன வித்தை முதலான பல மந்திரங்கள் உள்ளன,

வரிசை எண் : 3883 சுவடி எண் : 1801

# சாதகம்

ஏடுகள் : கி. எண்ணிக்கை : அளவு :

பக்கத்திற்கு : ஆசிரியர் : பொருள் : சோதிடம்

நிலைமை : முழுமை : எழுத்து :

குறிப்பு :

தனியார் சாதகம்.
இது சிப்பிபாறை கிராமம் சுப்பய்ய நாயக்கன் குமாரனுடைய சாதகம்.



வரிசை எண் : 3884 சுவடி எண் : 1802

# பட்சி சாத்திரம்

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 150 அளவு : $13\frac{1}{2} \times 3$ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சிவமயம்
சுப்பிபரனாயிருக்கும் கருக்கலகொ
நாராயணப்ப னாயக்கன் மகன் ராமசாமி
னாயக்கன் பட்சிப்பொஸ்தகம்
எடுத்தவன்குடுக்க வேணும். சுப்பய்யர் துணை
ஞாயிறு 60 செவ்வாய் 40
திங்கள் 60 புதன் 50

முடிவு :

அமர பட்சத்துக்கு திங்கள், சனி,
க. ம, யூ. ஆ. ந. கோ. அ. வ. தா. கா. சா.
× × × × ×
கோ. யூ. ம. ந. ஆ அ. கோ. து. வ. சா.

குறிப்பு :

இது, பஞ்சபட்சி சாத்திரத்தைச் சார்ந்தது

வரிசை எண் : 3885 சுவடி எண் : 1803

## எண் சுவடி வாய்பாடு

ஏடுகள் : 26 கி. எண்ணிக்கை : 400 அளவு : 40×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : கணிதம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

1 — 3 3 — 9
10 — 30 30 — 90
2 — 6 4 — 12
20 — 60 40 — 1 0

முடிவு :

இவர்களுக்கு வாகனம் அறியும்படி

இந்திரனுக்கு வெள்ளானை, அக்கினிக்கு ஆட்டுக்கிடா
எமனுக்கு எருமைக்கிடா நிருதிக்கு மான்
வருணனுக்கு முதலை வாயுவுக்குக் கலை
குபேரனுக்கு குதிரை ஈசானியனுக்கு ரிஷபம்

குறிப்பு :

இரட்டை ஏடுகள். தலைதடுமாற்றம். இடையிடையே ஏடுகள் இல்லை. பின்ன வாய்பாடு, எண் பெருக்கல் வாய்பாடு முதலியன உள்ளன.



வரிசை எண் : 3886 சுவடி எண் : 1804

## ஸ்ரீ மகாபாரதம் ஆதிபருவம் - உரையுடன்

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 32×4 செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : இதிகாசம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவே துணை.

வானாறு பெருஞ்சீர்த்தி வளர்குருகை நம்பொருட்டு
வந்து தெய்வக்
கானாறு நறுந்துணர் வரன்றிருப் புளிக்கீழமர்ந்து
நனி கருணை பூத்துத்
தேனாறு தமிழ்மறை முன்கிளர்ந் தருளுஞ்
சிறு முனிவன் செழுமெய்ஞ்ஞானப்
பானாறு பதகமலமது பதகமல மறப்பழிச்சுவாமால் —1.

முடிவு :

அனேக ஆறபாரத்துடனே இன்றைக்கு அருச்சுனனையும்
ஸ்ரீ கிருஷ்ண தேவனையும் வளைந்து கொல்லக் கடவீரென்று
ரணகளத்துக்கு அனுப்பி வைத்தார்களென்றவாறு.

குறிப்பு :

இது, வில்லிபராதத்தின் சற்று வேறு போலக் காணப்படுகிறது முதலில் 123 பாடல்கள் உள்ளன. பின்னர் ஒரு ஏடு இன்மையால் அடுத்த ஏட்டில் சிறப்புப் பாயிரச் சருக்கம் முற்றும் என்றும் 2—வது குருகுலச் சருக்கம் என்றும் உளது.



வரிசை எண் : 3887 சுவடி எண் : 1805

## திருவாதவூரர் புரணம்

ஏடுகள் : 124 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 15×3 செமீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : கடவுண்மா முனிவர் பொருள் : புராணம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

வேகமா நெறிசேரும் × × × வல்லபைக் குரியானை வழுத்துவாம்

மந்திரிச்சருக்கம்

பவளமால் வரையி நிலைவெரிப்பதுபோற்
பரந்த நீற்றழகு × × × நினைந்து கை தொழுவாம் —1

நூல

துங்கமத கும்பவுயர் மும்பிமுக னெம்பி

× × × × ×

அங்கைமலர் கொண்டுமிக வன்புட னிறைஞ்சுவாம் — 2

முடிவு :

........... துவராடையைச் சுடவென்று துணி...........

........... ப கொட்ட மாரிய வுண்மையார் நகை ...........

.. .........த்தார் மீட்டுமுன் செய்த வத்தினா ரிவ...........

குறிப்பு :

இதில், புத்தரை வாதில் வென்ற சருக்கம் வரை உள்ளன. 8-வது திருவடி பெற்ற சருக்கம் இல்லை. இதன் பிற செய்திகளை எமது 6-ம் தொகுப்பு சுவடி எண் 978/D-1188-ல் காண்க.



வரிசை எண் : 3888 சுவடி எண் : 1806

# கட்டபொம்மன் கும்மி

ஏடுகள் : 173 கி. எண்ணிக்கை : 5500 அளவு : 26 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கும்மி

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவே துணை. குமாரன் துணை

உறஞ்சொல்லும் சொல்லும் உடன்பிறந்தார்பேர் உறுதி சொல்லும்
புறஞ்சொல்லும் பாஞ்சால நாட்டில் புகழதனை
திரஞ்சொல்லும் கட்டப்பொம் மேந்திர திரமதை
தறஞ்சொல்லும் போது கேட்டவர் நெஞ்சம் களிக்கின்றதே.

நூல்

சீர்பொருந்து கட்டப் பொம்முதுரை மீதில்
செந்தமிழ்க் கும்மி தமிழுரைக்க
கார்நிறம் பெற்ற வேழ முகத்தோனும்
கந்தனிள் பொற்பாதங் காப்பாமே.

முடிவு :

வாழிநல்ல மிகவாழி அந்த
வானவர்கள் எல்லோருந் தான் வாழி
வானவர்கள் மிகவாழி இதைப்
படித்தவர் கேட்டவர்கள் தான் வாழி
ஆலிலை போலவே தான் தழைத்து
அருகு போலவே வேரூன்றி
மூங்கிலில போலவே அன்னை சுற்றம்
முசியாமல் வாழ்ந்து யிருப்பார்.

காலம் :

தெள்ளிய துளாயிரத்தி யேளாம் வருசம் பங்குனி மாதம் 17-ஆம் தேதி செக வீரன் பாண்டியன் கோட்டை பிடித்தது. கட்டை பொம்மு கதை முற்றிற்று.

குறிப்பு :

இது, பாஞ்சாலக்குறிச்சி கட்டபொம்மன் வரலாறு கூறுவது. இது, கும்மி சந்தத்தில் பாடப்பட்டுளது. இக்கதை வேறு சந்தத்தில் பாடப்பட்டிருப்பது யாவரும் அறிந்ததே. இது, அதனினும் வேறுபட்டது.



வரிசை எண் : 3889 சுவடி எண் ; 1807-a

# யோக ஞான சாத்திரத் திரட்டு - தன்வந்திரி முப்பு சூத்திரம்

ஏடுகள் : 21 கி. எண்ணிக்கை : 300 அளவு : 30 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : தன்வந்திரி பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சற்குருவுக்கு வணக்கம். சக்திசிவம் சக்திசிவம் உற்றதுணை
மகாலிங்க யோகி சுவாமின் துணை.
ஓங்கார மென்பது அண்டம்
ரவிநாத மென்பது பூரம்

சக்திநாத மென்பது கெந்தி
விந்துநாத மென்பது ரஜமும் கெந்தியும்

நூல்

சீரான தேவியுமை வாலை பாதம்
சிறப்பாக யென்சிரசில் வைத்துச் சொல்வேன்.

முடிவு :

13 வரட்டியில் புடமிடவும் சுன்னமாம்
பனியில் வைக்கவும் செயநீர் இரங்கும்
இதில் நானாவித சரக்குகளையும் கட்டும்
நவலோகங்களை வேதிக்கும்

குறிப்பு :

இதில், 22-வது ஏட்டில் 48-வது செய்யுளுடன் 'தன்வந்திரி முப்பு சூத்திரம் முற்றும்' என்றுளது. தொடர்ந்து 2 ஏடுகளில் அதன் வேறு முறைகள் கூறப்பட்டு உள்ளன.



வரிசை எண் : 3890 சுவடி எண் : 1807-b

# இராமதேவர் அட்டாங்க யோகம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30×3 செ.மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : இராமதேவர் பொருள் : யோகம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கருதவே யின்னமொரு கருவைக் கேளு
கற்புடைய மனோன்மணியள் கருணையாலே
உருகவே யாதியந்த நிலையைப் பாாத்து
உருவான கருவுருவாம் மதனப் பூடு

முடிவு :

இஷ்டமுட னின்னூல்தா னைம்பத் தொன்று
ஏகமாய் மவுனமுட னிருந்து கொண்டு
அஷ்டாங்க யோமதைத் தினமும் பாரு
அருளான மனோன்மணிதான் காப்பாள் முற்றே ! 51

முற்றிற்று

குறிப்பு :

இதில் 42-வது முதல் 51-வது செய்யுள்வரை உள்ளன. இராமதேவர் பிற தலைப்பு நூலின் தொடர்ச்சி போலும்.



வரிசை எண் : 3891 சுவடி எண் : 1807-c

# பஞ்சபூத தினுசுகள்

ஏடுகள் : 5 கி எண்ணிக்கை : 50 அளவு : 30×3 செ.மீ.
க்கத்திற்கு: 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூத நிறம்:
மஞ்சள், பளிங்கு, சிகப்பு, கருப்பு, புகை
லோகத்தின் நிறம்
நிருதி யென்பது பொன் அப்யென்பது காரீயம்
கேயு யென்பது தாம்பரம். வாயு யென்பது அயம்.
ஆகாயம் யென்பது நாகம்-சூதம்,

முடிவு :

வாயுசரக்கு அதிகமாகில் புத்துப்போல்
நின்று எடை குறையும்
ஆகாய சரக்கு அதிகமாகில் வர்ணமிராது.

குறிப்பு :

இதில், கருவில் பஞ்ச பூதத்தின் விபரம், பஞ்சபூதத்தில் பாசாண வகைகள், பஞ்சபூதத்தில் லவணத்தின் விபரம், பஞ்சபூதம் பாஷாணப் பிரிவு, உபரசத்தில் பஞ்ச பூதத்தின் விபரம், பஞ்சபூதங்களின் சரக்கு மொத்த துகை விபரம், கருப்பஞ்சபூதம், பஞ்சபூதங்களின் எடைபாகம் விபரம் ஆகியவை உள்ளன.

வரிசை எண் : 3892

சுவடி எண்: 1807-d

## திருவள்ளுவர் சூத்திரம்-முப்பு குரு

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30×3 செ.மீ,

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : திருவள்ளுவர் பொருள் : மருத்துவம்,

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூரணமாய் நின்றெழுந்த முதலே காப்பு
புகழ் பெரிய அம்பிகைப்பெண் சித்தர் காப்பு
காரணமாங் காரசாரம் குருவே காப்பு
சுதிரெழுந்த சுழிமுனையாள் பாதங் காப்பு.

முடிவு :

தேடாதே தேய்விதுதான் யேலேல சிங்கா
தெரியவே சொல்லி விட்டேன் உனக்காக மைந்தா
காடெலாந் திரிந்தயர்ந் தலைய வேண்டாம்
கண்டுகொள் பதினாறும் கணக்காய் முற்றே ! —17

குறிப்பு :

இது, முப்புவின் விபரம் கூறுகிறது.



வரிசை எண் : 3893

சுவடி எண் : 1808

## சோதிடம்

ஏடுகள் : 110 கி. எண்ணிக்கை 500 அளவு : 17×3 செ.மீ

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

இந்தக் காரியும் ஆகுமா; ஆகாதா
இந்தக் கலியாணகாரிய மாகாது
இந்த பிள்ளை தலைகட்ட மிகவும் நன்று

இந்தப் பெண்ணை இவனுக்குக் குடுக்க ஆகாது
ஏரி கட்ட வுடைந்து அடைபடும்

முடிவு :

பாழையங் கோட்டை வைக்க மாத்தான் வருவான்
இந்தப் பெண்ணைக் கொள்ள நன்றாய் வாழ்வாள்
களவு வேட்டை போகப் பலியாது மத்திபம்
இவர் பேர் கொள்ளப் பொசிப் பில்லை மத்திபம்

குறிப்பு :

இது, கயறு போட்டுப் பார்க்கும் சுவடி. இன்ன காரியம் செய்ய நன்றோ தீதோ என்பதனைக் கூறுவது. ஏடுகள் தலை தடுமாற்றம். நடுவில் 3 ஏடுகள் 'தனியநாள் விபர மறியவும்' என்ற தலைப்பில் உள்ளன.



வரிசை எண் : 3894 சுவடி எண் : 1809-a

## சோதிடம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 150 அளவு : 19×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சோதிடம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஸ்ரீமது கமுகபு ரெவ ஸந்தன்
விற்தி சோள ஸ்ரீமான் ஸ்ரீபோதாயந.
சூதோரப்ப வாய மலதி

முடிவு :

நிருதி மோட்சம் கோ கணம் 1 3/16 ம்
தாபிறால சந்திரனை கண்டு சாப்பாடு
ராத்திரிக்கி சாப்பிடறது.

குறிப்பு :

இதில், தலைப்பு இல்லை. கிரந்தம் கலந்துளது.

வரிசை எண் : 3895 சுவடி எண் : 1809-b

# ருத்ரோத்காரி வருஷ பலன்

ஏடுகள் : 21 கி. எண்ணிக்கை : 500 அளவு : 19×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சோதிடம்

நிலைமை : சுமாரான நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

மேஷம்

1300. ந 26. தி. 46. ப. சா, 44 ரபத்த 26.
செ. 30. ரா 25 ப

முடிவு :

கதிப 128 $\frac{1}{2}$ மிதுனம் 7 $\frac{7}{8}$

சொகு 4 $\frac{3}{4}$ — — — — — ரவி 12 $\frac{1}{16}$

உத்தமம் மனுவாதி புண்ணிய காலம்

குறிப்பு :

ருத்ரோத்காரி ஆண்டுக்குரிய மேஷம் முதலான 12 ராசிகளுக்கும் உரிய சிறப்பு பேசப்படுகிறது தலைப்பு இல்லை



வரிசை எண் : 3896 சுவடி எண் : 1809-c

# சோதிடம்

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 9000 அளவு : 19×3 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை: பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

பானு தனுவில் பதிமூன்றே முக்கால்
மேலானிக்கிக் கெற்ப மறுத்த

மானிலத்தில் நன்று முதல் தேள் வரைக்கும்
நாலரை நா மாகாணி கொன்றல்

முடிவு :

இந்தப்படி நட்சேத்திரம் 27-க்கும்
திசைகளும் புத்திகளும்
பார்த்துக் கொள்ளவும்.

குறிப்பு :

இது, திசா புத்தி நூல் போலும். தலைப்பு இல்லை. கடைசி 2 ஏடுகள் நடுவில் உள்ளன.



வரிசை எண் : 3897 சுவடி எண் : 1810

## நாலு மந்திரி கும்மி

ஏடுகள் : 47 கி. எண்ணிக்கை : 1000 அளவு : $35 \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு: 5 வரிகள் ஆசிரியர் : சின்னதம்பி பொருள் : கதை

நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஹரி ஓம் நன்றாக, ருதுவாழ்க குருவேதுணை.

செந்தமிழ் போற்றும் அழகாபுரிதனில்
மந்திரி நாலுபேர் மீதினிலே

சந்தக் கும்மித் தமிழுரைக்க—சிவ
தந்தி முகம் பாதங் காப்பாமே.

குறிப்பு :

மாதுபதி கடலாடி வளர் சிங்கம்
மன்னவன் வீரபத்திரன் வாழி

அந்தணர் வாழி புகழ்வாளி புவிவாழ்கின்ற
ராசன் குலம் வாழி

காலம் :

விசுபாவசு வருஷம் புரட்டாசி மாசம் 31-ந் தேதி சொக்கம் பட்டியிலே யிருக்கும் முத்தன் செட்டி மகன் முத்தஞ் செட்டிக்கி நாலுமந்திரி கும்மி யெழுதி நிறைந்தது. முற்றும். இந்தயேடு வெடுத்த பேர்கள் பிழை இருந்தால் திருத்திப்படித்துக் கொள்ள வேண்டியது. மறுபடியும் ஏட்டுக் காரனிடத்தில் குடுக்க வேண்டியது.

தெண்டாயுதபாணி துணை. குத்தாலம்மன் துணை. வயிரம்மாள் துணை,

குறிப்பு :

இது, ஒரு ஒட்டகம் போன தடத்தைக்கண்டு போத வாதித்தன், போத சந்திரன், போத பூஷணன், போத வியாகரன் ஆகிய நாலுபேரும் அதன் முழு விபரமும் சொல்ல அது கேட்ட அழகேசன் என்னும் மன்னன் தனக்கு மந்திரிகளாக வைத்துக் கொண்ட வரலாற்றைக் கூறுகிறது.

வேறுசந்தத்தில் பாடப்பட்ட எமது சுவடி எண் 112/D-578 நாலு மந்திரி கதை போன்றது.



வரிசை எண் : 3898 சுவடி எண் : 1811

# மகாவிந்த நாடகம்

ஏடுகள் : 135 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 39 × 2½ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: இதிகாசம்

நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை

திரு துணைசெய் அத்திபுரத்தரசு செங்கோல்
திக்கு விசையஞ் செலுத்துந் தர்மராசன்

பரம பத முதவு கெதி
தருவைகுன்றப் பதியுலவுஞ் சரித நாடகத்தைப்
பாடப் புறமுன்றை யெரித்தவனே

முடிவு :

வானவர் முனிவர் வாழி மறையவ ரரசர் வாழி
ஞான மாதர்கள் வாழி நால்வகைச் சாதி வாழி
மோனமாத் தமிழ் சொல்கின்ற முத்தமிழ்க் கவிஞர் வாழி
பானுவுந் திங்கள் வாழி பலசனம் வாழி தானே.

காலம் :

வெகுதானிய வருசம் புரட்டாசி மாதம் 13-ந் தேதி வெள்ளிக்கிழமை தினம் கொர பட்டியிலிருக்கும் சரவணைக் கவுண்டன் மகாவிந்த நாடகம் எழுதி முகிந்தது முற்றும்.
இது எழுதினது முத்திய்யன் கையெழுத்து. கடவுள் துணை.
முருகர் துணை. விக்கினேஷ்பரன் துணை.

குறிப்பு :

வரலாறு ஒன்றேயெனினும் இது எமது சுவடி எண் 57; D-437-ன் வேறாயது. இது நாடக ரூபத்தில் இயற்றப்பட்டுளது. பிற செய்திகளை ஷை சுவடி எண் 57-ல் காண்க.



வரிசை எண் : 3899 சுவடி எண் : 1812

## சாதகம்

ஏடுகள் : கி. எண்ணிக்கை : அளவு :
பக்கத்திற்கு : வரிகள் ஆசிரியர் : பொருள் : சோதிடம்
நிலைமை : முழுமை : எழுத்து : தமிழ்.

குறிப்பு :

இது, மலையபுரத்தில் வசிக்கும் தெண்டாயுத பாணி குமாரன் சாதகம்.



வரிசை எண் : 3900 சுவடி எண் : 1813

## கயிலாச நாதர் சதகம்

ஏடுகள் : 51 கி. எண்ணிக்கை : 1500 அளவு : $41 \times 2\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : சிதம்பரவாணர் பொருள் : சதகம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை.

கடவுள் வாழ்த்து

சீர்மேவு திங்களணி தேவனே !
வளம்மைபெறு தில்லைவளர் நடராசனே !

செங்கண்மா லயனுநி னடிமுடிகள்
காணாமல் றேடியு மாகாதே

முடிவு :

பேர்வாழி தர்மவர்த்தனி யம்மைவாழி
யானுரைத்த சதகம் வாழி

புளப்புடன் கற்றுளோர் கேட்டுளோர் வாழி
யவ ருறவினரும் வாழி தானே ! —101

காலம் :

றவுத்திரி வருசம் மாசி மாதம் 26-ஆம் தேதி வியாழக்கிழமை யேகா தேசியும் உத்திராட நட்சேத்திரமும் கூடின சுபதினத்தில் கயிலாச நாதர் சதகம் எழுதி நிறைவேறினது. முற்றும் சம்பூரணம். சிவமயம். இந்த சதகம் குளந்த பாளையத்திலிருக்கும் அறுணாசல முதலி குமாரன் அண்ணாமலை முதலிக்கு எழுதிய கயிலாய நாதர் சதகம் எழுதினது துத்திபாளையம் வயித்தினாத செட்டி குமாரன் சங்க பிள்ளை செட்டி.

இந்த சுவடி யாதாமொருவன் எடுத்துக்கொண்டு போனவர் வாசித்து படித்துக்கொண்டு வந்து குடுக்கவும் கயிலாச நாதர் துணை.

சுப்பிரமணிய சுவாமி துணை. மீனாட்சியம்மன் துணை.

குறிப்பு :

இது, பிற சதங்களைப் போலவே நீதிகளைப் போதிக்கிறது. இதில் வேதியர் சிறப்பு, அரசர் சிறப்பு, வைசியர் சிறப்பு, வேளாளர் சிறப்பு, கவிஞர் பெருமை, இருந்து மிறந்தவர், மூதேவி இருப்பிடம், இதற்கிது நன்றெனல் முதலான பல அரிய தலைப்புகள் உள்ளன. பிழைகள் அதிகம்.



வரிசை எண் : 3901 சுவடி எண் : 1814

## சோதிடம்

ஏடுகள்: 95 கி. எண்ணிக்கை : 800 அளவு : $20 \times 2\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு: 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிட

நிலைமை : மிகப் பழுது முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

... ... ... ... ... ... ... சொன்னதிது
(விலை)கொள்ள உதவிப்படும்
........லே குடியிருக்க நன்று
...... ... கொள்ள மெத்த நன்று

முடிவு :

நாவிபிள்ளை கொள்ள நன்றோ தீதோ
நாவிபிள்ளை கொள்ள மிக நன்று
இத்தப் பெண்ணுக்கு பணுதி பண்ண நன்று
சந்தைகுத்தகை பண்ண நஷ்டம் வரும்
வீடுகூடங் கட்ட பெருக்க நன்று

குறிப்பு :

இது, கயறு போட்டுப் பலன் அறியும் சுவடி. இது, முன் சுவடி எண் 1808 போன்றது. 87-வது ஏட்டிலிருந்து தொடங்குகிறது. ஏடுகள் தலை தடுமாற்றம்.



வரிசை எண் : 3902 சுவடி எண் : 1815

## சிறுத் தொண்டர் நாடகம்

ஏடுகள் : 110 கி. எண்ணிக்கை : 6000 அளவு : $40 \times 3\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நாடகம்

நிலைமை : நல்ல நிலை(சிறிது பழுது) முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை
விருத்தம்

மாமணியாற்ற வணியும் வள்ளல்தனக்
கழுதூட்டி வளர்பேர் பெற்ற

மாமறை யோர்குலத்துதித்த பரஞ்சோதி
பண்டிதனாற் வளமை கூற

கோமலணி மலர்ப்பாதன் குமரகுரு
முன்பிறந்த குளக னாகி

முடிவு :

அப்படியே மகா பாக்கிய மய்யா கங்காதரக் கடவுளே
கங்கை அருகு புன்னை கரந்தைப்பூ மத்த மொடு
திங்களறா ஆத்தி திருச்சடை மேலே சூடுகின்றோய்
எங்கள் தனைக் கார்க்கயிவ் வுருவங் கொண்டோனே
சங்கரா நாயேன் நின்தாழ் சேர்ந்தேன் தற்பரனே !
முற்றிற்று

காலம் :

பிலவங்க வருஷம் அற்பிசை மாதம் 18-ந் தேதி ஆதிவாரம் அஸ்த்த நட்சேத்திரம் அமிர்த யோகமுங் கூடின சுபதினத்தில் அம்மாபேட்டை நடராசகுச்சிராயர் சுவடி எழுதி முடிந்தது.

குருபாதந்துணை

குறிப்பு :

இது எமது சுவடி எண் 616 D-645-ன் வேறாயது போல் தோன்றுகிறது. 63 நாயன் மார்களில் ஒருவரான சிறுத் தொண்ட நாயனாருடைய வரலாற்றினை நாடக ரூபமாக எழுதப்பட்டுளது ஒவ்வொரு சித்திரை அமாவசையன்று இந்த நாடகம் நடித்துக் காட்டப்படும். பல இடங்களில் உள்ள சிறுத்தொண்டர் மடங்களில் இந்நாடகம் குறிப்பிட்ட நாளில் நடைபெறும், 2,3, பத்திகளாக எழுதப்பட்டுள்ளன.

இதன் பின்னர் ஒரு ஏட்டில் காடவர் கோன் மகாராசாவின் வரலாற்று அகவல் எழுதப்பட்டது முற்றுப் பெறவில்லை.



வரிசை எண் : 3903 சுவடி எண் : 1816

## மந்திர சாத்திரம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 200 அளவு : $13 \times 3\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மந்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் நமோ பகவதே. சித்தராம்
செருமலையில் வொளிவாய்
தோணி தானும்
தண்டே பிசாசு களுமாயிரம்
ஆடிப்பாடி

முடிவு :

மஞ்சல் சுண்ணாம்பு கரைத்து வைத்து
அதில் 21 புஷ்பம் செபம் பண்ணிய்
போடவும். பிறகு அதிலிருந்து
அள்ளி 21 எழுதரம் செபம் பண்ணிப்
கீழே விடவும். (சக்கரம் உளது)

குறிப்பு :

இதில் சிலவகை மந்திரங்கள் உள்ளன.
மாரணம் செய்யக் கூடாது.
காரீயத்தகடுலே செய்யவும் என்ற குறிப் பொள்றுளது.



வரிசை எண் : 3904 சுவடி எண் : 1817-a

## கணபதி மந்திரம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை: 25 அளவு : $15 \times 3$ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மந்திரம்

நிலைமை . மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஓம் மகா கணபதி
ரங் உம் ஸ்ரீம் கெம்
கெம் மா முகனே
ஓங்கானேமு சுகத்தில்
வந்தருளுங் கணபதி

முடிவு :

துதிக்கய்யால் பிடித்துக் கொண்
டோடிவா சிவவிக்கினேஷ்பறா
நம ஓம் ஆதிபராபரா
குரிவீரு கோணை நிக்க விடமடம் அவ
இங்கே

குறிப்பு :

இதில், இரண்டுமூன்று வகை மந்திரங்கள் உள்ளன.
நடு ஏட்டில் 'பத்திரகாளி மூலமந்திரம்' என்பதில் பத்திரகாளி புள்ளியிட்டு (நீக்கிக) காணப்படுகிறது



வரிசை எண்: 3905 சுவடி எண்: 1817-b

## சூரிய நாராயண தோத்திரம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 100 அளவு : 15 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வீதிவிழி யாகாச மீதில்
பிரகாசமாய் மெஞ்ஞான பே.. ......
வெளியாகி ஒளியாகி
விந்து சுழிமுனை மீதில்

முடிவு :

பூரண விலாச வொழிவாகவே
சுயம்பு சோதிரத மீதேறி நீ
துலங்கு கதிர்மதி யெனும்
விளங்கு சிவசங்கரா
சூரிய நாராயண சுவாமியே !

முற்றும்.

குரு கிடாட்சம் நீடூழி வாழ்க !

குறிப்பு :

*இது, தமிழில் உள்ள சூரிய நமஸ்காரம்*



வரிசை எண் : 3906 சுவடி எண் : 1817-c

# திருநாமப் பத்து

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 100 அளவு : 15 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

ஆதிபரஞ் சோதியா யண்டபகி ரண்டமாய்
ஆதியாய் நின்ற நாம மடிமுடியு நடுவாக
அடியேன் மனங்களி க்கு
அன்புவைத் தாண்ட நாமம்

முடிவு :

ஓங்கார மாகவே திருநாம மாலையை
வுகந்துகொண் டருளும்
நமோ நாராயணாவென்று ரைப்பவர்க்
குன்மைதரு திருநாமமே — 10

கொச்சியைச் சேர்ந்த திருச்சூரில் காயானி யிருசை
செ. சுப்பராயர் மேல் சுவடி பார்த்து அப்பாவு
மலையாண்டி பிள்ளை கையெழுத்தாக எழுதினது.
முகிந்தது.

குறிப்பு :

நாராயணர் மீது பாடப்பட்ட தோத்திரமிது.



வரிசை எண் : 3907

சுவடி எண்: 1817-d

# அகஸ்த்தியர் தோத்திரம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 15×3 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூரணனே பதினாறு திங்கள் சேரும்
பொருந்திய அருக்கனார் திங்கட்குஞ்
செழுங்
காரணனே கருமுகில்போல் மேனி சேரும்
கருணைபெறு மட்டாச்சரங்க வந்து வாழும்

முடிவு :

நாயகனே யென்நாவி லிருக்க வாவா
நாள்தோறு முன்பாதம் துதிக்க வாவா.
ஆயனருள் துதித்தவனே கெருடன் மீதி
லன்புடனே ஏறிவந்து அருள்செய் வாயே —9

குறிப்பு :

தலைப்பு ஒன்றாக உளது. இது ராமர் மீது பாடப்பட்ட பெருமாள் தோத்திரமாக உளது.

இதன் பின்னர் ஒரு ஏடு இராமாயண செய்தியடங்கியதாக உளது.

வரிசை எண் : 3908 சுவடி எண் : 1817-e

## கோரக்கர் அஷ்ட கர்ம சூத்திரம்

ஏடுகள் : 41 கி. எண்ணிக்கை : 800 அளவு : 15×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : கோரக்கர் பொருள் : மருத்துவம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

ஆன் அரன் பாடின னூல்
அகத்தீசர் பார்த்து
அதிசயமென் றேயெடுத்து
கண்ணிலேதான் வைத்துப்பார்த்து
இனிபாடுகிறேன் அஷ்ட கர்மம்

முடிவு :

காருநீறறங் குருபதத்தை விளங்கினர்க்கு
தொழிலே கைக்கண்ட வித்தையிது
அஷ்டகற்மத் தொழில்தான்
ஊரிலுள்ள பெரி ...... க்குங் கொடுக்கலாம்
உற்ற சண்டாளருண்டு சாஷ்த்திரந்தான்
முற்றும். —105
வாலைதுணையாக வேணும்
சாமியே துணை.

குறிப்பு :

இதில், பலவித வித்தைகள் கூறப்பட்டுள்ளன



வரிசை எண் : 3909 சுவடி எண் : 1817-f

## ருது சாத்திரம்

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 150 அளவு : 15×3 செ.மீ

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஞாயறு வியாதி திங்கள் உத்தமம்
செவ்வாய் யுத்தம் புதன் பலனுண்டு
வியாழன் உத்தம் வெள்ளி உத்தமம்
சனி பல பொறது. ஆக வார பலன்

முடிவு :

கிழக்கு முகம் யிருக்கையில் கண்டால்
ஒரு ஆண்பிள்ளை பெறுவாள். எப்போது
வெள்ளை அழுக்கடைஞ்சு யிருப்பாள்
தெக்கு முகமானால் தன்னொத்த பெண்களுக்கு
உதவி செய்து வருவாள். மேற்கு முகமானால்
சுத்த முண்டா யிருப்பாள் வடமேற்கு ஆனால்
ரெண்டு...........

குறிப்பு :

இது, இன்ன நேரத்தில், இன்ன நாளில் சின்னதிசையில் ருதுவானால் இன்ன பலன் என்று கூறுகிறது.

பின் இரண்டு ஏடுகளில் மந்திரகள் உள்ளன.



வரிசை எண் : 3910 சுவடி எண் : 1818

## கெவுளி காதல்

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 300 அளவு : 12 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்
கெவுளிக்கும் தும்மலுக்கும் பார்க்கவும்
ஞாயிற்றுக் கிழமைக்கு:

ஞாயிற்றுக்கிழமை ... ...... கெவுளி சொன்னாலும்
தும்மினாலும் கிழக்கு முதற்கொண்டு அறுபது
நாழிகைக்கும் ஒண்ணாய்ப் பார்த்துச் சொல்கிறது.

முடிவு :

காரியமாகாது. துற்க்கங் காட்டும்
பூமியிலே புதனிருப்பின் நல்லயோசனை
வார்(த்தை) வரும்
இது சனிக்கிழமை பலன்
முற்றும்.
.........ட்டி கெவுளி காத...........

குறிப்பு :

இதில், பல்லி சொல்லுக் குப்பலனும், தும்மல் பலனும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 3911 சுவடி எண் : 1819

## பாரத நாடகம்

ஏடுகள் : 95 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 36×3 செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : வையாபுரிப்பாவலன் பொருள்
நாடகம் நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்
சீர்சிறந்த பாண்டவர்கள் அயிவர்களும்
தொரோபதையாள் தேவி கூட............
பார்சிறந்த ............ தனிலே
பதிமூன்று ஆண்டு சென்று பதிசேர்ந்து
தார்சிறந்த அரவானைப் பெலி(கொடு)த்து
பகை முடித்த

முடிவு

தேவர் முனிவோரும் வாழி சித்தர் வாழி
நல்ல புவிதனில் பிறந்த பிர்ம தேவன் வாழி
(யிதை) மொழிந்தோர் வாழி பதத்தோர் வாழி
நல்ல பாவாணன் வையாபுரி யெனும் பாவலன் வாழி

காலம் :

1892-ஆம் வருஷத்துக்குச் சரியான நவம்பர் மாதம் 16-ந் தேதிக்கி சரியான நந்தன வருஷம் கார்த்திகை மாதம் 3-ந் தேதி முடியப்பட்டது. வடு ... ... ... கத் தெருவிலிருக்கும் பட்டாணி வன்னியர் ம(கன்) ... ... ... ... யேடுவாடி துரோபதை ... ... ... ... ... ... மனக்கும் போது ... ... ... ... ...

குறிப்பு :

இதற்குத் தலைப்பு காணப்படவில்லை. முடிவிலும் இல்லை. 89-ஆம் ஏட்டில் வாழ்த்துக் கூறப்படுகிறது. பின்னர் காளி எனத் தலைப்பிட்டு 6 ஏடுகள் மேற்படி வரலாற்று நாடகமே தொடர்கிறது. 'அரவான் களப்பலி போலும்' இது.



வரிசை எண் : 3912 சுவடி எண் : 1820

## மன்மத நாடகம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 40×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நாடகம்

நிலை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

மலைதனில் தபங்கள் செய்த
மயேசுரன் தபச ழிக்க
சிலைமத ராசன் தென்றல் தே ..........
... .. ... .. ... ... ... ...
மலர்க்கணை ஐந்து மெய்த
மன்மதன் கதையைப் பாட
கலைமதி புனைந்த விசன் ... ... ...

முடிவு :

இதுவரையிலும் இந்தக் கிந்தையைக் கேட்டபேர்கள்
படித்தபேர்கள், பாடி ஆடின பேர்கள் எழுதிவைத்து
அர்ச்சித்துப் பூசைகள் செய்த பேர்கள்
புத்திர பவுத்திராதிகள் உடனே வாழ்ந்து அஷ்ட்ட பஷ்சுகள்

பொருந்தியிருந்து சரலோக சாமிப சாருப சாயுச்சிய
பதவிக்கு மேலான பதவியை சேர்வார்கள் யென்றவாறு
விருத்தம் ... ... ... ... ...

குறிப்பு :

இது தவத்திலிருந்த சிவபெருமானின் தவத்தைக் கலைக்கத் தேவர்கள் மன்மதனைக் கேட்க அதன்படி அவன் மலர்கணைகளால் ஈசன் தவத்தைக் கலைத்து, இறைவனின் கோபத்தால் சாம்பலான வரலாற்றைக் கூறுகிறது.

இதன் பின்னர் 2 ஏடுகள் பிற செய்திகளைச் கூறுகின்றன.



வரிசை எண் : 3913 சுவடி எண் : 1821

# பாரதம் — கிருஷ்ணன் தூதுச் சருக்கம் — உரையுடன்

ஏடுகள் : 70 கி. எண்ணிக்கை 3000 அளவு : 39 × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : வில்லிபுத்தூரார் பொருள் : இதிகாசம்
நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

நீடாழி யுலகத்து மறைநாலுடன் தென்று நிலை நிற்கவே
வாடாத தவர் வண்மை முனிராச ராசன் மகா பாரதஞ் செய்தனாள்
ஏடாக வடமேறு வெற்பாக வெண்கூ ரெழுத்தாணிதன்
கோடாக வெழு தம்பிரானைப் பணிந் தன்பு கூர்வா மரோ !

எ.து. நெடிய கடல் சூழ்ந்த பூலோகத்திலே வேத நாலுடனே
அஞ்சாம் வேதமெனப் பிரசித்தமாக நிலை நிக்க வேண்டி.

முடிவு :

எ.து. மகாபாரத மென்னப்பட்ட காவியத்தை வேத் வியாசர் சொல்ல விக்கினேஷ்ப ரெழுதும் பாடலிதைத் தமிழினா லாறாயிரம் விருத்தமாக வில்லிபுத்தூர் மறையோர் கோமான் ஆழ்வார் சொன்னாரென்றவாறு.-4
ஸ்ரீமன் நாராயனா சுவாமி பாதத் தாமரைக் கமலமே யென்று
நினைத்தால் மோட்சமுண்டு. தெண்டாயுத பாணி துணை.

காலம் :

காலயுத்தி வருஷம் வைகாசி மாதம் 17-ந் தேதி தானியப்பட்டியிலே யிருக்கும் கோவிந்தக் கோனான் குமாரன் முத்துக்கருப்பக் கோனான் கிஷ்ட்டனான் தூது மார்க்கம் யெழுதி நிறைவேறினது.

சம்பூரணம். இதை யாரா மொருவர் யெடுத்த பேர்கள் படிச்சுப் போட்டு குடுத்து விடவும்.

குறிப்பு :

இதிகாசங்களில் பாரதம் சிறப்புடையது. அதில் கிருஷ்ணன் தூது மிகச் சிறந்தது. வில்லி பாரதத்தின் இப்பகுதிக்கு உரை செய்தவர் யாரெனத் தெரியவில்லை. இதில் பிழைகள் மலிந்து கிடக்கின்றன.

கடைசி ஒரு ஏட்டில் வேறு செய்திகள் உள்ளன.



வரிசை எண் : 3914 சுவடி எண் : 1822-A

## எண்சுவடி வாய்பாடு

ஏடுகள் : 23 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 43 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கணிதம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஸ்ரீ ஓம் நம்ர்றாக. ருதுவர்ழக குருவேதுணை.

1 — 1 — 1 3 — 1 — 3
10 — 1 — 10 30 — 1 — 30
2 — 1 · 2 4 — 1 — 4
20 — 1 — 20 40 - 1 — 40

முடிவு :

அடி 30 க்கு நார்ழிகை — 29
அடி 31-க்கு நாழிகை — 30
இந்தப் படிக்கி நாழிகை பார்க்கவும்

காலம் :

ரக்தாட்சி வருஷசம் ஆவ ... ... ...
குட்டியனா பிள்ளை மகன் மாணிக்கம் எண்சுவடி எழுதி நிறை
வேறினது. சம்பூரணம். ஸ்ரீ ராம செயம். கணபதி துணை.
வேலுமயிலுந் துணை. சரஸ்பதியம்மன் துணை.
ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி துணை.

குறிப்பு :

இது, முற்காலத்தில் ஆரம்ப வகுப்புகளிலேயே கற்றுத் தரப்படுகிறது. இதில் முக்கிய பல செய்திகளும் வாய்பாடுகளும் சொல்லப்பட்டுள்ளன.

இரட்டை ஏடுகளாலானது.



வரிசை எண் : 3915 சுவடி எண் : 1822-B

# என் சுவடி வாய்பாடு

ஏடுகள் : 24 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 38 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கணிதம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை
1—1—1 3—1—3
10—1—10 30—1—30
2—1—2 4—1—4
20—1—20 40—1—40

முடிவு :

— — — — —
— — — — —
— — — — — ஆக கீழ்லோகம் —7.
சுதலா
நிதலா — — — —
தராதலா சரீர ம்
மகாதலா யோக ம்
பாதாளம் ஞான ம்
ஆக கைவினை —4.

குறிப்பு :

இது முன்பிரதி போன்றது. இதுவும் இரட்டை ஏடுகளே.



வரிசை எண் : 3916 சுவடி எண் : 1823

## கர்ன மகாராசன் சண்டை

ஏடுகள் : 110 கி. எண்ணிக்கை : 3500 அளவு : 46×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : புகழேந்திப் புலவர் பொருள் : கதை

நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

உ

சிவமயம்

புகழேந்திப்புலவர் திருவாய் மலர்ந்தருளிய கர்னமகாராசன் சண்டை. இஃது திருவெண்காடு ஆறுமுக சுவாமிகளால் பார்வையிடப்பட்டு திருவொற்றியூர் இருசப்ப முதலியார் குமாரர் பரசுராம முதலியாரது பரப்பிரம முத்திராச்சர சாலையிற் பதிப்பிக்கப்பட்டது ஸ்ரீராம செயம்.

நூல் விநாயகர் காப்பு

முந்தி முந்தி விநாயகனே முருகுழலாள் புத்திரனே
கந்தருக்கு முன்பிறந்த கணபதியே முன்னடவாய்
ஏடு தவறாமல் எழுத்தாணி சாயாமல்

முடிவு :

இப்பெருங் கதையை யுரைத்தவர் படித்தோர்
எழுதினோர் பொருள் விரித்திசைத்தோர்
செப்பரு மன்பாற் கேட்டுளோ ரிதன்பேர்
செப்பினோர் தீமையிற் றீர்ந்து
மெய்பெறுஞ்சிறப்பு மைந்தரும் வாழ்வும்
இசைந்த தீர்க்காயுளு முளராய்
ஒப்பருங் கதியி னிலைபெற விளங்கி
உம்பரும் புகழ வாழ்குவரே ! சிவமயம்

கர்னமகாராசன் சண்டை முற்றிற்று சாஸ்பதி துணை.

குறிப்பு :

இது, அச்சான நூலைச் சுவடியில் எழுதிவைத்தது. எழுத்துக்கள் வித்தியாசமாக உள்ளன ஏ என்ற எழுத்துக்கு என்றும் கூ என்ற எழுந்துக்கு என்றும் னை என்ற எழுத்துக்கு வன என்றும் எழுதப்பட்டுள்ளன.

போரில் கர்ணர் சண்டை செய்த வரலாற்றை அம்மானை பாணியில் கூறுவது.



வரிசை எண் : 3917 சுவடி எண் : 1824-a

## அறப்பளீசுர சதகம்

ஏடுகள் : 32 கி எண்ணிக்கை : 1000 அளவு : 44 × 2½ செ.மீ.

பக்கத்திற்கு : 4—5 வரிகள் ஆசிரியர் : அம்பலவாணக் கவிராயர் பொருள் : சதகம் நிலைமை: பழுது முழுமை : முற்றற்றதுது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி: ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

வெள்ளை வாரணப் பிள்ளை யார்பத
முள்ளு வரர்மனக் கள்ள மாருமே !

சந்தனப் பொதியத் தடவரைச் செந்தமிட்
பரம சாரியன் பதங்கள் சிரமேற் கொள்ளுதரே
ரிந்தமிட் பொருட் டே !

உம்பர்கோ னெம்பெருமான் னோங் கற்ப்பளீசுரன் மேற்
பைம்பொருள் சேருஞ் சதகம் பாடவே
அம்பு யோர்கள் ஆக்குந் துதிக்கை யுளான்
அம்புடையார்க் கிம்பருளிக் காக்கும்

துதிகையுளான் காப்பு

உணர் பிறப்பு
கடலுலகில் வாழு முயர்வகை தோறுஞ் செனியாது

முடிவு :

அத்தனே பைங்குவளை மாலையணி மார்பனாம்
அண்ணலே அருமை மதவேள
அனுதினமு மனதில் நினைதரு சதுர கிரிவளர்
அறப்ளீசுர தேவனே ! —79

குறிப்பு :

சதகம் 100 செய்யுட்கள். இதில் இடையிடையே ஏடுகள் இல்லை, எஞ்சிய செய்யுட்களுமில்லை. இது, கொல்லி மலை மீது எழுந்தருளியுள்ள அறப்பளீசுரர் மீது பாடப்பட்டதாகும்.



வரிசை எண் : 3918

சுவடி எண் : 1824-b

# ஆசிரிய நிகண்டு

ஏடுகள் : 21 கி. எண்ணிக்கை : 500 அளவு : $44 \times 2\frac{1}{2}$ செ.மீ. பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : ஊற்றங்கால் ஆண்டிப்புலவர் பொருள் நிகண்டு நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

நன்றாக குருவாழ்க குருவே துணை
கன்னியுமை பாலனைத் தெய்வானை வள்ளி பங்கனைச்
சேவற்கொடிக் + + + ஆண்டிப் புலவனே !

நூல்

முதலாவது தெய்வப் பெயர்த் தொகுதி
சிவன் பெயர்

சங்கரன் சம்பு சதாசிவன் உமாபதி தாணுவே
பூதநாதன் சந்திரசேகர நீலகண்ட னீமத்தாடி

முடிவு :

பீடுற நடக்கு மதி மறை கலையினாவினது
பெயர் குருவ வென்று கூறும்

பின்னுமோர் மதிதெரிந்திருகலையிராவினது
பெயர் சனி வாலி யாமே ! —41

முதலாவது தெய்வப் பெயர்த் தொகுதி முற்றும்
தெண்டாயுத பாணி துணை வயித்தியலிங்கந் துணை.

குருபாதமே துணையாகவும்
அயிலாண்டயீசுவரி பாதார விந்தமே துணை.

குறிப்பு :

இது, நமது மகால் பிறதிகண்டுகளின் ஒப்புமைகளுடன் முழுதும் அச்சிடப் பட்டுளது. 11—தொகுதிகளில் முதல் தொகுதி மட்டுமே உளது. இது எமது சுவடி எண் 919/D-1088 போன்றது.



வரிசை எண் : 3919 சுவடி எண் : 1825

## சுந்தரி அம்மானை

ஏடுகள் : 98 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 43½ × 2½ செ.மீ

பக்கத்திற்கு 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : அம்மானை

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நான்றக குருவாழ்க குருவே துணை

அம்புவியியல் சுந்தரி அம்மானை பாடுகுரேன்
இன்பமா யென்னாவில் யிருந்தருளும்
பைம்பொன் மணிசேரும் பாதத்தை யூன்றிநான்
சண்முகனார்க்கு முன்பிறந்த தற்பரனே கணபதி காப்புத்தானே!

நூல்

முந்தி முந்தி விநாயகனே முருகுள்வாழ் சரசுவதியே
கந்தனுக்கு முன்பிறந்த கணபதியே முன்னடவாய்

முடிவு :

ஆல்போல் தழைத்து அருகது போல் வேரூணி
மூங்கிபோல் சுத்தம் முசியாமல் வவர்ந்திருப்பார்
முப்பத்து முக்கோடி தேவர்களு மேவாழி
சந்திரருஞ் சூரியரும் தானவரு மேவாழி
ஆகாசவாணி பூமா தேவி தான் வாழி !

ஸ்ரீரெங்கநாயகர் துணை யுண்டாகவும்
சுப்பிரமணியர் துணையுண்டாகவும். பசுபதியீசுபரர்
துணையுண்டகவும். மாதா பிதா குருதெய்வம்.

காலம் :

ருத்ரோத்காரி வருஷம் மார்கழி மாதம் 3-ந் தேதி குமாரபாளையத்திலே .... க்கன் மகன் ரங்கமனாயக்கன் ஸ்ரீபுண்ணியகுமார.............. சுந்தரி யம்மானை யெழுதி முகிந்தது. சம்பூர்ணம்.

வெங்கிட்டரமண சுவாமி துணை யுண்டகாவும். ஸ்ரீ ... பெருமாள் துணை யுண்டாகவும். பொம்மதேவர் துணையாக.......... கன்னிமார் துணை யுண்டாகவும். வயிரப்பெருமாள் துணை...... ....

குறிப்பு :

இது, பாரதக்கதையில் வரும் மாயன் மகள் சுந்தரியை அருச்சுனன் மகன் அபிமன்யுவுக்குத் திருமண முடித்த கதையினைக் கூறுவது. பிழைகள் மலிவு. அம்மானைச் சந்தத்தில் பாடப்பட்டுளது.



வரிசை எண் : 3920 சுவடி எண் : 1826

# சுந்தரி அம்மானை

ஏடுகள் : 92 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 43 × 2½ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : அம்மானை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை
அம்புவியில்ச் சுந்தரி அம்மானை பாடுகுரேன்
× × × × × ×
கணபதி காப்புத் தானே !

நூல்

முந்தி விநயாகனே முருகுழலாள் சரஷ்பதியே
கந்தனுக்கு முன்பிறந்த கணபதியே முன்னடவாய்

முடிவு :

சந்திருருஞ் சூரியரும் தானவரு மேவாழி
ஆகாசவாணி பூமாதேவி தான்வாழி

பகபதியம்மன் துணையுண்டாக வேண்டியது
சறஷ்பதி துணை யுண்டாக வேண்டியது

பெருமாள் துணை யுண்டாகவும்
சிவமயம். ஸ்ரீராம ஜெயம்.

காலம் :

விளம்பி வருஷம் ஆவணி மாதம் 15-ந் தேதி திங்கட்கிழமையும் திதி திரையோதசியும் உத்திராட நட்சேத்திரமும் விருச்சிக லெக்கனமும் கூடிய சுபயோக சுபதினத்தில் தானியாபட்டியிலேயிருக்கும் கோ. முத்துக்கருப்பக் கோனானுக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய கோவிந்தன் சுந்தரி மாலை எழுதி முடிந்தது. சம்பூர்ணம். குருபாதமே துணையுண்டாகவும்.

குறிப்பு :

இது, முன்சுவடியின் மறு பிரதியாகும். இதிலும் பிழைகள் மலிந்துள்ளன



வரிசை எண் : 3921 சுவடி எண் : 1827

# இராசகோபாலர் மாலை

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 200 அளவு : 36½×3 செ மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

வேகமா நெரி சேரும் வினைகளும்
× × × × போற்றுவாம்

நூல்

தண்டமா மலரின் தேனை தனித்தனி வனத்தில் வாழும்
வண்டது அறியுமல்லால் வண்டுக மறிந்தி டாது
கண்டதுற் மகர்க்க ரான கசடற்கு நல்லோர் பொல்லாற்
றண்டது தெரியா தய்யா ராசகோ பால மாலே ! — 1

முடிவு :

சார்ந்த வானம்பெரியோ னென்றும் சாஷ்த்திர முளாப்பக் கேட்(டு)
மாந்தரில் துஷ்டன் தன்னை வல்லவ னென்ப தென்றோ ....
கூர்ந்தறி வாளர் சொல்லார் கொடியர்கள் சொல்லா ரென்றோ ...
நான்துணி வாகச் சொன்னேன் ராசகோ பால மாலே ! — 31

காலம :

ருத்ரோத்காரி வருஷம் பங்குனி 3-ந் தேதி சேலம் சில்லா திருச்சக்க . . , . . . நாலுக்கா ஐசி மிட்டாய் மௌியப்பளியிலே யிருக்கும் கோறக் குழ(ந்த)ப்பயன் மகன் றங்கசாமி என்பவனுட ராசகோபாலமாலை எழு(திமு)கிந்தது முற்றும் சம்பூரணம். சிவமயம்.

ஆண்டவர் லட்சிப்பார். ராமசாமி கையெழுத்து. எங்கள் குலதேவதையாகிய மாரக்கா . . . . . . ப்பாள். ராமசுவாமி லட்சிப்பார். விக்கினேசுபரன் துணையுண்டாகவும். சுப்பிரமணியர் லட்சிப்பார். சிவமயம். குருபாதந் துணை.

குறிப்பு :

இது, இராசகோபாலரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு நீதிகளைக் கூறுவது. ஏடுகள் தலைதடுமாற்றம்.



வரிசை எண் : 3922 சுவடி எண் : 1828

## இராச கோபாலர் மாலை

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 320 அளவு : 42 × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை. பொருள் : தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

நந்தன் மகன் மோதகத்தின் வரையில் வாழும்
ராஜகோ பாலனென்னும் மாலை தன்னை
விந்தையுடன் பூவுலகில் நீதிசாரம்
விபரமுட னடியேனும் விளப்பும் பாடல்
பந்து முலைத் தெய்வானை வள்ளி பங்கள
பாரமயி லேறிஒயிலப் பென வுனி மீரும்

கந்தனுக்கு முன்பிறந்த ஐங்கரத்தோன் சித்திக்
கணபதிதா ளிரு சரணங் காப்புத் தானே !

நூல்

தண்டமா மலரின் தேனை தனித்தனி வனத்தில் வாழும்
வண்டது அறியு மல்லால் மண்டுக மறிந்தி டாது.

முடிவு :

ராசகோ பாலமால் நாற்பது பத்து மூன்றும்
ஓசையாய்க் கேட்போர்க்கும் உகந்துட னெழுது வோர்க்கும்
நேசமாய்ப் படித்த பேர்க்கும் நிச்சய மிவர்க ளெல்லாம்
வாசவன் பதவி பெற்று வாழ்வுட னிருப்பார் தாமே ! —54

முகப்பு முன் ஏட்டில் : காளியாபட்டியிலே யிருக்கும் கோ. முத்துக்கருப்பக் கோனானுக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய ராமசாமி ராசகோபாலமாலை.
கடைசி ஏட்டில் : பத்துக்கால் மூன்று தலை பார்க்க மிக வாய்நாலும்

தித்திக்கக் கண்ணேழும் செப்பினோம் — யித்தியும்
ஓரிடத்தில் கண்டேன் ஓகோ ரெகுராமா
பாரிடத்தில் இக்கதையைப் பார்.

இந்தக் கதை நய விளம்பரம். கணபதி துணை. வாசிவா. சிவமயம்.

குறிப்பு :

இது, முன்னதைப் போன்றதெனினும் பாடல் வேறுபாடுகள் காணப்படுகின்றன. அதில் 31 செய்யுட்களும், இதில் 54 செய்யுட்களும் உள்ளன.

பிழைகள் அதிகம்.



வரிசை எண் : 3923 சுவடி எண் : 1829-a

## தனிப் பாடற்றிரட்டு

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 150 அளவு : 36½×2½ செ.மீ.
பக்கத்திற்கு: 4 வரிகள் ஆசிரியர் : புலர் பொருள் : தனிப் பாடல்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

(கணபதி) யென்றிடக் கலங்கும் வல்வினை
× + × ×
(கணபதி) யல்லதோர் கரும மில்லையே !

கொச்சகம்

நித்தம் உனைத்துதிக்க நீனிலத்தோர் கொண்டாட
பத்துலட்சம் கோடி தமிழ்ப்பாட வரம்நீ தாடா
அத்தன் அறுமுகவா அன்றுவள்ளி பங்காள
கர்த்தனே எங்கள் கதிர்காம வேலோனே.

முடிவு :

தகுமதனன் கணைக்கிரையாய் அயன் வைத்தானோ
சாமது விடியளவு யவன் பொருதா
யெனதுட லுச்சி கொள்ளுதே. —4

குறிப்பு :

இதில், கதிர்காம வேலவன் தோத்திரம், தேன்பாங்கு முதலியன உள்ளன.



வரிசை எண் : 3924 சுவடி எண் : 1829-b

## முத்துத் தாண்டவர் - பதம

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 200 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : முத்துத்தாண்டவர் பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆடிய தெப்படியோ — நடனம் நீ
ராடிய தெப்படியோ

அன்பறந் தேடிய மெய்ப்பொரு ளாகிய மேலைச் சிதம்பரத்தே யிணை
சேவடி தூக்கி நின்று — ஆடிய

முடிவு :

சொல்லத் தரிகிலா மோகமல பரிமளமங்கை
மருவு முயிரிள மங்கை
கருவூரில் வளர் மங்கை
கருணை வடிவுள்ள மங்கையே —7

குறிப்பு :

இது, அச்சாகியுளது. மிக அருமை பெருமை மிக்கப் பாடல்கள்.

வரிசை எண் : 3925 சுவடி எண் : 1829-c

## பழனியாண்டவர் பேரில் ஆனந்தக்களிப்பு

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

தன்ன தன தனதந்தனா னாதந்தனா
தந்தனா
கரிமுக னடியினைப் போற்றி நல்ல கலைமகள்
சரஷ்பதி பாதமே போற்றி
திரிபுர மெரி செய்தாய் போற்றி

முடிவு :

பழனி வெற்றி வேலாயுத சாமியும் வாழி
யெங்குள்ள தேவதையும் வாழ்த்தி
நல்லயிடும்பன் கடம்பன்
தெண்டாயுத வாழி. —11

பழனி ஆண்டவர் துணை

குறிப்பு :

இது, பழனி முருகன் பேரில் பாடப்பட்டதாகும் பிழைகள் உள்ளன.



வரிசை எண் : 3926 சுவடி எண் : 1829-d

## பெருமாள் பேரில் (தோத்திரம்)

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 150 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அஷ் செயப் பொருளாகும் உனது திருமந்திரம்
அஷ்டாட்சர ரூபம் ஆதிவேதத்தினால்
ஆழ்வார்களோதும் நாலாயிரப் பிரபந்தமும்
இஷ்சரமாகவே தாசானுதாசனுக் கினிதருளு

முடிவு :

......... பெற்றேன் நீலமேகச்
சுருபராகவா பொற்குஞ்சை
நீலமேகக் கடவுளே —11

வெங்கிடாசலபதி துணை.......

குறிப்பு :

இது. பொற்குஞ்சை? என்னும் ஊரில் எழுந்தருளியுள்ள நீலமேகப் பெருமாள் மீது பாடப்பட்டதாகும். நீலமேகக் கடவுளே ! என்று ஈற்றடி முடிகிறது.



வரிசை எண் : 3927 சுவடி எண் : 1787 e

# பழனிஆண்டவர் அபிஷேக மாலை

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 150 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சந்தனம் புனுகு சவ்வாது பன்னீர்
சதாநித்தம் ஆடுமுருகன்
சம்பங்கி மல்லிகை பிட்சியிருவாச்சியுஞ்
சம்பிரமாயணிந்த வடிவேல

முடிவு :

யெந்தனுட பங்கிலுறை கந்தா
அறுமுகவா வாழி யேழைபங்காளா வாழி
ஈராறு தோளனே பழனியங்கிரி நாட்டில்
யெ......... வாழி மிகவாழி தானே !

வெங்கிடாசலபதி துணை வேணும்

அகிலாண்ட யீசுபரி துணை யுண்டாக வேண்டியது.

குறிப்பு :

என்னென்ன அபிஷேகத்துக்கு என்னென்ன பலன் என்பதைக் கூறுவது.



வரிசை எண் : 3928 சுவடி எண் : 1829-f

# இளையபெருமாள் பேரில் அகவல்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 36½ × 2½ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதிவை குந்தா அச்சுதா னந்தா
நீதி முகுந்தா நினைத்தகோ விந்தா
தேவர்கள் தேவா திருப்பதி வரதா
பூதல மளந்தாய் பொன்மலை யானே

முடிவு :

ஆகு நன்று நன்றா காது
சாற்றினேன் மூன்றெனு மறணந் தானே !

அழகிய சொக்கனாத சுவாமி துணையாக
வேண்டியது.

குறிப்பு :

இளைய பெருமாளென்பது இலக்குவனைக் குறிக்கும். இராமருட னிணைந்த இலக்குவனைப் பாடியது போலும் இது.



வரிசை எண் : 3929 சுவடி எண் : 1829-g

# தான்தோன்றிப் பெருமாள் பேரில் பதம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 40 அளவு : 36½×2½ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நாராயணா வைகுந்தா முகுந்தா
அரிநாரணாராமா கோவிந்தா
மேறாகிய தான்தோன்றி மலையில் வளர்
விண்ணவர் புகழும் ஷத்திரி
வெங்கிடாசல தேவா

முடிவு :

மெய்யாகிய தெய்வமுநீ யெனதய்யா
யினியாகிலுமே கிருபை செய்வாய்
மதிசூதனனே திருமய்யாசீசே புசிழாகி
யண்ட நாராயணா வைகுந்தா முகுந்தா
அரிநானாராம கோவிந்தா !

வேணும் அகிலாண்ட யீசுபரி துணையாக வேண்டியது.

குறிப்பு:

இது, திருத்தான் தோன்றி என்னும் மலை மீது அமர்ந்துள்ள பெருமாள் மீது பாடப்பட்டது



வரிசை எண் : 3930 சுவடி எண் : 1829-h

# சொக்கர் பேரில் வெண்பா

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 50 அளவு : 36½×2½ செ.மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

புவிக்கு ளுனயடியாற் புந்தியர்போல் என்னுடைய
னாவிக்குள்நீ குடிகொண் டிடுவாய் — வாவிக்குள்
பூத்திருக்கும் செங்கமலப் பொன்னிலங்கு கூடவிலே
வீத்திருக்கும் சொக்கலிங்க மே ! — 1

முடிவு :

உற்றிருந்து நான் பார்த்து உனதொளிவைக் கண்டருளப்
பெற்றிருக்கும் காலம் பெறக்குமென்றாள் — சற்றும்
களங்கமில்லாத் தொண்டர்க்குத் தக்கதில் நாளும்
விளங்மெங்கள் சொக்கலிங்க மே ! — 10

குறிப்பு :

'சொக்க நாதா' என முடியும் சொக்கநாத வெண்பா போல இது சொக்கலிங்கமே என முடிகிறது இது மதுரையில் எழுந்தருளியுள்ள சொக்கலிங்கர் மீது பாடப்பட்டதாகும்.

பின் ஏட்டில் 2 தனிப்பாடல்கள் உள்ளன.



வரிசை எண் : 3931 சுவடி எண் : 1829-i

# சோதிடம்

ஏடுகள் : 3 கி எண்ணிக்கை : 150 அளவு : 36½ × 2½ செ.மீ.

க்கத்திற்கு: 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

எட்டுடன் மூன்று நாலும்
ஏகமாய் ஒன்றோ டஞ்சு
ஒன்பது தன் ஆறுங் யேழும் ரெண்டெனி
எழுதலாமே !

சக்கரம் பூமியிலே எழுதித் தொடச்சொல்லி
ஆலோசினை பார்க்கிற விபரத்துக்கு பாட்டு

முடிவு :

போயொரு வியாழன் வெள்ளி
போதவே மக்கட் பேறாம்
சனியெனைத் திரண்டால் ஆகில்
சாய்ந்திடும் மரணை ந் தரனே !

குறிப்பு :

இதில், கோடிப் புடவையுடுத்திக்க நாள், பெண்குறி அறிதல், வழி நடக்கப் பார்க்கிற விபரம் ஆகிய தலைப்புகள் உள்ளன. முதல் ஏட்டின் முகப்பு முறிந்துள்ளது.



ரிசை எண் : 3932 சுவடி எண் : 1829-j

# பெருமாள் பேரில் அகவல் பத்து

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 250 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறிபக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அன்றாதி மூலமெனும் ஆனைக் குதவுகைபோல்
குன்றால் மழைதடுத்த கோலம் போல
நன்றாய் திருவ ரெங்கம் மென்பவர்கள்
சிந்தை கலங்காமல் வருவ ரெங்கம்

முடிவு :

நீவந்து அஞ்சலென் றருள் செய் தருளி
யென்முன் தோன்றிநின் றுனிபதங் குடுத்து
கண்முன் நின்றென்னைக் காத்தருள் வாயே !

தீப்பாஞ்சியம்மன் துணை

குறிப்பு :

இது, திருவரங்கப் பெருமாள் மீது பாடப்பட்டதாகும்.



வரிசை எண் : 3933 சுவடி எண் : 1829-k

# பதங்கள்

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 500 அளவு : 36½ × 2½ செ.மீ
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: தோத்திர
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மாதே யெசோதையே கேளம்மா
—உன் மகன் சேதி

மாதே யெசோதை கேளம்மா
போதும் போது மிந்தச் சூது வாதும் தெரியாத
கிஷ்ட்ணான் வெகுச் சாது வென் றெண்ணுறாய்

முடிவு :

உன்னுடைய திருவடியில் வடுமை மொழிச்
சந்தோஷமாய்க் கொள்ளுவாய்.
தாயே அகிலாண்டவளே ஆவுயிரை யீன்றவளே
தாயே அகிலாண்ட உமையே !

வேணும் தீப்பாஞ்சி அம்மன் துணையுண்டாக வேணும்
மாதா பிதா குருதெய்வந்துணை.
சித்திரபுத்திர சுவாமி துணையாக வேணும்

குறிப்பு :

இதில், யசோதை கண்ணன் பதம், கோபிகை பதம், மகுட லிங்கேசுரர் பேரில் பதம், பேரின்ப பதம், பசுபதியார் பேரில் பதம், அகிலாண்டேசுவரி பேரில் பதம் ஆகியவை உள்ளன.



வரிசை எண் : 3934 சுவடி எண் : 1829-l

# கப்பல் பாட்டு

ஏடுகள் 6 கி. எண்ணிக்கை : 200 அளவு : 36½ × 2½ செ.மீ
பக்கத்திற்கு 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சிற்றிலக்கியம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை

ஏலேலோ ஏலேலோ
திருவானைக் காவல் நகர் செழிக்குஞ் செம்புலிங்கர்
பங்கில்வளர்
வரும் அகிலாண்ட யீசுவரிமேல் —அம்மம்மா
வளருங் கப்பல் தமிழுரைக்கத் தத்தையா.

முடிவு :

தங்காத மீதேறிய சிங்கமதில் வந்து
சீனிக்கப்பல் தனைத் தேவியும் பார்த்து
சிந்தைகளிகூற அதிசயங்களை மகிழ்ந்து
வானமது பூமி பதினாலுக்கும் தோத்திரம்
மங்கள வெங்கலப் பிரங்கி தீறுப்பா தீரு —அ.

ஏலேலே ஏலேலோ

அகிலாண்டயீசுபரி துணையுண்டாகவும் குருவே. துணை.
தீப்பாஞ்சி அம்மன் துணை உண்டாகவும்
சித்திர புத்திர சுவாமி துணையுண்டாகவும்
அழகிய சொக்கனாத சுவாமி துணை. சிவமயம்.

றிப்பு :

இது, காயக்கப்பல் போல, திருவானைக்கா அகிலாண்டேசுவரி மீது பாடப் பட்டதாகும். கப்பல் செலுத்துவோர் பாடும் சந்தத்தில் பாடப்பட்டது.



வரிசை எண் : 3935 சுவடி எண் : 1829-m

# ரெங்கனாத சுவாமி பேரில் ஊஞ்சல்

ஏடுகள் : 5 கி எண்ணிக்கை : 200 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சிற்றிலக்கியம்

நிலைமை : பழுது முழுமை முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

தார்சிறந்த முத்திலன்றால் கால்கள் நாட்டி
தரும்பவளக் கொடியதினால் தொடுங்கை சேர்த்து

வார்சிறந்த சந்தனத்தால் பலகை சேர்த்து
வரிசையு னாள்வார்கள் பணிந்து போற்றும்.

முடிவு :

திருவெள்ளரைப் புண்டரீகப் பெருமாள்வாழி
செல்வமுள மருவுரையும் அலமேல்மங்கை வாழி
வையகத்தோ ரனைவர்களும் மகிழ்ந்து வாழி
குருபாதம் புவியுள்ள குலமும் வாழி
குவலயந்தில் திரு ஊஞ்சல் படித்தோர் தானும் வாழி
சிறப்புடைய நம்பெருமாள் தானும் வாழி
ஸ்ரீ த்திரி ரெங்க நாயகியுா ராடி ஊஞ்சல் — 21.

தீப்பாஞ்சி அம்மன் முன்னின்று லெட்சிக்கவும்

குறிப்பு :

இது, சிற்றிலக்கியங்களுள் ஒன்றாகிய ஊஞ்சல் பாட்டாகும். திருவரங்கம் அரங்கநாதப் பெருமாளையும், அரங்கநாயகி யாரையும் அமர்த்தி ஊஞ்சலாட்டு வதாக அமைந்தன இப்பாடல்கள்.

—★★—★

வரிசை எண் : 3936 சுவடி எண் : 1829-n

# சோதிடத் திரட்டு

ஏடுகள் : 7    கி. எண்ணிக்கை : 250    அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள்    ஆசிரியர் : அறியக்கூடவில்லை    பொருள் : சோதிடம்
நிலைமை : பழுது    முழுமை · முற்றுமுளது    எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சூலம் பார்க்கிற விபரம்

மாசில்லா மணியணிந்த வடுகு நாதன்
வடகிழக்குத் தெற்குடனே வாய்வு மூலை
நேசமுடன் நேர்கிழக்கு தென்மேற் காக நிகா
வடக்குதென் கிழக்கு நேர் மேற்காக

முடிவு :

பவமுகிலும் அஞ்சாகில் ராசா வாவர்ன்
பாக்கியங்களுண்டாகு நாலு ரெண்டு

தவமுகிலு யொன்றாகாது சாற்றினேன்

மூன்றேழு மருணைந்தானே!

குறிப்பு :

இதில், சூலம்பார்க்கிற விபரம், நாழிகை பார்க்கிற விபரம், குளிகன் காலம், கரினாள், காகங் கரைதல், கெவுளி காதல், ஆந்தை காதலுக்குப் பாட்டு, எழுத்தாணி ராசி பார்க்கிற விபரம் ஆகியவை உள்ளன.



வரிசை எண் : 3937 சுவடி எண் : 1829-0

# வெங்கிடாசலபதி பேரில் நெடிய விருத்தம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 200 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

செம்பது முகையவேழு முத்துங் கொளுந்

தணற் தீபமும் வெழிறி வருகுது திங்களும்

பிரம்மாரி வெள்ளி உதையம் வருகுது திமிர்தனில்

முந்தெழியிது பம்பொனெச் சிலம்பது

முடிவு :

ஆதியே சேஷகிரி மாயவா

அச்சுதா பள்ளி யுணராய்

அலமேலு மங்கைவளர் திருவேங்கிடா சலா

அரிஅரி பள்ளியுணராய் —10.

குறிப்பு :

இது, திருவேங்கிடப் பெருமாள் மீது பாடிய பள்ளி யெழுச்சியாகும்.



வரிசை எண் : 3938 சுவடி எண் ; 1829-p

# அகிலாண்டேசுவரி பேரில் கழிநெடில்

ஏடுகள் 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : $36\frac{1}{2}\times2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தாயார் வயத்தினில் கெற்பந் தரித்தபின்
    தற்காத்து ரட்சித்தவளுநீ
தரணியில் பிறந்தபின் மதலை யெனவே
    அழுத சத்தங் கேட்டவளுநீ
ஆயும் மெனக்கினிய னோவுபிணி மத்ததும்
    அணுகாமல் காத்தவளுநீ
அஞ்சுவய தானபின் பள்ளிக் கூடத்திலே
    அரியதமிழ் தெரியவேணு மென்று

முடிவு :

பொற்சுட்டி யணிந்திடும் பொற்றாம னாக்கண்ணி
    பொற்காவை யிற்குள் வாழ்வே
பொன்னிநதி யிருபுறமும் புடைசூழ வாழ்கின்ற
    பூவை அகிலாண்டவள் உமையே ! —9

குறிப்பு :

இது, பூவைமாநகரில் எழுந்தருளியுள்ள அகிலாண்ட ஈசுவரிமீது பாடப்பட்ட கழிநெடில் விருத்தமாகும்.



வரிசை எண் : 3939 சுவடி எண் : 1829-q

# ரெங்கநாயகர் பேரில் விருத்தம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 200 அளவு : $36\frac{1}{2}\times2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருவிளங்கிய ராமரெகு நந்தகோ விந்த
சித்த லெட்சிமி வாசனே
திவீக பரிமள சுகந்த கஸ்த்தூரியணி
சீரங்க ரெங்கநாதா
அருள் விளங்கிய சங்குசக்க ராயுதப் பெருமை
ஆகின்ற பரமனாம்புசா
அச்சுதானந்த கருணாகரா மூவடி அளந்த
அரிவாசி தேவரா்

முடிவு :

ராமராம அரிகோவிந்த கோவிந்த
ரெகுநந்த வாசுதேவா
ரெங்கமே யரி ரெங்கமே வைகுண்ட
ரெங்க மேவிய ரெங்கமே ! — 10

ஆக விருத்தம் — 10.
ரெங்கநாயகர் பேரில் யெழுதி முடிந்தது முற்றும்.
சரஷ்பதி துணை

குறிப்பு :

இது, ரெங்க நாதர் பேரில் பாடப்பட்ட விருத்தப் பாடலாகும்.



வரிசை எண் : 3940 சுவடி எண் : 1829-r

# அருச்சுனன் தோத்திரம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 150 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வந்தவ ரிருந்து வள்ளலென் றவர்க்கு
மன்றதனில் தெளிந்திட உரைத்த
தொந்தமென் றாடுசுவாமியை யணிதின் னினைந்து
தோத்திரம் பத்துமே பதியும்

முடிவு :

உத்ததோர் உன்னுடனினவில்
உகந்தருள் சத்தில்ல தேனோ
சித்தனே யென்று தேவர்கள் காண
செப்பினாள் உமையவள் தானே ! —12

குறிப்பு :

இதில், அருச்சுனன் வரலாறு பேசப்படுகிறது.



வரிசை எண் : 3941 சுவடி எண் : 1829-s

# கெருடபகவான் பேரில் தோத்திரம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 150 அளவு : 36½ × 2¼ செ.மீ.
பக்கத்திற்கு : ૭ வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பூரணமே பதினாறு திங்கள் சேரும்
பொருந்தியே அருகன் பதினெட்டுஞ் சேரும்
காரணனே கருமுகில் போல்மேனி சேரும்
கருணைபெரும் அஷ்டாட்சரங் கலந்து வாழும்

முடிவு :

பழம்பொருளே சிகசோதி பாக்கியந் தாதா
பத்திமுத்தி செய்ய உன்பாதந் தாதா
அளவில்லா மெய்ப்பொருளே கெருடமீதில்
அன்புடனே யேறிவந்து அருள்செய் விரே ! —11
தீப்பாஞ்சியம்மன் துணையாகவும்

குறிப்பு :

இது, கருடன் பேரிலும், கருடனை வாகனமாகக் கொண்ட திருமால் மீதும் பாடப் பட்டதாகும்.



வரிசை எண் : 3942 சுவடி எண் : 1829 t

# மாரியாயி பேரில் விருத்தம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 150 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கார்மேவு கொன்றையும் கொன்றைச் சுருக்கிவணி
கனகமிகு கொப்பி யழகு
கஷ்த்தூரி நுதல் புருவ சிலவெள்ளைச் செவியணிய
கனகமலர் குமுளி நாசியும்

முடிவு :

அம்பிகை கிருபாகரி மனோன்மணி பாராசத்தி
அடரும் படர்சடைச்சி
அம்புபெறு வெள்ளியணை நகரமேவி வளர்கின்ற
ஆயிமக மாயி உமையே ! - 4

பிரசன்ன வெங்கிடாசலபதி துணையுண்டாக வேண்டியது
சிவசுத கணபதியே துணையாக வேண்டியது.

குறிப்பு :

இது, மாரியம்மன் பேரில் பாடப்பட்டதாகும். மாரியம்மனை மகமாயி என்று செல்லமாக அழைப்பர்.



வரிசை எண் : 3943 சுவடி எண் : 1829-u

# மீனாட்சி அம்மன் பேரில் ஊஞ்சல்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 150 அளவு : $6\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சிற்றிலக்கியம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

எழுகடலுங் கோபுரமும் பொன்னின் தூறும்
மிசை மருவு முனியை விட்டுச் சோலை தானும்
செழிவுடனே தான் பெருகு வைகையாறும்
சித்திவிநாயகருடைய செம்பொற் றேரும்

முடிவு :

துங்கநெடுங் கோபுரத்தில் கொடிகளாட
சோதிநிலைக் கண்ணாடி நிழல்கள் காட்ட
மங்களஞ்சேர் மதுரைதனில் மேவி வாழும்
மதுரை மீனாட்சி அம்மன் ஆடி ரூஞ்சல் ! — 8

வேணும் தீப்பாஞ்சி அம்மன் முன்னின்று லெட்சிக்க வேணும்

குறிப்பு :

இது, மதுரை மீனாட்சி அம்மனைப் புகழ்ந்து பாடப்பட்ட ஊசலாகும்.



வரிசை எண் : 3944 சுவடி எண் : 1829-V

# மீனாட்சி அம்மன் பேரில் விருத்தம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்.

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

எனக்கு அயன் விதிப்படியோ
பூருவத்தினஞ்செயல் தானோ யேதோ அம்மா
உனக்கடிமை யானபின்பு யேதுகுறை வந்தாலு
உனக்கே பாரம்.

முடிவு :

சஞ்சலமே சமுத்திரமாய் அலையதனில் துரும்பது போல்
தவித்தே னம்மா
கொஞ்சுகிளி மொழியணங்கே கஞ்சன் மலர்த்தானைக்
குலப்பெண் மாதே

வஞ்சியிடைத் திருவணங்க கே சொக்கர் பங்கில்
மீனாட்சி மதுரை வாழ்வே ! —5

அழகிய சொக்கநாத சுவாமிதுணை.

குறிப்பு :

இது, மதுரை மீனாட்சி அம்பிகை மீது பாடப்பட்ட விருத்தமாகும். பிழைகள் அதிகம்.



வரிசை எண்: 3945

சுவடி எண்: 1829-w

# காவேரியம்மன் பேரில் தோத்திரம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 36½ × 2½ செ.மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆரணப் பொருளே போற்றி
அலர்ந்த செந் திருவே போற்றி
பூரண மாதே போற்றி
புண்ணிய நதியே போற்றி
நாரணி விமலி போற்றி
நம்பினர்க் கமுர்தே போற்றி
காரண மாக வந்த —1
காவேரி அம்மாள் போற்றி !

முடிவு :

சகமதில் நதிக ளெல்லாம்
சிறந்திடும் பொன்னி னாத்தில்
அகமெனும் நோய்கள் தீர
அற்பிசை மாத மூழ்கி
யிகம் பெறக் கதியு முண்டு
யின்னிவைத் தவர்கள் மூழ்க்கக்
கனகவான் தேவராவர்
காவேரி அம்மாள் போற்றி ! — 11

குறிப்பு :

இது, காவிரி யாற்றின் பெருமையையும், அருமையையும், வளமையையும் போற்றி, போற்றி எனும் அருச்சனைத் தொடராலேயே பாடப்பட்டுளது.



வரிசை எண் : 3916 சுவடி எண் : 1829-x

# தனிப்பாடற் றிரட்டு

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு: 4 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள்: தனிப்பாடற் றிரட்டு

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

புலியைக் கொடுத்துப் பசுவை வாங்கிப்
புலியை மேயவிட்டு
புலியைப் பசுகின்ற காரணமோ
புலிபூண்ட மங்கை
புலியை யருத்துப் பலகாய மிட்டுத்
தன் புருஷனுக்கு
புலியைக் கரி சமைத்திட்டான்
அந்தக் காலத்திலொரு பூவையரே ! —1

முடிவு :

காமாயுதக் கன்னிக்கோபம் பொறா லெந்தன் கண்மலர் நீ
சீமான் கரத்தை துடக்கரி யென் சிகமே புகழும்
கோமான் மழுவுங் குருகுலறாயன் குமர வெற்பவில்
மாமாவின் காலல்லவோ யெந்தன் மலர்க் கரமே !

குறிப்பு :

இது, சிலேடைப் பாடல்களைக் கொண்டது. பொருள் எளிதில் விளங்காத செய்யுட்கள். பிழைகள் இருப்பினும் செய்யுட்கள் பொருள் பொதிந்தவை.



வரிசை எண் : 3947 சுவடி எண் : 1829-y

# சுப்பிரமணியர் பேரில் எட்டு வாரத்துக்கு கல்வித்துரை

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வையம் புகழும் கிருபாகரனெனு மவாள் பள்ளி
அய்யன் அமரர் சிறைமீட்ட சாமி அறுமுகன்மேல்
மெய்யனம் பதாகக்கிழமைக் கவி சொல்லயிம் மேதினியில்
கையைந்து முள்ள மதற்கழுத்தானையுங் கார்ப்பதுவே.

முடிவு :

காரான லிங்கங் கற்னாவதாரங் கனகலிங்கம்
சீரான லிங்கஞ் சிதம்பர யீஸ்பரர் சிறந்த லிங்கம்
பேரான லிங்கம் ெ ரியோர்கள் வயத்தில் பிறந்த லிங்கம்
தோராத லிங்கம் துளசிமகா ராசதுரை லிங்கமே ! —2

குறிப்பு :

இதில், 7 நாட்களுக்கும் பள்ளிப் பிள்ளைகட்காகப் பாடிய 7 பாடல்களும், 3-வது ஏட்டில் முன்புறம் மீனாட்சி மீது ஒரு பாட்டும், சொக்கலிங்கர் மீது ஒரு பாட்டும், பின்புறம் துளசி மகாராசதுரை மீது 2 பாடல்களும் உள்ளன. தலைப்பு எட்டு வாரத்துக்கும் என்றுளது.

இதில், குறிப்பிடப்படும் துளசி மகாராஜா, நம் அரண்மனை துளஜா மகாராஜாவா என்பது ஐயம்.



வரிசை எண் : 3948 சுவடி எண் : 1829-z

# காத்தடிச்ச விருத்தம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : பழனிவேல் பொருள் : தனிப்பாடல்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீர்மேவு கயிலாச கிரிமேவு கங்கையணி
　　திங்கள் சடை சாம்பு சிவனார்
திருவளரு கிடாட்சமது மகிமை யதினால்
　　வந்ததிகில்ப் பட்ட அதி செயந் தான்
சீரான பரிதாபி வருஷம் மீனமாதம்
　　தினம் பதினாறு தேதியில்க் செழு

முடிவு :

தருவளரு முத்தக்கற நகர்தனில்க் கங்கை குல
　　சண்முகனா ரீன்றெடுத்த தமியேனான்
பழனிவேல் குருபாதந் துணையென்று சாற்றினேன்
　　கவி வல்லோரே.
　　　　தீப்பாஞ்சம்மன் துணை. சிவமயம்
　　　　மாதாபிதா குருவே தெய்வம்.

குறிப்பு :

இது, பரிதாபி ஆண்டு. பங்குனி மாதம் 16-ஆம் தேதி ஏற்பட்ட புயற் காற்றினால் ஏற்பட்ட சேதங்கள் குறித்துப் பாடப்பட்டது.



வரிசை எண் : 3949　　　　　　　　சுவடி எண் : 1829-z-1

## வெண்பாக்கள்

ஏடுகள் : 6　　கி. எண்ணிக்கை : 200　　அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள்　ஆசிரியர் : ஔவை முதலானவர்கள்　பொருள் : தனிப்பாடல்

நிலைமை : பழுது　　முழுமை : முற்றுமுளது　　எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூண்டுக் குளமறுக்குள் பூங்காவி தானளித்த
ஆண்டவனெங் கேபோனா னன்னையென — நீண்ட
முள்ளுக்கு முனையிட்ட முதல்வ னிருக்குறான்
எள்ளுக்கு ளெண்ணைபோல் வள்ளல்.

முடிவு :

கட்டி அணைத்திடுவான் காமசலம் விட்டபின்பு
கிட்டஅடி வைக்காரைக் கிளி மொழியே — மட்டி

சாதியர்களைச் சேர்வதிலும் தனித்திருப்பது
உத்தமுமே.

குறிப்பு :

இதில், ஆதிக்கும், பகவனுக்கும் பிறந்த ஔவையார், கபிலர், வள்ளி, அதிகமான், உப்பை, உறுவை, வள்ளுவர் ஆகியவர்களைப் பெற்றவுடனே அவர்களின் தந்தையார் சொற்படியே அன்னை ஆங்காங்கே விட்டுச் செல்லும் போது அவர்கள் பாடிய பாடல்களும், பிற வெண்பாப்பாடல்களும் இடம் பெற்றுள்ளன. எழுதுவோரின் கவனக்குறைவால் ஏற்பட்ட பிழைகள் அதிகம் உள்ளன.



வரிசை எண் : 3950 சுவடி எண் : 1829-z-2

# சீட்டுக் கவி

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை · 100 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தானிப்பாடல்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

குருவுனுட சீசனுமாய்க் கொற்றவருந் தேவியும் போல
கூடி வாழ்ந்து
சருவினாள் முதலாகச் சாரையுட நாகம்போல்
தாமும் தாமும்
யிரவுபக லனுதினமும் யின்பம் பிரியானாய்
கனையின் வேறாக்கி
பிரியவிட்ட தெய்வமெந்தன் பெண்குலையுங்
கேளாதோ பிரமனே. — 1

முடிவு :

பெருமாளோ திருநாளோ நல்லதிருனாள் தேசத்தார்
போற்றும் பெருமாளோ நல்ல பெருமாள்
பெருமாளே பருந்நெடுத்துப் போதுதென்று பார்க்கவந்தேனிப்போது
குரங்கெடுத்துப் போகுதே கூகூ,

குறிப்பு :

தொடக்கத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி பிரமனைக் கேட்டுப் புலம்புவதாகவும், பின்னர் தனிப்பாடல்களும் உள்ளன.

பிழைகள் மலிந்து காணப்படுகின்றன.



வரிசை எண் : 3951 சுவடி எண் : 1829-z-3

# அருணாசலர் பேரில் வருகைப் பத்து

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : $36\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

நினைவாகி மூலம் நிலையாகி னேசம்
நிசரூப மான வடிவே
மனமான மாய்கை அதிலே விழுந்து
மதியுங்கலங்கி வெகுவாயி
யெனமோ டிருந்து வயல்னீதி லுள்ள
மிசைனாக மேவு விடுமுன்
மனவேக மான அருணாச லீசரவர்
வரவேணு மெந்த னருகே ! — 1.

முடிவு :

சூதாடுகின்ற சலசூத்தி ரங்கள்
சுளிவா யுணர்ந்த வுடலை
பாதாபிஷேக முடலோடி ருந்து
படுபாதி மோதி நடலம்
வேதா வணங்கும் பாதார விந்தம்
விமலானை நாம மறவேன்
வாதாடுகின்ற அருணாச லீசர்
வரவேணு மெந்த னருகே ! — 10

குறிப்பு :

தன் இறுதிக்காலத்தில் அருணாசல யீசுவரர் வரவேண்டும் என்று வேண்டப் படுவது

இதன், பின் இரண்டு ஏடுகளும் தனிப்பாடல்கள் எழுதப் பெற்றுள்ளன.

பிறகு, ஒரு ஏட்டில்: ஏகம்-வெகுதன புரோகிதம் எனத் தொடங்கும் சோதிடம் உளது

அதன்பின் வெண்பா (பிழை) எழுதிய ஏடொன்றுளது.



வரிசை எண் : 3952 சுவடி எண் : 1830

# மரியாதை ராமன் கதை 2-ஆவது

ஏடுகள் : 38 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 42½ × 4 செ.மீ

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை
தன் குழந்தையைக் கொன்று
சக்களத்திமேல் பழி போட்டது

தன்குமரற்கு மரியாதி ராம நெங்கிற பேரும்
நியாதிபதி ——— மும் கிடைத்த சமாசாரத்தை அவன்
தகப்பன் கேள்விப்பட்டு அவனிடத்திற்கு வந்து, ஓகோ
பிள்ளாய் என்ன காரியம் செய்தாய்

முடிவு :

உன்னுடைய உபரசினைக்கி யிராசசபை மெச்சும் படியான
விகடகவியாயிருக்கப்பட்டவர் என்று மறுத்துப்போய்
விட்டாள், அதுமுதல் விகடம் பண்ணுகுரதுலே வெகு
சமர்த்தநாகி ராயரிடத்திலே போய் சேர்ந்து ஆசனம்
பண்ணிக்கொண்டிருந்தான்.

இரண்டாவது யானைக்காலில் இடறலுக்குத் தப்பித்துக்கொண்டது.

குறிப்பு :

இது, மரியாதை ராமன் என்ற விகடன், ராயர் சபையில் வீற்றிருந்து பல அரிய செயல்களை நகைச்சுவையுடன் செய்த வரலாற்றைக் கூறுவது. முதல் அத்தியாயம், மூன்று முதலான அத்தியாயங்கள் இல்லை.



வரிசை எண் : 3953 சுவடி எண் : 1831

# நீதிசாரம் உரையுடன்

ஏடுகள்: 11 கி. எண்ணிக்கை : 400 அளவு : 42 × 2½ செ.மீ.

பக்கத்திற்கு: 6 வரிகள் ஆசிரியர் : மூக்கப்பன் பொருள் : நீதிநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

**தொடக்கம் :**

ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை.

பருதி மதியிலகும் பார்மிசையோர்க் கெல்லாம்
தருமநெறி நீதிமுறை சாற்றவே — உரைபுகன்ற
துங்கநெடு தந்தபொருள் சுந்தரப்பொன் செஞ்சடையிற்
கங்கைசுதன் தந்திமுகன் காப்பு.

சிவமயம்
ஸ்ரீராமசெயம்
நூல்

அனைத்துல கெங்குந் தானா யமரதன் தேவ னாகி
நினைத்தவ ருளத்தில் நித்தம் நேசமால் நெடுமால் பாதம்

**முடிவு :**

இதன் பொருள்: மாதா மரித்தால் வாய்க்கு ருசி நஷ்டம் பிதாமரித்தால் வித்தை நஷ்டம். சகோதரர் மரித்தால் சரீரத்தில் பாதி நஷ்டம். மனையாட்டி மரித்தால் சருவாங்கமும் நஷ்டம் என்றவாறு —31.

சிவமயம். ஸ்ரீராமசெயம். கணபதி துணையுண்டாகவும்

**காலம் :**

துர்முகி வருஷம் மாசி மாதம் 15—ஆம் தேதி வெள்ளிக்கிழமை பூராட நட்சேத்திரமும் கூடிய புண்ணியயோக புண்ணியதினத்தில் தாளியாபட்டியிலே யிருக்கும் கோவிந்தக் கோனானுக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய முத்துக் கருப்பக் கோனான் மகன் கோவிந்தக் கோனான் நீதிசாரம் எழுதி முகின்றது. சம்பூர்ணம். ஆயனார் திருவடிகளே சரணம், தீப்பாஞ்சம்மன் துணை உண்டாக வேண்டியது. பிரசன்ன வேங்கிடாசலபதி உண்டாக வேண்டியது. இந்தத் தெய்வமெல்லாம் என் பங்கிலிருந்து லட்சிக்க வேண்டியது.

குறிப்பு :

இதன் காப்புச் செய்யுள் தருமநெறி நீதியின் காப்புச் செய்யுள். சற்று மாறு பாட்டுடன் உளது நீதிசாரம் 100 பாடல்களை உடையது இதில் 31 பாடலுடன் 'முற்றும்' உளது. பாடவேறு பாடுகள், பிழைகள் உள்ளன. இது, எமது சுவடி எண் 891-a/D-1111 போன்றது.



வரிசை எண் : 3954 சுவடி எண் : 1832

# கணக்கதிகாரம்

ஏடுகள் : 55 கி. எண்ணிக்கை : 1100 அளவு : $36 \times 2\frac{1}{2}$ செ. மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : காரி நாயனார் பொருள் : கணிதம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை
இக்கணக்கி லொன்று மிடைகூறு வாராமல்
பொற்கணவன் பெற்ற பெருகளிறே—எக்கணக்கும்
நேரே விளங்கி நிகரன்றி நிற்கும் வண்ணம்
பார்மேல் விளங்கும் பார்

நூல்

சீர்படைத்த வுந்திச் செழுங்கமலத் தாயனை
பார்படைக்க வென்று படைத் தருளி

முடிவு :

விபரமாய் குறித் தெழுதினேன் தங்கமுத்து
மொழியா மெனக்கூர்ந்து கொண்டவழி தனிலே
கொண்டாடவே சமத்துண்டாகவே தின்று
கொண்டபேர்க்கு எதிரில்லை யே !

குறிப்பு :

கடைசி இரண்டேடுகள் தங்கமுத்து என்பவர் இயற்றியது போலும். முன்பகுதி எமது சுவடி எண் 734/D-1103 போன்றது. பாடவேறுபாடுகளும் பிழைகளும் மிகுந்து காணப்படுகின்றன.



வரிசை எண் : 3955 சுவடி எண் : 1833-a

# மகாவிந்தம் எனும் வைகுண்ட விருத்தம்

ஏடுகள் : 50 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 44×3 செ.மீ.

ப கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : தென்வீரையாம்பதியார் பொருள் : கதை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

வாரிகு ழூலகுதன்னில் மன்னுயிர் துதிக்க வேண்டி
சீரிய தமிழி னாலே தெரிந்துநா னம்மானை பாட
ஆரிய னனந்த நாமன் அச்சுதன் கமலக் கண்ணன்
பாரிய மேக வண்ணன் பச்சைமால் பதமே காப்பாம்

முடிவு :

வேதங்க மூர்த்தியைப் பஞ்சர தூதனை விண்ணுலகில்
ஆரங்கமாக அடிபணிந் தோனை அனுதினமுஞ்
சீரங்க ராமனை வயிகுண்ட மேவிய தேசிகனை
நேரங்கள் தோறும் நினைப்பார்க்கு வயிகுண்டம் நிச்சயமே

ஆக திருவிருத்தம் 186

காலம் :

(தொடக்கத்தில்) சார்வாரி வருஷம் பங்குனி மாதம் 30-ந் தேதி தாளியாபட்டியிலே யிருக்கும் கோவிந்தக் கோனான மகன் முத்துக் கருப்பக் கோனானுக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய கோவிந்தக் கோனான வையிகுந்தம் மென்னும் வைகுண்ட விருத்தம் எழுதத் தொடங்கியது.

(கடைசி ஏட்டில்)

பிலவ வருஷம் ஆடி மாதம் 1-ந் தேதி மயிந்த வாரமும் கூடிய சுபயோக சுபதினத்தில் தாளியாபட்டியிலே யிருக்கும் கோவிந்தக் கோனான் குமாரன் முத்துக் கருப்பக் கோனானுக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய கோவிந்தக் கோனான் மகாவிந்த மென்னும் வைகுண்ட விருத்தம் எழுதி நிறைவேறினது. முற்றும்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 1368/D-1577 போன்றது. இது வைகுண்ட அம்மானை

எனவும் கூறப்படும். ஆனால் இது விருத்தப்பாக்களாலானது. அம்மானை சந்தம் இல்லை.

இதன், பின் இரண்டு ஏடுகளில், வெள்ளைக் கலையுடுத்து முதலிய பாடல்களும். சிவமயம் முதலியனவும் உள்ளன.



வரிசை எண் : 3956 சுவடி எண் : 1833-b

# விவேக சிந்தாமணி

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 250 அளவு : 44×3 செ மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நீதிநூல்

நிலைமை: நல்ல நிலை முழுமை ; முற்றற்றது எழுதது : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

அல்லல் போம் வில்வனை போம் × × × கைதொழுதக்கால்

நூல்

ஆபத்துக் குதவாப் பிள்ளை அரும்பசிக் குதவா வன்னம்
தாபத்தைத் தீராத் தண்ணீர் தரித்திர மறியப் பெண்டீர்
கோபத்தை யடக்கா வேந்தன் குருமொழி கொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம் பயனில்லை யேழுந் தானே ! —1

முடிவு :

கழுதை காவெனக் கண்டுநின் றாடிய வலகை
தொழுது மீண்டுமக் கழுதையைத் துதிசெய் வதுதான்
பழுதிலா நமக்கார் நிகாரமெனப் பகரும்
முழுது மூடரை மூடர்கொண் டாடிய முறைபோல. —50

காலம் :

(தொடக்க ஏட்டில்)

துற்முகி வருஷம் தை மாதம் 10-ஆம் தேதி காளியாப்பட்டியி லிருக்கும் முத்துக்கருப்பக் கோணானுக்கு ஸ்ரீ புண்ணிய குமார னாகிய கோவிந்தன் விபேக சிந்தாமணி.

துற்முகி வருஷம் மாசிமாதம் 9-ந் தேதி சுக்கிரவாரமும் திதி துதி கையும் உத்திர நட்சேத்திரமும் கும்ப லெக்கினமும் கூடின புண்ணி

யோக புண்ணிய தினத்தில் தாளியாப்பட்டியிலே யிருக்கும் முத்துக் கருப்பக் கோனாருக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய கோவிந்தக் கோனான் விபேக சிந்தாமணி எழுதி முகிந்தது. சம்பூரணம்

குறிப்பு :

இடையிடையே ஏடுகள் இல்லை
பிழைகள் அதிகம்.

★—★—★

வரிசை எண் : 3957 சுவடி எண் : 1834

# அரிச்சந்திர புராணம் மாயனகாண்டம்

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 600 அளவு : 43×3 செ.மீ.

பக்கத்திற்கு: 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை

நிலைமை : நல்ல நிலை முழுமை முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவேதுணை

வல்லியும் மகனும் வந்த மறையவன் மனையிற் சேர்ந்து
சொல்லிய பணிக ளெல்லாம் சோர்வறச் செய்து பின்னும்
யெல்லியோர் சாம மென்ன யெழுந்திருந் தேவன் முற்றி
அல்லிருஞ் சாமம் சென்று வளித்தகூ ழுண்டு றங்கி

இதன் பொருள் : சந்திர மதியும் மகனும், அந்த விலைக்கு வாங்கின பிராமணன் வீட்டிலே போய்.

முடிவு :

ஆகையால் இந்தப் பிள்ளையை விரைவிலே போய்த் தகனஞ்
செய்வித்துப் பின்பு போகக் கடவே னென்று தனது புத்திரனை
யெடுத்து அழகான தோளின்மேலே சாய்த்துக் கொண்டு,
திருக்குமாரனைத் தூக்கமாட்டாமல் தடுமாறித் தளர்ந்த வளாகச்
சந்திரதய ராசனுடைய குமாரியானவள் மயானம் நோக்கிச்
சென்றாள் யென்றவாறு. — 33

காலம் :

(முதலேட்டில்)

சுபகிருது வருஷம் வைகாசி மாதம் 3-ந் தேதி சுக்கிர வாரமுங் கூடிய சுபயோக சுபதினத்தில் தாளியாபட்டியில் இருக்கும் கோ. முத்துக்கருப்பக் கோனானுக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய ராமசாமி அரிச்சந்திர புராணம் எழுதத் துடங்கினது.

சுப நபஷ்து

குறிப்பு :

இது, அரிச்சந்திரன் வரலாற்றில், சந்திரமதி, தனது இறந்த மகன் லோகிதாசனை, அந்தணர் வீட்டினின்றும் எடுத்துக் கொண்டுபோய் சுடலையில் எரிக்கச் சென்ற பகுதியைக் கூறுகிறது,

செய்யுளும் உரையுமாக உளது.



வரிசை எண் : 3958 சுவடி எண் : 1835

# நீதிசாரம் - உரையுடன்

ஏடுகள் : 23 கி எண்ணிக்கை : 500 அளவு : $42\frac{1}{2} \times 3$ செமீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : மூக்கப்பன் பொருள் : நீதிநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

பருதி மதியிலகும் பார்மிசையோர்க் கெல்லாம்
× × × × ×
கங்கைசுதன் தந்திமுகன் காப்பு

நூல்

அனைத்தல கெங்குந் தானா யமறதன் தேவனாகி
× × × ×
யினத்தினில் திரட்டி யுள்ள சாரம் நானியம்ப லுற்றேன்.

இதன் பொருள் : சருவலோக வீஷ்பரனுமாய்த் தேவர்களுக் கெல்லாந் தேவனாயிருந்துள்ள.

முடிவு :

சங்கைய ரொரு காலத்திற்ச் சுவந்திர மில்லைத் தானே !

இதன் பொருள் ஸ்ரீயானவளை வாலையிலே பிதா லட்சிப்பான். யெளவன காலத்திலே பத்தா லட்சிப்பன். மூப்பிலே தன் குமாரர்கள் லட்சிப்பார்கள். ஆதலால் ஸ்ரீகளுக்கு ஒருக்காலுஞ் சுதந்திர மில்லை யென்றவாறு, ... 41

கலாம :

சார்வரி வருஷம் கார்த்திகை மாதம் 7-ந் தேதி தாளியாப்பட்டியில் இருக்கும் கோ. முத்துக் கருப்பக் கோனனுக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய ராமசாமி நீதிசாரம் என்றறியவும்.

சிவமயம்.
ஸ்ரீ ராமசெயம்
கணபதி துணை உண்டாகவும்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 348/D-152, எண் 891-a/D-1111 போன்றது இதில் 41 செய்யுட்களே உரையுடன் உள்ளன.



வரிசை எண் : 3959 சுவடி எண் : 1836-a

# திருவேங்கட சதகம்

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 400 அளவு : 42½×3 செ.மீ. பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : நாராயண பாரதியார் பொருள் : நீதிநூல் - சதகம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக, குருவாழ்க குருவேதுணை.

காப்பு வெண்பா

செந்திரு வளர்மார்பன் திருவேங் கிடசதகம்
பைந்தமிழா(ல்) நீதிநெறி பாடவே—வந்தருளும்
கார்முகமுஞ் சங்கத்தான் கைத்தா மரையணிந்த
கார்முகமஞ் சங்கத்தான் காப்பு. — சிவமயம்

நூல்

பூமேவு திசைமுகனை யுந்திதனி லீன்றதும்
புனிதவே தாகம மெல்லாம்
புருஷோத் தமன்தெய்வ மென்பது பூசுரர்கள்
புரியு மந்திர கருமமுந்

முடிவு :

வருந்துயர முன்செய்த பாவவினை யென்பர்காண்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரத வேங்கட ராயனே ! — 36

காலம் :

ஏர்விளம்பி விருஷம் மார்கழி மாதம் 6-ந் தேதி சோமவாரமுங் கூடிய சுபயோக சுபதினத்தில் தாளியா பட்டியிலே யிருக்கும் கோ. முத்துக்கருப்பக் கோனானுக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய கோவிந்தன் திருவேங்கடசதகம் என்றறியவும். ஆயனார் திருவடிகளே சரணம்

குறிப்பு :

இது, "மணவாள நாராண சதகம்" எனவும் பேசப்படும். இதில், அந்தணர் சிறப்பு, அரசர் சிறப்பு, வணிகர் சிறப்பு, வேளாளர் சிறப்பு, புருஷராய்ப் பிறந்தோர் பெரும்பயன், நகரச்சிறப்பு, முதலான பல நீதிகள் கூப்பட்டுள்ளன.



வரிசை எண் : 3960 சுவடி எண் : 1836-b

## அறப்பளீசுர சதகம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 42½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு: 4 வரிகள் ஆசிரியர் : அம்பலவாணக்கவிராயர் பொருள் : நீதிநூல் சதகம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

உம்பர்கோ னெம்பெருமா னோங்கரப்ப ளீசுரர்மேல
பைம் பொருள்சே ரும் சதகம் பாடவே — அம்புவியோர்

ஆர்க்குந் துதிக்கையுளா னம்பு டையார்க் கிம்பருளி
காக்குந் துதிக்கையுளான் காப்பு. — சிவமயம்.

நூல்

கடலுலகில் வாழுமுயி ரெழுபிறப்பி னின்மிக்க
காட்சி பொருளாச னம்மா
கருதப் பிறத்தி லரிதழினு முயர்சாதியிற்
காப்பு வழி வருதலாரி வடிவ

முடிவு :

அடியவர்க் கமுதமே மோனைபூ பதிபெற்ற
வரியனெம தருமை மதவேள்
அனுதினமு மனதில் நினை தருசதுர கிரிவளர்
அறப்பளீசுர தேவனே !

காலம் :

முன் எண்ணில் குறிக்கப்பட்ட காலமே.

குறிப்பு :

இதுவும், நீதிகளைக் கூறுவது. கொல்லிமலையில் எழுக்தருளியுள்ள அறப்பளீசுரரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பட்டதாகும் – முழுமை இல்லை.



வரிசை எண் : 3961 சுவடி எண் : 1837

## வள்ளி நாடகம்

ஏடுகள் : 111 கி. எண்ணிக்கை : 3500 அளவு : 40 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : முத்துவீரப்பன் பொருள் : நாடகம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

மதுர ரச தமிழ் விளைந்து மலிந்த நாடு
வளம்பெறு தேன் கமுகுமலை நகரில் வாழ்ந்து
சதிர்பெருகு மந்திர சடாட்சரக் குமாரன்
சண்முகவேள் மணந்த வள்ளி சரிதை தன்னை

முடிவு :

துத்தியமாய்ப் பூவுலகுஞ் செழிக்க வாழி
தோகைதெய் வானைவள்ளி சுகமாய் வாழி
நித்திய மழைபொழிந்து உலகஞ் செழிக்க வாழி
நிரைகழுகாசலம் வாழி நிலைக்கத் தானே !
வள்ளி நாடகம் எழுதிமுடிந்தது. முற்றும்

காலம் :

(தொடக்கத்தில்) துன்மதி வருஷம் ஐப்பசிமாதம் 27-ந் தேதி ஞாயிற்றுக் கிழமை தினம் வள்ளி நாடகம் எழுதத்துடங்கினது

துன்மதி வருஷம் கார்த்திகை மாதம் 16-ந்தேதி வெள்ளிக்கிழமையும் கூடின சுபயோக சுபதினத்தில் தாளியாபட்டியிலிருக்கும் கோவிந்தக் கோனான் மகன் முத்துக்கருப்பன் வள்ளியமமை நாடகம் எழுதி முகிந்தது. சம்பூரணம், இந்தச் சுவடியை எடுத்த பேர்கள், படித்த பேர்கள் பிழைதிருத்திக் கொடுத்துவிடவும், ரெங்கனாதசாமி துணை உண்டாகவும். சரசுபதியம்மன் துணையுண்டாகவும். வெங்கிட்ட ரமணசுவாமி முன்னின்று ரட்சிக்கவும். ஆயனார் திருவடிகளே சரணம் குருவே துணை.

குறிப்பு :

இது, இசை நாடகம் எனக்குறிக்கப்பட்டுவது. முருகன் வள்ளி நாயகியை மணந்த வரலாற்றினை நாடகரூபமாகச் சித்தரிக்கிறது.



வரிசை எண் : 3962 சுவடி எண் : 183:

# நீதி சதகம்

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை: 600 அளவு : 44×2½ செ.மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : களக்காடு சாமிநாததேசிகர் பொருள் : நீதிநூல்–சதகம் முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

அமுதமொழி யானதிண்டி யம்பதி யங்கம்மன்
சமுக. நீதிசதகஞ் சாற்றவே — சுமுக நய
நன்னன்று கன்றுசிக் கண்ணனுக்கு முன் வருமுகா
கண்ணனிரு தாளிணையே காப்பு! குருவே நம.

நூல் தேவிரூப மலங்காரம்

கண்பரவு முதவுகுளங் முகனிறை மனை
கனிவுபெறு திலக நுதலுங்

முடிவு :

மக்களைப் பெற்றரவ சாலகி சங்கரன்
மனவியே திண்டி நகரில்
வளருமிரு ளப்பசன்னாசி மனமக லாதவா
அங்கா ளம்மனே! — 40

குறிப்பு :

இது, திண்டி நகரில் எழுந்தருளியுள்ள அங்காளம்மன் மீது பாடப்பட்டதாகும். சதகம் எனப்படும் 100 பாடல்கள் இல்லை. இதில், அமுர்தயோக மறிதல், சுபயோக மறிதல், அக்கினியோக மறிதல், கிழமைகட்கு அமுர்தயோக மறிதல், பயணத்திற்கு பொருந்தாக நட்சத்திரம் பகையறிதல் முதலான சோதிட சம்பந்தமானவை காணப் படுகின்றன.

இது. தேவிரூப அலங்காரம் எனப்படுகிறது.



வரிசை எண் : 3963 சுவடி எண் : 1839

## சித்திர புத்திரர் கதை

ஏடுகள் : 89 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 45×3 செ மீ
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

காராவின் தன்வயத்தில் கணக்கர் பிறந்தகதை
சீராக வேயுலகில் செப்பவே — நேராக
அத்திமுக னுத்தமனே தித்தம் நினைத்தமே
.............. ........... ...........

நூல்

அத்திமா முகனே போற்றி அத்தனே அரனே போற்றி
வெற்றி வேலவனே போற்றி மிக்க மாயவனே போற்றி

முடிவு :

தேவேந்திரலோகம் சிறப்பாக வாழ்ந்திருப்பீர்
தேன்மையிலும் பூவுலகில் தேசமெங்குந் தான் வாழ்க
என்றும பதினாறாய் யீஸ்பரனார் பதம்பெறுவர்
கந்தன் பதம் பெறுவர் கைலாசபதம் பெறுவீர்.

சிவமயம்

ஆயனார் திருவடிகளே சரணம். தீப்பாஞ்சம்மன் துணை.
பகவதியம்மன் துணை. பெருமாள் துணை வேணும்
வெங்கிட்ட ரமண சுவாமி பாதார விந்தம் உண்டாகவும்
இந்த தெய்வமெல்லாம் என்பங்கிலிருந்து லட்சிக்கவும்.

காலம் :

விகரரி வருஷம் சித்திரை மாதம் 22-ந் தேதி மந்தவாரமுங் கூடின சுபயோக சுபதினத்தில் தாளியாபட்டியிலிருக்கும். கோ. முத்துக்கருப்பக் கோனானுக்கு ஸ்ரீ புண்ணிய குமாரனாகிய கோவிந்தன் சித்திர புத்திரர் கதை எழுதி முடிந்தது சம்பூர்ணம் இந்தச் சுவடியை யாதாமொரு பெரியோர்கள் யெடுத்து வாசித்துப் பார்த்துப் பிழையிருந்தால், அடியேன் பேரில் தயவு வைத்துப் பிழை திருத்திக் கொடுக்கவும். வேணும். வெங்கிட்ட ரமணசுவாமி துணை:

குறிப்பு :

இது, சித்திர புத்திரனாருடைய பிறப்பு முதலான கதையினைக் கூறுவது. தேவ லோகத்து, மக்களுடைய நன்மை தீமை எழுதும் கணக்கராயிருந்து, மக்களுடைய பாவ புண்ணியங்களை யமதருமனிடம் எடுத்துக்கூற, இன்ன புண்ணியத்துக்கு இன்ன நல்ல பதவி என்றும் இன்ன பாவத்திற்கு இன்ன தண்டனை என்றும் கூறுவது.



வரிசை எண் : 3964 சுவடி எண் : 1840

# வேழமுகம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 120 அளவு : 40 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : ஔவையார் ? பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவ துணை.

வேழமுகத்து விநாயகனைத் தொழ
வாழ்வு மிகுந்து வரும்
வித்தை முகத்து விநாயகனைத் தொழ
புத்தி மிகுத்து வரும்
வெள்ளிக்கொம்பு விநாயகனைத் தொழ
வேண்டிய புத்தி வரும்
ஆனை முகத்து ஐங்கர னைத்தொழ
ஞான மிகுத்து வரும்

நூல்

சிந்தித் தொழுவது கணபதி செய செய
சீரிய வானைக் கண்ணே செய செய

முடிவு :

ஓடாதே ஒளியாதே யிட்டதே சோறும்
பெற்றதே கரியும் உண்டுதூங்கி வெள்ளியுதிக்கு முன்னே
பள்ளிக்கூடம் வந்து சேரப் பண்ணும்.

பள்ளிப்பிள்ளையார் சிந்து படித்து முகிந்தது

முற்றும்
ஸ்ரீராம செயம்

காலம் :

சித்திரர்த்தி வருஷம் தை மாதம் 5-ந் தேதி, தாளியாபட்
கோவிந்தக் கோனார் மகன் இராமசாமி வேழமுகம் எழுதினது சம்பூரணம்.

ஸ்ரீராம செயம். சிவமயம். கடவுள் துணை. ஸ்ரீமந் நாராயண மூர்த்தி துணையாகவும்'

குறிப்பு :

இது. எமது சுவடி எண் 390-a/D-907 போன்றது.



வரிசை எண் : 3965 சுவடி எண் : 1841

## எண்சுவடி - வாய்பாடு

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை : 500 அளவு : 42×3 செ.மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கணிதம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

முந்திரி லக்கம் முறையுடன் படிக்கத்
தந்தி முகத்தோன் தாளே சரண் — சிவயமயம்

கோவிந்தன் முந்திரி லக்கம்
சிவமயம்.

முடிவு :

பிருதிவி லிங்கம் திருக்கா ......
அப்பு லிங்கந் திருவானைக் காவல்
தேய்வு லிங்கந் திருவண்ணாமலை
வாய்வு லிங்கம் திருவடமருது
ஆகாச லிங்கம் சிதம்பரம்

ஆக பஞ்சலிங்க

குறிப்பு :

இது, இலக்க வாய்பாடு கூறுகிறது

இரட்டை ஏடுகளாக உள்ளன. சிறப்புத் தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 3966 சுவடி எண் : 1842

## சோதிடம்

ஏடுகள் : 84 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 28×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

யோக பலன்

விசுக்கம்பம் விசன முண்டா யிருப்பள்
பிருதி சந்தோஷ முண்டாகியிருப் பாள்
சௌபாக்கியம் தீர்க்காயுண் டாம்.
ஆயுள் மான. சகல சம்பத் துண்டாம்.

முடிவு :

ரோகணி ..... ம் சாலும்
சதயம் 1-ம் சாலும்
பூராட்டாதி முதல் சாலும்
மகம் 2-ம் சாலும்

குறிப்பு :

எழுத்துக்கள் தெரியவில்லை இதில், பலவிதமான சோதிடம் கூறப்பட்டுள்ளது, மாதபலம், நாள்பலன், நட்சத்திரபலன், யோகபலன் முதலானவை கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 3967 சுவடி எண் : 1843

## கோணங்கி மாலை

ஏடுகள் : 15 கி. எண்ணிக்கை : 800 அளவு : 34×3 செ மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

ஆனதொரு பூமிதன்னில் அன்புநிலை குறித்து
மனையிடமுந் தாவிலையும் நீயிருக்கப்பட்ட
யில்விடத்தில் அதிலே ஒரு கோளாறும்
சிந்தனையும் குழப்பங்கள் வருவதென்ன வென்று

முடிவு :

வெள்ளாமை விளைச்சலுண்டு. மழையுண்டு. நிற்ணய முதலர்வது நீதியோர் பொய்யாகுது. இது சிவகாறன் தொட்டு. தீத்தருக் —— வேனும்,

ஸ்ரீராமசெயம்: கோணங்கிமாலை முற்றும். தொண்டாயுதபாணி துணையிருக்க வேணும்.

காலம் :

தாருண வருஷம் ஆனி மாதம் 29-ந் தேதி நாமக்கல் பட்டக்கார செல்வஞ் செட்டியார் குமாரன் நஞ்சப்ப செட்டியாரிடத்தில் யித்த புத்தகம் கேட்டு வாங்கி கூடச்சேரி காரக்கு சுப்பராயர் குமாரன் ராமய்யன் எழுதிய புத்தகம். ஸ்ரீதிருப்பதி வெங்கிடாசலபதி சகாயம். ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி சகாயம்.

குறிப்பு :

இதில், சோதிட சம்பந்தப்பட்ட பல செய்திகள் கூறப்பட்டுள்ளன.

இதன் பின் 3 உதிரி ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 3968 சுவடி எண் : 1844-ஐ

# அர்த்த நாரீசுரர் மாலை

ஏடுகள் : 17 கி எண்ணிக்கை : 200 அளவு : 33 × 2 செ மீ·

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியகூடவில்லை பொருள் : தோத்திரம்-மாலை நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க

ரந்தர் தொழு முத்தி பாலிக்குஞ் செங்கோட் டர்த்தநாரீசுபர மாலைக்கு
வெத்திபுனை வரமருள் மதுரகவியி லினிதாகும் கரிமுகனைக் கைதொழுதாக்கால்

நூல்

(அரவணி) வேணி ஆதியே முதலே அத்தனே
அரகரா சிவனே
அரவணைத் துயில் மாயனுமே தேடி
அடிமுடி அறியொணா முதலே
அரவணை சுமந்த அம்புவி மீது
அடியரைக் காப்ப துன்கடனே
அரவணி மார்பா அண்ணலே கோதை
அர்த்த நாரீசுபர அரனே !

முடிவு :

......ல்லியீர் வதுவைசூடியே உலகில்
வாழ்ந்துபின் பரகதி யடைவார்

......... லியங் குழலாள் பாகனே வேணி
அர்த்தநா ரீசுபர அரனே ! — 32

காலம் :

அர்த்தநாரீசுபரர் மாலை. துந்துபி வருஷம் தைமாதம்
6-ந் தேதி சனிவரானாள் துவங்கினது.

சிவமயம்.

குறிப்பு :

இது, திருச்செங்கோட்டு மலை மீது எழுந்தருளியுள்ள அாத்தநகரீசுபரர் மீது பாடப்பட்டதாகும்.

'வாழ்ந்து பின் பரகதி அடைவர்' என்றதனால் இது முழுமை போலும்.



வரிசை எண் : 3969 சுவடி எண் : 1844-b

## காளியப்பதுரை மீது பாடல்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 200 அளவு : 33×2 செ.மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

......ஞ்சாட சற்குண பரம குரு தேசிகனே
நெஞ்சில் குடியிருக்கும் நீலகண்ட மேனியனே.
திருவே செனிக்கச் செயலே அருள் நீடு
உருவாய் உயிர்க்கும் உலகம் தனிலெங்கும்

முடிவு :

யெங்கும் பேறு பெற்ற குப்பிச்சி மைந்தன்
நாடு சமஸ்த்தானம் மெச்சும் நன்காளி பூபதியே
—— கவிக்காயிரம் பொன் கனகறற்றி (ன)மே கொடுத்து
அம்புவியில் கீர்த்தி பெற்ற அழகுகாளியண துரையே !
——ங்கலச்சிலவு புகழு மிகவே கொடுத்து
அம்புவியில் கீர்த்தி பெற்ற அழகு காளியண துரையே

குறிப்பு :

இது, ஒரு சமஸ்த்தான வள்ளலைப் புகழ்ந்து பாடியதாக அறிய முடிகிறது. இதன் பின்னர், தனிப்பாடல்கள் எழுதிய ஏடொன்றுளது.



வரிசை எண் : 3970 சுவடி எண் : 1845

## குசலவன் கதை

ஏடுகள் : 89 கி. எண்ணிக்கை : 4000 அளவு : 36×3 செ.மீ

பக்கத்திற்கு: 6 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள்: கதை

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி: ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

சீதாங் கனியின்ற செல்வ னெனுமா லவமேல்
நாதாக்கன் செந்தமிழை நான்பாட ...........
வேதாந்த துதிக்கி யலர் சகியே துணிந்துடல்
வதைத்திடும்க் கதிக்கன்ற முகக்கடவுள் காப்பு.

நூல்

சீரான செந்தமிழால் நன்றாலாய்ந்து
செப்புவர் முனிக்கதையைச் சேயன் பாட

முடிவு :

அந்தணர் வேதம் வாழி அரசர் செங்கோலும் வாழி
செந்தமி ழுரைத்தோர் வாழி செவிதனில் கேட்டோர் வாழி
விந்தைசேர் சனங்கள் வாழி மீரப்பன் மினம் வாழி
சந்திராத்தம் போலே தரணியில் வாழி தானே ! — 388

குறிப்பு :

இது, கானகத்தில் சீதாப்பிரட்டியார் ஈன்றெடுத்த லவனெனும், குழந்தையைக் காணது வியந்த முனிவரால் தருப்பையில் உண்டாக்கப்பட்ட குசனது மான கதையைக் கூறுவது.

வரிசை எண் : 3971 சுவடி எண் : 1846

## சர்ப்ப சாத்திரம்

ஏடுகள் : 39 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 32×2½ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க

தந்தையாவானுஞ் சாரதியங்காவானும் ........... குரு.
எ.து. சருவமயமும் குருமய மென்ற வாறு.

சர்ப்பசாஸ்த்திர விதி பிறப்பு குவா வடிவு
குவாகன்பேர் பூர்வதலம் நஞ்சு பிறகும் இடம்
சாத்திரம்

முடிவு :

ஆடை தோரார் தாரோடியடங்கி பூட்டு ————
ப்பாண்டவர் மாத்திலுச்சிப் பயன்படு பிசினுந்த ————
எ.து. அய்விரலி வேர் வில்வவேர் கம்பிப்
பிசினுங்கூ————

குறிப்பு :

இது, பாம்புகளின், சாதி, இலக்கணம், நஞ்சுபிறக்கும் இடம், வகை முதலான வற்றைக் கூறுகிறது.



வரிசை எண் : 3972 சுவடி எண் : 1847-a

## கந்தரனு பூதி

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 150 அளவு : 19×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அருணகிரி நாதர் பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம்

நெஞ்சக் கனகல்லும் நிகழ்ந்திடவே
தஞ்சத் தருள் சண்முக னுக்கியல்சேர்
செஞ்சொற் புனைமாலை சிறந்தருளப்
பஞ்சக்கற வானை பதம் பணிவாம்.

முடிவு :

தூசா மணியும் புனைவார்
நேசா முருகா நினதான் தருவாய்
லாசா ரமிலேன் னறிவுற் றருள்ப
பேசா வனுபூதி பிறந்ததுவே. —51.

தெண்டாயுத பாணியார் பாதமே
துணை யென்றறியவும்.

குறிப்பு :

இது, அச்சாகியுளது. பாடல்கள் எல்லாம் பிழைபட உள்ளன.



வரிசை எண் : 3973 சுவடி எண் : 1847-b

## கந்தர் சஷ்டி கவசம்

ஏடுகள்: 6 கி. எண்ணிக்கை : 100 அளவு : 19×3 செ.மீ
பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர் : தேவராயன் பொருள் : தோத்திரம்
நிலைமை : பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் அகவல்

சஷ்ட்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்ட்டர்க் குதவிய செங்கதிர் வேலன்
பாத மிரண்டும் பணிமணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட

உயர்கிரிக் கனகச் சபைக்கொரு அரசே
மயில்நட மிடுவோர் மலரடி சரணம்.

அருமுக னென்வினை அரும்பயம் பிணி னோங்
வருமைகள் கலிடும் வாழ்வுகள் மிகவாம்ங்
குறமகள் மணமருள் குகனிரு தாளைப்
பெருமவர் பழனா புரியெழுந் தாரே !

திருச்சிற்றம்பலம்.

ஆருதல் வேருனை அடியவ னோத
கூற்றி தாகிய குமர குருபரன்
தெரிய பழனி சிற்சிறி வேலவா
யேரிய மயிலோர்க் கெதிரொரு வரில்லையே !

குறிப்பு :

இது, அச்சாகியுளது. அச்சுப்பிரதிக்கும் இதற்கும் வேறுபாடு மிகுந்துள்ளது. பிழைகள் மலிவு.



வரிசை எண் : 3974 சுவடி எண் : 1847-c

## சத்துரு சங்காரத் திருப்புகழ் அலங்காரம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 150 அளவு : 19 × 3 செ.மீ

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

ஓம் அரகர நமசிவாய ஆனந்த ரூபினாய
ஆதிகேசனாய ஆதியுமை கேசனாய
ஆதிபுவனாய அமராயி டமராயி
டமடஸ்திரிசூலி டமடரானந்தி

முடிவு :

சிவானந்தனே சித்தனே அத்தனே
நீலமயிலேசனே சித்தனே அத்தனே

சூரசங்காரனே அகில புவனந்தொழு
ஆதி சோதியே ஆறுமுகப் — பெருமானே.

குருபாதமே துணை.

நவகோடி சித்தாதிகள் பாதார விந்தமே துணை.
இது சத்துரு சங்காரத் திருப்புகழலங்காரம்
எழுதி முடிந்தது

குறிப்பு :

இது, பகைவர்களை வெல்வதற்காகத் துதிக்கப்படும் பாடலாகும். இதன்பின் தனிப்பாடல்கள் எழுதிய இரண்டு ஏடுகள்உள்ளன.



வரிசை எண் : 3975

சுவடி எண் : 1847-d

## மந்திர சாத்திரம்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 150 அளவு : 19×3 செ.மீ. பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மந்திர-சாத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆதியின்ற சடாட்சரத்தை
அறிய மாட்டார்
அஞ்செழுத்துக் காற்றாது குருதியாச்சு
நீதியென்ற சகாரமடா ஆதியந்தம்
நினைத்த பொருளமைத்து வரும ரகாரத்தாலே

முடிவு :

ஓம் ஆம் ஊம் ஐயும் கிலியும்
சௌவும் ஓம் சாமளா தேவி
சாம்பவி யவ்வும்
ஓம் சிவ சங்கரி. நசி மசி.

குறிப்பு :

இதில், பலவிதமான மந்திரங்கள் உள்ளன. கடைசியில் ஒரு ஏட்டில் ஏதோ ஒரு கவசம் எழுதப்பட்டுளது.



வரிசை எண் : 3976 சுவடி எண் : 1848-a

# நீதிநூற்றிரட்டு உரையுடன்

ஏடுகள் : 66 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 43×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : நீதிநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை சரஸ்பதி துணை

கணபதியென்றிடக் கலங்கும் வல்வினை————கருமமில்லையே.

எ.து. ஒகு தரம் கணபதியென்று சொன்னால் வினையோடிப் போகும்

இரண்டுதரம் கணபதி என்று சொன்னால் எமனுங்கை தொழுது ஒடிப்போவான்

மூன்று தரம் கணபதி என்று சொன்னால் சகலரோக பாவங்களும் ஒடிப்போகும்

நாலு தரம் கணபதி யென்று சொன்னால் இருபத்தேழு தலைமுறையிலே

செய்த பாவ மெல்லாமோடிப் போகுமென்றவாறு

முடிவு :

உருகவே மனசு தேத்தி உரிமையைக் காட்டி மீண்டு
மருருளுங் குருவைப் போற்றி பரந்துபோய்ப் பாரை மீதில்
பருவைதனம் பசியை யாத்தும் பனமது போலத் தானே !

கணபதி துணை

குறிப்பு :

இதில், திரிகடுகம், நாலடியார், ஔவையார் பாடல்கள் முதலான பல நூல்கள் உரையுடன் உள்ளன.



வரிசை எண் : 3977 சுவடி எண் : 1848-b

# அரங்கேச வெண்பா

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 400 அளவு : 43 × 3 செ.மீ

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : சாந்த கவிராயர் பொருள் : நீதிநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீர்கொண்ட காவேரி தென்னரங்கத் தெம்பிரான்
பார்கொண்ட தாளைப் பரவியே—யேர் கொண்ட
ஓங்கு புகழ் வள்ளுவனார் ஓர்குறளைச் சொன்ன கம்பத்தே
மடங்கலத் தோன்றுலா லன்பருளத் தின்னமுர்தமாகு – மிரங்கேசா
மன் னு மகாமுதல ளெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

எ து. அகரமுதல் பதினெட்டெழுத்தும்

முடிவு :

சேனை பிலத்துடனே வந்த சத்துருக்களையும் வெட்டித்
தாங்களும் மடிந்து அயிவரும் ராச்சியபாரம் நிலை நிறுத்திக்
குடுத்தா ராதலால் யாவருக்கும் நல்ல வஷணஞ் சொல்ல -
வேணுமென் றவாறு.

சிவமயம்.
வெங்கிட்ட ரமண சுவாமி துணை.

குறிப்பு :

அரங்கேசனைப் பாட்டுடைத் தலைனாக்கித் திருக்குறளை பின்பாதியாகவும், முன்பாதி வேறு விளக்கமாகவும் வெண்பாயாப்பில் பாடப்பட்டதாகுமிது.



வரிசை எண் : 3978 சுவடி எண் : 1848-c

# உவமான சங்கிரகம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 43 × 3 செ மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : இலக்கணம்

நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சோறுங் குழலும் வளைனானுந் துயருமட
லூறுந் தொழிலுமோ வதிகூர் பசலையு மோடரிக்கண்
நீருங் கிளியும் பருமணற் கூடலு நிகன்றரத்து
மூருந் தனியு மரையோன் நெஞ்சமு முண்டென்பாரே !

முடிவு :

தொடை யிலஞ்சி மஞ்ச ளினஞ் சோலை
படைவீடு படைமங்கையர் கழகம் பாளை
யிடுகவரி காஞ்சி மல்லிகை நங்காரிகையீர்
மாறனுக்கு வாளா மோலைப் பூவுமால். —8

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 797-k/D-1472 போன்றதெனினும் இது வெண்பா யாப்பில் இல்லை. பிழைகள் மலிவு.

இதுவும், புகழேந்திப் புலவரா, திருவேங்கடய்யரா என்பது விளங்கவில்லை.



வரிசை எண் : 3979 சுவடி எண் : 1848-d

# வெண்பா பாட்டியல்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 50 அளவு : 43 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : குணவீர பண்டிதர் பொருள் : இலக்கணம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை
இலக்கணம்

மதிகொண்ட முக்குடைக்கீழ் வாமன் மலற்றா
டுதிகொண்டு நாளுந் தொழுது—நுதிகொண்ட
பல்கதிர்வேர்க் கண்ணுதலாய் பாட்டியலைக் கட்டுரைப்பன்
றொல்லுலகில் மீதே தொகுத்து.

முடிவு :

பேசு முயரடைவே நான்காரல் பின்னைந்து
மாசில்பூ றாடமாம் மற்றையவை—யாசிலாப்

பேறுத்தி றாடமா யென்று பெரிதுணர்ந் தோர்
பாரித்தார் நாவின் பரிசு. —12

குறிப்பு :

இதில், பாட வேறுபாடுகளும், பிழைகளும் உள்ளன.

இது, எமது சுவடி எண் 646/D-102 போன்றது. பிற செய்திகளை ஆண்டு காண்க. இதில் மூலம் மட்டுமே உளது.



வரிசை எண் : 3980 சுவடி எண் : 1849

# திருப்புகழ்

ஏடுகள் : 70 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 36×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள் : தோத்திரம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க

எல்லாரும் நீறிட்டிளைஞரே கேளீர் சொற்
கல்லெல்லா மாணிக்கக் கல்லாமோ—பொல்லாச்
கருப்பழி கேட்குமோ காண மயில்வீரன்
திருப்புகழ் கேட்குஞ் செவி. குருபாதந் துணை.

நூல்

கைத்தலம் நிறையவே முப்பழ மொடுபொறி
கப்பய கரிமுக னடிபேணி
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவர்
கற்பக மெனவினைக் கடிதேகும்

முடிவு :

சுபானமுறு ஞானந் தபோதனர்கள் சேரும்
சுவாமி மலைவாழும் பெருமாளே ! —106
முலைபுளகமெழ வதிலகை மருவு சரிவளை கொஞ்ச
முகிலளக வகில் பொங்க வமுதா..................

காலம் :

இல்லை. பழனியப்பன் திருப்புகழ்
எடுத்தவன் குடுக்கவும்.

குறிபபு :

இதில், பாட வேறுபாடுகளும், பிழைகளும் மலிந்துள்ளன.



வரிசை எண் : 3981 சுவடி எண் : 1850

# திருப்புகழ்

ஏடுகள் : 73 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 38×3 செ மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள் : தோத்திரம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க

எல்லாருஞ் ஞானத் திளைஞ்ஞரே கேளீர சொல்க்
× × × × ×
திருப்புகழைக் கேழ்க்குஞ் செவி.

நூல்

கைத்தல நிறையவே ழுப்பழு மொர்டுபொறி
கப்பிய கரிமுகன் ... ... ... ... ...

முடிவு :

அறுகுநுனி யனை பனி சிறிய துளி
பெருகியொரு வாக மாகியே
வால ரூப்மாய்
அறாமதலை குதலைமொழி தனிலுருகி
அவருடைய தாதையாய் மாயமோகமாம்
அருமையினி அருமையிடமொழு மொழின
உடல்வழா ... ... ... ல் ரூபமாய்
அவரொரு பெரியோறாய் ..............

குறிப்பு :

இது, முன்பிரதி போன்றது.



வரிசை எண் : 3982 சுவடி எண் : 1851

## மாந்திரீகம்

ஏடுகள் : 22 கி. எண்ணிக்கை : 300 அளவு : 25 × 3 செ.மீ

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மந்திரம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஏதிராளி தடத்தில்.........

கிரணத்தினடு கிர ... .. ... வெப்ப மறத் துருப்போய்
அடியில்தண்டு வேண்டிக்கைரண்டு

முடிவு :

பிடாரியும் யோடிக் கொலைக்கிற
நாயியும் கத்தும் ..................

குறிப்பு :

இதில், பலவித மந்திரங்கள் சக்கரத்துடன் உள்ளன,



வரிசை எண் : 39 3 சுவடி எண் : 1852

## சடாட்சர வந்தாதி

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை : 300 அளவு : $17\frac{1}{2} \times 2\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : அந்தாதி

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

தவமாங் குமரன் சடாட்சர அந்தாதி தன்னை
தவமா வென்னெஞ்சில் நாட்டுதற்கு — உவமையில்லா
கவனத்தான் பவனத்தான் கார்முகத்தான் றேடிய
கவனத்தான் மாமுகத்தான் காப்பு.

நூல்

பொன்கொண்ட நீபத் தொடைமார்பு ஞானப் பொருளமரர்
மன்கொண்ட செங்கை வடிவேலுஞ் சோதி மகுடமுடி

முடிவு :

...... தேவர் சத்தியுங் காணைப் பிரமமுடி விசைந்து
......... தேச காலமும் வாழ்வார் குகன் பொன்னிருபதத்
.................. (சடாட்சர) வந்தாதி முற்றும்.
மேலுமயிலுந் துணை.

குறிப்பு :

ஏடுகள் தலை தடுமாற்றமாகவும் ஒடிந்தும், முறிந்தும் உள்ளன. இது எமது சுவடி 843/D-1121-ன் வேறாயது போல் காணப்படுகிறது.



வரிசை எண் : 3984 சுவடி எண் : 1853

# வயிரவ சுவாமி அகவல்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 150 அளவு : 11×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

தம்பிக்கு — — — — துர்க்கை — — — காக்கவா.

நூல்

கருணைக் கடலே கயிலாசங் காவலனே
அருமைப் பொரு — — — — ஆரியனே

முடிவு :

அண்டர் பிரான் அரனார் பெறுவார்
ஆ — — — பதம் பெறுவார்
மானமொரு — — — பதம்பெறுவார்
பிரணவத்தின் — — — —

சுபாதாயா — — — ஆதேசு. இதுக்குச் சக்கரம்.
(சக்கரம் உள்ளது)

குறிப்பு :

அதிகமான செல்லரிப்பு, அதனால் செய்திகள் அறியக்கூடவில்லை.



வரிசை எண் 3985 சுவடி எண் ; 1854-உ

# செங்கோட்டுனாதர் விருத்தம்

ஏடுகள் 10 கி. எண்ணிக்கை : 200 அளவு : 37 × 3 செ.மீ.
பக்கத்திற்கு 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

— — — — யே முன்னே வடியேன்றனைத்
துப்பூஷ்சன மாகவே பேசி
— — — — ஞ்சன சீனிச்சர்க்கரைம்
பொட்டணங்கட்டி
\+ × + × +
செங்கோட்டில் வளர்னாதக் கடவுளே
கயிலாச நாயகனே ! — 1

முடிவு :

——— லையும் அவலுங் கீணபதி கடம்பன்
கிடைத் தெரு வீதியில் கேள்ப்பான்
— — — — திருச் செங்கோட்டில் வளர்நாதர் கடவுளே
கயிலாச நாயகனே ! — 10

குறிபபு :

தலைப்பேட்டு முகப்பு ஒடிந்துள்ளதால் தலைப்பு அறியக்கூடவில்லை. அமைதி கொண்டு தலைபிடப்பட்டது.



வரிசை எண் : 3986 சுவடி எண் : 1854-b

# சுந்தரமாணிக்கர் அம்மானை

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 600 அளவு : 37 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : அம்மானை
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

— — — — சுந்தர மாணிக்கர் அம்மானை பாடுதற்குக்
கற்பகனைய் கா ——— னைமலர் காப்பாமே. குருவே துணை.

நூல்

பூனந்த வனஞ்சூழும் புள்ளிருக்கு வேளூரான்
ஆனந்த மாகநட மாடினர்கா ணம்மானை
ஆனந்த மாகநட மாடினர்கா ணாமாகில்
கானந்தக் கந்தைதனைச் சாற்றுவதே னம்மானை
தய்யல் பிரியாதிருந்தால் சாற்(றா)ரோ அம்மானை.

முடிவு :

அத்தி யுரித்த ஆலங்காட் டீசருக்கு
நெத்திக்கண் ணொன்றும் நெருப்புக்காண் அம்மானை
நெத்திக்கண் ணொன்றும் நெருப்புக்கா ணாமாகில்
பத்தி சடையில் படராதோ அம்மானை
படருமென் றேகெங்கை பதிவு வைத்தா ரம்மானை. — 25

குறிப்பு :

தலைப்பேடு ஒடிந்துள்ளதால் தலைப்பு காண இயலவில்லை இது, பெண்கண் விளையாடும் அக்கால விளையாட்டு வினாவிடையாக இறைவன் சிறப்பினைக் கூறுவது.



வரிசை எண்: 3987 சுவடி எண்: 1854-c

# திருச்செந்தூராதிபன் மாலை

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 150 அளவு : 37 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மாலை
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அறுமுகந் துணை

பக்தன் பரமன் பரதேசி சாவலன் பன்னுதமிழ்
சித்தன் திருச்செந்தூர் ம(ா)லையோகச்சீர் துளசி
மத்தன் மருகன் மயிலேறும் வேலற்கு மால் தவிழ்த்த
கந்தன் கரிமுகன் காரண மேனியன் காப்பதுவே !

முடிவு :

சூலத்தினால்க் கத்திப் பாசத்தினால்ப்
பருதி துண்டம் ரெண்டுமே பட
நீலக் கிடாவந் தெதிரிடும் போது
நிமலருடன் காளுக் கபையம்
கருணைக்குத் தோத்திரங் கர்த்தனே செந்தூர்
வேலுக் கபையம்
மயில் வாகனத்துக்கும் விண்ணப்பமே ! —30

குறிப்பு :

இதிலும் தலைப்பில்லாததால் குறிப்பாகத் தரப்பட்டது. இது, திருச்செந்தூர் முருகன் மீது பாடிய தோத்திரப் பாடலாகும்.

இதன் பிறகு பழனிக் கந்தப்பனே என முடியும் 2 பாடல்கள் உள்ளன.



வரிசை எண் : 3988 சுவடி எண் : 1854-d

## திருவரங்கநாதர் ஊசல்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 100 அளவு : 37×3 செ.மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : ஊசல்
நிலைமை : பழுது முழுமை ; முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தார் சிறந்த முத்தினால் கால்கள் நாட்டி
தருபவளக் கொம்பதினால் கொடுங்கை சேர்த்து
வார்சிறந்த சந்தனத்தால் பலகை சேர்த்து
வரிசையுடன் ஆழ்வார்கள் பணிந்து போற்ற

கார்பெருகுங் காவேரி மாலை பூண்ட
கஸ்தூரி ரங்கருக்குக் கருணை யாக
சீர் உரையு மாதவனா ராடீ ரூசல்
ஸ்ரீரெங்க நாயகனா ராடீரூசல் —1

முடிவு :

(சதிர)மறை நாலுமிக நாதர் தன்னில்
சதிரான ராவணனைச் செயித்த தேவர்
(அதி)செயமாப் பஞ்சவரைக் காத்த மூர்த்தி
ஆலிலையில் பள்ளிகொண்ட அரிமுகுந்தன்
(கதி)ரொளியும் புவியளந்த கருணை யாளன்
கன்னியர்கள் துகிலுடுத்த கமலக் கண்ணன்
(சதி)ர் செழித்த ரெங்கோ ராடீ ரூசல்
ஸ்ரீ ரெங்க நாயகனா ராடீரூசல்! —8

குறிப்பு :

இதிலும் தலைப்பு இல்லை. மனிதர்களையே யன்றி, பக்தர்கள் (இறைவனை) திருவரங்க நாதனை ஊஞ்சலில் அமர்த்திப் பாடுவதாகப் பாவித்த பாடலிது. இது தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களிலொன்றாகும்.



வரிசை எண் : 3989 சுவடி எண் : 1855

## பஞ்ச தந்திர வாசகம்

ஏடுகள் : 210 கி. எண்ணிக்கை : 8000 அளவு : 41×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

(பாடலீபுர) மென்றொரு பட்டண முண்டு
அதெப்படி யென்றால் அன்னஞ் சிறுத்து
அலகு பெருத்தாப் போலவும் .........
............ ... பெருத்தாப்போலவும் மயில்
சிறுத்து தோகை பெருத்தாப் போலவும்

முடிவு :

அந்த விஷ்ணு ............ சந்தோஷப் பட்டு
சகல வெகுமானமும் அஷ்ட்ட பாக்கியமும்
விளங்கி வரத்தக்க பூமிதானமுங் கொடுத்து
ஆதரிக்கச் சகலருஞ் சுகமே யிருந்தார்க
ளென்ற வாறு.

திருச்சிற்றம்பலம்
சம்பிரேஷ சட்டகாரியம் முற்றும்,
சிவமயம்.
ராமசெயம்.

காலம் :

பிரசோத்பத்தி வருஷம் வைகாசி மாதம் 9-ந் தேதி சோமவாரநாள் திரயோதசியும் கூடிய சுபதினத்திலே துன்பங்குறிச்சி முட்டாய் குப்பன் கவுண்டன் குமாரன் முத்தய கவுண்டன் தம்பி குமாரவேல் கவுண்டனுக்கு பஞ்சந்திரவாசகம். அனந்தகிரிச்சீர்மை வீரகனூரிலிருக்கும் ஆறுமுக வாத்தியார் கையெழுத்து. எழுதி முகிந்தது.

சம்பூர்ண முத்தும். குருபாதம் துணை.

குறிப்பு :

இது, எமது, சுவடி எண் 733-a/D-1197, எண் 1372-b/D-1690 போன்ற தெனினும், வேறுபாடுகள் மிகுந்து காணப்படுகின்றன.

முதலேடு முறிந்துளது. தொடக்கத் தலைப்பு இல்லை.



வரிசை எண் : 3990 சுவடி எண் : 1856

# மீனாட்சியம்மை அகவல்

ஏடுகள் : 22 கி. எண்ணிக்கை : 200 அளவு : 22×2 செ மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீராரும் பூங்கமலத் தெள்ளமுதே சேயிழையே
காராரு மேனிக் கனங்குழலே — ஆராயும்
வேதமுத லாகிநின்ற மெய்ப்பொருளே மின்னொளியே
ஆதி பராபரையே அம்பிகையே — சோதி

முடிவு :

புத்திமதி விளைந்து சந்ததமும் நீயே துணையாக
அங்கயற்கண் தாயேநின் தாளே சரணம்.

திருச்சிற்றம்பலம்

காலம் :

......... வருஷம் சித்திரைமாதம் 16-ந் தேதி புதவாரநாளும்
......... சதமியும் கூடின சுபதினத்தில் முத்துலிங்கம் ............
......... எழுதி நிறைவேறினது முற்றும்
சுப்பராயன் கையெழுத்து

குறிப்பு :

இது, எமது, சுவடி எண் 833-b/D-1158 போன்றது. இது, 'மீனாட்சியம்மை கலி வெண்பா' என்றும் பேசப்படும். அச்சாகியுளது.



வரிசை எண் : 3991 சுவடி எண் : 1857

## கந்தபுராணம்

ஏடுகள் : 164 கி. எண்ணிக்கை : 10000 அளவு : 43½ × 4 செ.மீ.
பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : கச்சியப்ப சிவாச்சாரியார் பொருள் : புராணம்
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை
வாக்குண்டாம் .................. தமக்கு

நூல்

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கிறத் தாமரை நாயகன்
சுகட சக்கிற விண்மணி மாவுரை
விகட சக்கிரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

முடிவு :

சுப்பிரமண்ணிய மூர்த்தி போலவும்
வள்ளியம்மன் தேவியானையைப் போலவும் இடும்பன்

கடம்பனைப் போலவும் வச்சிர சரீர தேவேந்திர பதவியாய்
இரு(ப்பார்களெ)ன்ற வாறு. வேலுமயிலுந் துணை.
விருத்தாசல மூர்த்தி துணை. கந்த சுவாமியார் துணை.

காலம் :

அசுபல உகரும் அசுனூர்ப் பறமுத்தி சமிது மம்முது அகுனுத்தாலுக்கு பெருங் சூறிசினாப் பளிப்பை யிக்கிச் சேந்த மவுச்சே சித்துப் பூண்டிக் கிராமம் சராயக் கொண்ட றசங் பளையத்திலே இருக்கும் காளிப்பிள்ளை குமாரன் சிவமலைபிள்ளை சிவமலை மகன் சுப்புராயன், இரக்தாட்சி வருஷம் தை மாதம் முதல் தேதியில் திசமியும் ஏகாதேசியும் பெற்ற அசுபதி நட்சேத்திரமும் பெற்ற சுபதினத்தில் தொண்டாயுத வாணியும் சுப்பிரமணிய மூர்த்தியருடைய தேவி சகாயம். திருச்சிற்றம் பலம். அண்ணாமலை யீசுபர மூர்த்தியார் துணை. கெங்கா பரமேசுவரி பாதார விந்தமே துணை. பொன்மாரி ஆயி லட்சிப்பார். சிவ மயம். திருச்சிற்றம்பலம்.

குறிப்பு :

இது எமது சுவடி எண் 234-a/D-439 போன்றது. பிழைகளும், வேறுபாடுகளும் மலிவு.



வரிசை எண் : 3992 சுவடி எண் : 1858-a

# சூளாமணி நிகண்டு

ஏடுகள் : 18 கி. எண்ணிக்கை : 200 அளவு : 36½ × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : வீரைமண்டலபுருடன் பொருள் : நிகண்டு
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

பொன்னுநன் மணியு முத்தும் புனைந்தமுக் குடை நிழற்ற
மின்னுபூம் பிண்டி நிழல் வீற்றிருந் தவனை வாழ்த்தி
மன்னிய நிகண்டு சூளா மணியென வொன்று செல்வ
னின்னிலந் தன்னில் மிக்கோர் யாவரு மியைந்து கேண்மின் ! —1

முடிவு :

தர்வில் சைமியரே யோகர் திகம்பரர் சமணர் நித்தேரர்
மாவிரதியரே பாசுபதர் காளாமுகர் சைவத் தேரர்

மேவு மால் சமைய முற்றோர் மிக்க பாகவதராகுஞ்
சீவரர் பவுத்தரொடு தேரர் சாக்கியரே புத்தர் ! —3

குறிப்பு :

இது எமது சுவடி எண் 489/D-24 போன்றது. எழுத்துக்கள் நற்றாக உள்ளன. அச்சாகியுளது.



வரிசை எண் : 3993 சுவடி எண் : 1858-b

## வள்ளி நாடகம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 200 அளவு : $36\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : நாடகம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

பஞ்ச லச்சணமுண ன்னுல் பாத்ததோ பாவலர்கள்
அஞ்சியை கதையைப் பாட அறியாத பாலகன் சொல்
சஞ்சமால் குறத்தி விட்ட கலந்தினிர் கொண்டாய்போல
நெஞ்சிலே நினைந்து கொண்டு நீங்களும் உரை செய்வீரே !

முடிவு

புலித்தோ லெடுத்துப் போத்தி போதவே
வெனிறு னுறும் மனத்த மந்திர மோதி
வந்துனுத் தோன்றி னாரே !
கண்டா குண்டானி மெல்ல — — — —

குறிப்பு :

இது, முருகன் வள்ளியை மணந்த வரலாற்றை நாடகரூபமாகக் கூறுகிறது. பிழைகள் மலிவு.



வரிசை எண் : 3994 சுவடி எண் : 1858–c

## தனிப் பாடல்கள்

ஏடுகள் : 21 கி. எண்ணிக்கை : 500 அளவு : 36½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : பலர் பொருள் : தனிப் பாடல்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம்

கண்ணபுரங் கோயில் கதவடைத்துத் தாள் போட்டார்
மண்ணையுண்டார் வெண்ணெயுண்ட மாயனார் — ஒணானும்
சிரக்கப் பறையேந்திச் செங்கோட்டி லீசர்
இரக்கப் புறப்பட்டாரே !

முடிவு :

திருவே என் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்சு (சோதி)
உருவே என் உறவே என் ஊனே ஊனினுள்ளமே
உள்ளத்தினுள்ளே நின்ற மே
கண்ணே கண்ணிற் கருமணியே மணியாடு பாவாய்
காவாய் அருவாயே வல்வினை நோய்
அடையா வண்ணம் ஆவடுதண்டுறை யுறையும்
அமரரேறே !

குறிப்பு :

இதில், பலவிதமான பாடல்கள் உள்ளன.



வரிசை எண் : 3995 சுவடி எண் : 1858-d

## சிதம்பர சக்கரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 36½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மாந்திரீகம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக ருதவாழ்க குருவேதுணை.

சிதம்பர பூசை. சிதம்பர சக்கர பூசை

ஓம். அங்க அங்க கோறாகா
சங்கார ருத்திரா ஓம்
ஹ்றியும் கிலியும் ஹரியும்

முடிவு :

எ. வ. ஶ்ரீயும் யம் பி 16
ஒ. ய. இரியும் அம் பி 12

குறிப்பு :

ஏடுகள் பிற்பகுதி ஒடிந்துள்ளன.
கடைசியில் சக்கரம் உள்ளது.



வரிசை எண் : 3996 சுவடி எண்: 1859

# அருணாசல புராணம் உரையுடன்

ஏடுகள் : 175 கி எண்ணிக்கை : 7000 அளவு : 42×3 செ.மீ. பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : சைவ எல்லப்ப நாவலர் பொருள் : புராணம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை. சிவமயம்

மிக்க வேத வியாசர் விளம்பிய
விக்க தைக்கியை பின் றருள் செய்திட
முககண் வெற்பினை மும்மத வாரியைக்
கைக்க ளிற்றினைக் கைதொழு தேத்துவாம்.

இதன் பொருள்: அநேக வேதங்களை இயல்பாகவே உணர்த வேதவியாசரால் அருளிச் செய்யப்பட்ட ஸ்காந்த புராணத்தில் ருத்திர சங்கிதையில் இருக்கும் இந்த அருணாசல சரித்திரத்தை

முடிவு :

இதன் பொருள்: இந்த அருணாசலத்தின் மான்மியத்தைப் படித்தவர்களும், கேட்டவர்களும், எழுதினவர்களும், எழுதி வைத்துக்கொண்டவர்களும். கரிய கடல் சூழ்ந்த

பூமி முழுதுங் காத்துத் தகுந்த புத்திர சம்பத்தும் போக சவுக்கியமும் தழையும் படியாக வாழ்ந்து, யாவருக்கும் ஆதாரமாகிய அருணாசலேசுரர் கிருபையினாலே சிவபதம் அடைவார்கள் என்றவாறு,

பன்னிரண்டாளது புளகாதிபச் சருக்கம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் 586 (பின்னர் சருக்க அட்டவனை உள்ளது)

குறிப்பு :

எழுத்துக்கள் தெளிவாக உள்ளன. இது, எமது சுவடி எண் 292-a/D 510, எண் 293-a/D-512 போன்றது பிற செய்திகளை அங்கு காண்க.



வரிசை எண் : 3997 சுவடி எண் : 1860

# மன்னன் தர்மேந்திரன் கதை (நாடகம்)

ஏடுகள் : 126 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 41 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூட்வில்லை பொருள் : நாடகம்
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

கட்டியக்காரனுக்கு

வர நம்மிட ஆசாரமணி முகப்பில்
வந்து ................... அழைத்து
வரச் சொன்னாரையா சுவாமி
அந்தப்படி ......... .. னம் பிள்ளாய்
கட்டியக்காரா. அருச்சுன மகாராஜா
சபை ......... ....... யி நமது வாசல் கட்டியக்காரா

முடிவு :

துதிபெருந் துளபத்தாமன் சுகமுடனழைத்தா
ரென்று மதிகுலத்தரசன் றன்னை வணங்கி
அழைத்து வாராய். அசோ வாரும் பிள்ளாய்
கட்டியக்காரா எனது மைத்துன்ன்.

குறிப்பு :

ஏடுகள் தலைதடுமாற்றம். பல ஏடுகளில் ஏட்டெண் இல்லை. இது பாரதக் கதையில் ஒரு பகுதி 'அரவான் களப்பலி' போலும். தொடக்க ஏடு இல்லை. பிழைகள் அதிகம்.

 

வரிசை எண் : 3998 சுவடி எண் : 1861

## பாரதக்கதை

ஏடுகள் : 40 கி. எண்ணிக்கை : 800 அளவு : 42×2½ செ.மீ

க்கத்திற்கு : ் வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஸ்ரீராம செயம். சிவமயம்

தேங்கிய யிரு விலக் கடையை நீட்டும் போது
தேம்பாத மனத்துடையான் தேம்பித் தேம்பி
பூங்கார யிரு விளியிர ...........
விமன் விசயனையுந் தழுவி யாரி

முடிவு :

சொக்கருட தன்னருளால்
த்துள்ளு குட்டி வீரயனும்
வாயுந் திறவாமல் மறுவார்த்தை பேசாமல்
ஒன்றுமறியாத ஊமையனைப் போலிருந்தான்

குறிப்பு :

தலைப்பு ஏடு இல்லை 1—3, 10—24, 59—73, 81—87, ஆகிய ஏடுகளே உள்ளன. இறுதி ஏடுகள் இல்லாததால் தலைப்பு காண இயலவில்லை.



வரிசை எண் : 3999 சுவடி எண் : 1862

## மந்திர சாத்திரம்

ஏடுகள் : 70 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 14×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மந்திரம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் கணபதி உள் றிங் அங் ... ... ...
நன்குரு அங் றிங் சிங் ... ... ...

மனோ குறி கிணங் ... ... ...
முதல் தீட்சை அம் சிவய ... ... ...

முடிவு:

அகுர பகவதி அரே ... ... ... ...
மதத் காட்டேரி வ ... ... ... ...
வாவா சாடாமுனி ... ... ...
வாவா ஓம் சுவாக ... ... ... ...

குறிப்பு :

இதில், பலவிதமான மந்திரங்கள் அட்சரங்களுடன் உள்ளன.



வரிசை எண் : 4000

சுவடி எண் : 1863

# மந்திர சாத்திரம்

ஏடுகள் : 40 கி. எண்ணிக்கை : 1200 அளவு : $30\frac{1}{2} \times 3$ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மந்திரம்
நிலைமை : மிகப்ப ழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க குருவே துணை

நல்ல கணபதியை நான்கால மேதொழுதால்
அல்லல் வினையெல்லாம் அகிழுமே — சொல்லரிய
தும்பிக்கை யானைத் தொழுதால் வினைதீரும்
நம்பிக்கை உண்டாம் நமக்கு.

முடிவு :

பரமேசுபரனுங் கட்டின் க்ட்டு
சுருளு முப்பத்தி முக்கோடி தேவர்கள் கட்டின கட்டு
நாற்பத் தெண்ணாயிரங் கோடி ரிஷிகள் கட்டின

குறிப்பு :

வடுக வயிரவன் மந்திரம், அகோர வீரபத்திரன் மந்திரம் முதலான மந்திரங்கள் சக்கரங்களுடன் உள்ளன. இருவகையான ஏடுகள் உள்ளன.

வரிசை எண் : 4001 சுவடி எண் : 1864

# வண்ணத் திரட்டு

ஏடுகள் : 42 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 36×3 செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வண்ணம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்

ரெத்தின கிரியார் பேரில் வண்ணம்

தந்த தான தந்தத்தன தான ................ தனதான.
தங்கமா மலைப் பிறந்து கால ....................
ஆதியிலெடுத்து வந்து பூமனிலனிற் ......... த்து
கின்ற மாதவமெனப் பெருஞ் சிவாய மதிலுற்ற
னன்பற் ...........

முடிவு :

மதனசலம் வாரிபோலே வெ ..... ணமிடவே
வனவீச.

அரிவை நாக்கொண்டு நனி புகழுவான்.

குறிப்பு :

இதில், கொண்டலங்காரன் வண்ணம், ...... செட்டியார் வண்ணம், சென்னிமலை யாண்டவர் பேரில வண்ணம், தாயுமான பிள்ளைபேரில் வண்ணம், சுப்பிரமணியர் பேரில் வண்ணம், சிவகிரி முருகன் பேரில் வண்ணம் ஆகிய வண்ணங்கள் உள்ளன.



வரிசை எண் : 4002 சுவடி எண் : 1865

# திருவேடை அய்யன் மகவான்றன் மீதில் பள்ளேசல்

ஏடுகள்: 61 கி. எண்ணிக்கை: 1600 அளவு : 28×3 செ.மீ.

பக்கத்திற்கு: 6வரிகள் ஆசிரியர் : மீனாட்சிதாசன் சுப்பிரமணியன் பொருள் : ஏசல்

நிலைமை : சிறிது பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

செகப்புகழ் திருமாநகர்வாழ் திருவேடை அய்யன்
மகவான்றன் மீதினில் பள்ளேசல் தன்னை மகிழ்ந்துரைத்தான்
குகன்தனையீன்றருள் மீனாட்சி தாசன் குவளையணிச்
சுகவர் பொன்னம்பல வேளீன்ற சுப்பிரமணியனுமே !

முடிவு :

சீர்வாழி காவித் திருமாமலை வாழி
ஏர்வாழி ஆரளைக்கால் ஏரி பனைவாழி
கார்வாழி நல்லூர்க்கடவு ளய்யனார் வாழி
பார்வாழி மூதூர்ப் பரிசனமும் வாழியதே.

காலம் :

சித்திரபானு வருஷம் வைகாசி மாதம் 20-தேதி குருவாரமும் பவுரணையும்அனுச நட்சேத்திரமுங் கூடிய சுபதினத்தில் பொன்னம்பலபிள்ளை மகன் சுப்பிரமணிய பிள்ளையால் சில முன்னூலாராய்ந்து சுவாமி திருவேட்டை நாதன் சன்னதியில் வைத்து அரங்கேற்றியது.

குறிப்பு :

சேரிப்பள்ளர் பள்ளியர் ஒருவருக்கொருவர் ஏசுவது போல் பாட்டுடைத்தலைவனைப் புகழ்ந்துரைப்பது. மூத்தப்பள்ளி இளையபள்ளி ஏசுதல்.

இதில், திருமலாச்ாரியார் அவர்களது திருவேட்டைப்பள்ளு, நாட்டுவளம், குயில் சிந்து, மழைக்குறி, வெள்ளம் வருதல், திணை மயக்கம், பண்ணைக்காரன் வரவு, மூத்தபள்ளி சொல்லுதல். இளையபள்ளி சொல், நெல் மரைப்பு, மாடு மரைப்பு முதலான உன் தலைப்புகள் காணப்படுகின்றன.



வரிசை எண் : 4003 சுவடி எண் : 1866

## சூடாமணி நிகண்டு 11-ஆவாது நிகண்டு

ஏடுகள் : 161 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 24×2½ செ.மீ.
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : வீரைமன்னன் மண்டலவன் பொருள் : நிகண்டு நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

முடிவிலின் பத்து மூவா முதல்வனைப் போற்றி செய்தே
யடிதொறு மிரண்டு மொன்று மாதியிற் பொருளடக்கி
நடைபெரு சகரமாதி னகரவீ ரெதுகையாகப்
படியிலோர் சொற்பொருட் பல்விதத்தொகை பகரலுற்றாம்

11 - வது

பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்
பகனாளோர் முகுந்தங்கை கேள் பானுள்ள குத்ததுலும் பேர்

முடிவு :

மின்னன வொருசொற் பலபேர் கியற்கவி மூன்னூற் றீரேன்
சொன்னவன் குரைபத்திரன்றாள் சூடு மண்டலவன்றானே ! —317

காலம் :

சித்திர பானு வருஷம் மாசி மாதம் 9-ந் தேதி முருகூரிலிருக்கும் செல்லங்கங் காளியார் குமாரன் சிதம்பலம் பதினோராவது நிகண்டு ஷையூர் அய்யாக்கண்ணு அய்யர் எழுதி முகிந்தது.

முற்றும்,
சிவமயம் குருவே துணை
ஸ்ரீ ராம செயம்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 948/D-1096 போன்றது
பிற செய்திகளை ஆண்டு காண்க.



வரிசை எண் : 4004 சுவடி எண் : 1867

# ருக்குமாங்கதன் கதை

ஏடுகள் : 76 கி. எண்ணிக்கை : 3500 அளவு : 40×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7-8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

சுக்லாம் பரதரம் விஷ்ணும் ... ... .. சாந்தயே !
... ... ... ... விந்தை யுள்ள விதிசைபதி ருக்குமாங்கன்
விருப்பமுடன் அரிவிருதத்தை விரும்பிச்செய்ய
அந்தகனு மயனிடத்தில் ... ... ... ... ... ... ...
ரக்கரமதினால் கத்தி ஓங்கும் கை பிடித்த
கார்மேகன் கமலம் போற்றி

முடிவு :

வருத்தமாய் அனுபவித்தால் வழுதலை ... ... ... ...
வென்று யென் பர்த்தாவை அடி பணிந்து
மாகெதி கேட்டேன் சொன்ன விருத்தாந்த மெல் ... ... ...
ருப்பமாய் சொல்வே நின்னம். பொன்னியே ... ... ...

குறிப்பு :

இது, ஏகாதசி விரத மகிமையைக் கூறுவது ருக்குமாங்கத மன்னன் பல இன்னல்களிலும் விரதத்தைப் பூர்த்தி செய்து பேறுபெற்ற வரலாறாகும். சுப்பராயன் என்பான் ஆசிரியர் எனக் குறிப்பாலுணரப்படுகிறது.



வரிசை எண் : 4005 சுவடி எண் : 1868

## கீர்த்தனைகள்

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 150 அளவு : 18×3 செ மீ.

பக்கத்திற்கு: 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நலல் நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தரு மத்தியமாவதி

வந்தான் வந்தான்- பரதா ரகுராமன்
வந்தான் வந்தான் — பரதா

வந்தான் வந்தான் மோதிரம்
தந்தான் தந்தான் கைமேல்
இந்தா இந்தா தீயினில்
முந்தாதே முந்தாதே — வந்தான்

முடிவு :

எய்தும் அவர் மனத்தில் அய்யம் செல்லச் செல்ல
இதுவோ அயோத்தி நகர் அதுவே அல்ல அல்ல
அய்யா இது அந்த வைகுந்தம் என்று சொல்ல
ஆணிப்பொன்னாலே யெங்கும்
வாணித்து நல்ல நல்ல — சிங்கார

குறிப்பு :

இராமாயணக் கீர்த்தனைகள் ஆகுமிவை



வரிசை எண் : 4006 சுவடி எண் : 1869

# கும்பேசர் குறவஞ்சி

ஏடுகள் : 34 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 42×3 செ.மீ.
பக்கத்திற்கு: 6 வரிகள் ஆசிரியர் : பாவனாசமால் பொருள் : குறவஞ்சி
நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பிள்ளையார் துதி

ஸ்ரீராகம் ஆதி (தாளம்)

தத்திமுகவனிதோ வந்தான்
இந்திர சுரமுக வந்தான்.
தொந்தியசைய நீத்தம் தொழுமடியவர்
பந்த சாதகங்கள் கந்தரமா மெங்கள்

முடிவு :

மாவடு வகிர்ந்த கண்ணாள் மங்கை நாயகியார் வாழி
பாவனாசமால் தந்த பைந்தமிழ் வாழி தானே !
பூமலியுந்தட குடந்தைக் கோவில் வாழி
புகழுதான பரிசுலம்பொன் பொருந்தி வாழி

வாமபாகத் துறைந்த செஞ்சடையோர் வாழி
மங்கைச்சியாரும் நான் மறையோர் வாழி
ஈமமதி லாடிய சங்கரனாரீன்ற யினைய செவ்வே
மூத்தபிள்ளை யிருவோருககும்
மாமன் வெங்கிடாசலமால் வாழி வாழி
மற்றுள்ள பேர்களும் புனிதமும் வாழி தானே! சுபமஸ்து

காலம் :

துந்துபி வருஷம் ஐப்பசி மாதம் 26-ந் தேதி குறவஞ்சி எழுதினது தஞ்ச நகரத்தில் சுப்பிரமணியன் கையெழுத்து. சிவமயம் ஸ்ரீ மகாகெணபதி குருவே நம: சிவகடாட்சம். ஸ்ரீ திரிபுர சுந்தர்யை நம: ஆதி கும்பலிங்கசுவாமி துணை. ஸ்ரீ ராமசெயம்.

குறிப்பு :

இது, குடந்தை ஆதிகும்பேச்சுரர் மீது பாடிய குறவஞ்சியாகும். மேற்கண்ட குறிப்பின் பிறகு சிங்கன் சிங்கி தருக்கம் 3 ஏடுகளில் உள்ளது. இது, பின்னர் எழுதிச் சேர்க்கபட்டது போலும்.



வரிசை எண் : 4007 சுவடி எண் : 1870-உ

# நளன் கதை

ஏடுகள் : 140 கி. எண்ணிக்கை : 6000 அளவு : 23 × 3½ செ மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவே துணை

தழைவிரித்தே கைமாலைத் தனிமுதல் சடையிற் சூடுங்
குழவி வெண்டிங்களிற்ற கோட்டது குறையென் றெண்ணிப்
புழைநெடுங்கரத்தாற் பற்றிப் பொற்புற விணைத்து நோக்கு
மழைமதக் களிற்றின் செய்ய மலரடி சென்னி வைப்பாம்.

நளன் கதை நாட்டுப் படலம்

கருவிமாமழை கலைமக ளுருவென்ன விளங்கி
யிருவிரு விசும்பிடைப் படர்ந்துசென் றின மணி

காலம் :

ஆழிசூழ் புவிமுழுவது மாழியொன்று ருட்டி
வாழி நல்லறம் புரிந்தருமக பல்வாற்றி
சூழிமால் வினாப்பிடருறுஞ் சுமைபொழித்தாற்றிப்
பாழியம் புயத்துல கெல்லாம் பரித்தினி திருந்தான் — 15

அரசாட்சிப்படலம் முற்றும். நளன் கதை முகிந்தது முற்றும்.

9.5-ஆம் வருஷம் ரவுத்திரி வருஷம் சித்திரைமாதம் 16-ந் தேதி ஞாயிற்றுக்கிழமையும் சதுர் தேசியுமாக சங்கர மூர்த்திக்கு ஏடு எழுதி முகிந்தது முற்றும். சங்கரமூர்த்தி எழுத்து. சிவாயநம தேவிசகாயம். வேலே துணை. குமாரன் துணை. ஆகத் திருவிருத்தம் 1168 காப்பு. 2

ஆகத்திருவிருத்தம் 1170.

குறிப்பு :

இதன் பின்னர் படலங்களும் செய்யுட்களும் எழுதிய அட்டவனை ஏடு உளது. அதில் ஆகத்திருவிருத்தம் 1170 'செப்பல்ற மட்டம்' என்றுளது. இது விருத்தப்பாக்களாலானது. நளவெண்பாவினும் வேறாயது.



வரிசை எண் : 4008 சுவடி எண் : 1870-b

## திருக்குறள் — மூலம்

ஏடுகள் : 68 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 23 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : திருவள்ளுவர் பொருள் : நீதிநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக. திருவள்ளுவர்

எண்ணிய எண்ணிய வெய்துபற்
கண்ணுதல் பவளமரல் வரைப் பயந்த
கவள யானையின் கழல் பணி வோர்க்கே !

நூல்

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. —1

முடிவு :

ஊடுதல் காமத்திற் கின்ப மதற் கின்பங்
கூடி முயங்கப் பெறின் !

காமத்துப்பால் முற்றம்.
சூத்திரம் 1330

காலம :

920-ஆம் வருஷம் ஐப்பசி மாதம் 9-ந் தேதி புதன் கிழமையும் பௌர்ணமையும் அசுபதி நட்சேத்திரமும் பெற்ற தினத்தில் சங்கர மூர்த்திக்குத் திருவள்ளுவர் குறள் எழுதி முடிந்தது. முற்றும். சிவாயம. தேவி சகாயம். வேலே துணை. குமரன் துணை.

ஸ்ரீ குரவே துணை. செப்பறை மடத்துக்கு

குறிப்பு :

இதில், குறட்பாக்கள் தெளிவாக உள்ளன.
செப்பறை மடம் என்பது அறியக்கூடவில்லை.



வரிசை எண் : 4009 சுவடி எண் : 1871-அ

## கந்த புராணம் உபதேச காண்டம்

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 41×4 செ.மீ.
பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : கச்சியப்ப முனிவர் பொருள் : புராணம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை
குளவி வெண்டிரை மலைச்சியோர் குனித்த மாதவத்தி
னிமைதடம்புனலருவி தாளீமைய மீன்றளித்த.........

நூல்

திங்க ளஞ்சடை யெம்பிரான் றிருவருள் பெருக
பொங்கு திங்கண் மும் மாரியும் பொழிக பூதலத்தி
லெங்க ணாயகன் திருக்குழாத் தொண்டர் டேறத்
தங்கு நான்மறைச் சைய் வநூ லோங்கறந் தழைக்க —1

முடிவு :

இல்லறத்தை யிகழ்ந்தொரு வாளி வளம்
புல்லொழுக்கம் பொருந்துறு புன்மையாள
வல்லறுத்தவன் முலை மானிலத்
தெல்லவர்க்கு மினிதளித்தான்ரோ ! —44

குறிப்பு :

இதில், சூரர்களொடுக்கம், அயமுகி வரலாறு ஆகிய உள் தலைப்புகள் உள்ளன இது, எமது சுவடி எண் 241-1/D-451 போன்றது.



வரிசை எண் : 4010 சுவடி எண் : 1871-

# விக்கிரமாதித்தன் கதை

ஏடுகள் : 2/7 கி. எண்ணிக்கை : 18000 அளவு : 41×4 செ மீ·
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவே துணை.

சாதுரியனானாகு சங்கரத் தியானாலு
மாதுயை யீய வழக்கில்லை — மாதுரியைப்
பார்த்தெழுத வேணுமென்றால் பத்தெடு மெட்டெட்டு
கோர்த்தெழுதிக் கொள்ளக் கொடு.

விக்கிரமாதித்தன் கதை—முப்பத்திரண்டு பதுமை கதை.

உச்சினி மாகாளிட் உச்சினி மாகாளி யென்றொரு பட்டணம்
அந்தப்பட்டணத்திலே போசராசாவும் சுதனென்கிற
மந்திரியும் சிறிது நாள் ராச்சிய பரிபாலினம் பண்ணுகிறபோது

முடிவு :

யிது வெல்லாம் பொய்யாயிருக்க மெய்யாச்சிது. நானிப்படி
தொழில் கத்த பெரிவனைப் போலே ஒருவருமில்லை. யென்று
சந்தோஷித்துக் கொண்டு இருக்கிற வேளையிலே தென்மண்டலத்தில்
பாண்டிய ராசாக்களவர்கள் கட்டின கப்பமாவது. என்———

குறிப்பு :

இது, அச்சாகியுள்ளது, விக்கிரமாதித்த மன்னனுடைய சிம்மாசனத்தில் போஜராசன் அமரப்புகும்போது, அச்சிம்மாசனத்திலுள்ள 32 படிகளில் உள்ள 32 பதுமைகள் கூறிய கதையாகும்.

இது, எது சுவடி எண் 732-b D-1200, எண் 733-b/D-1198 போன்றது.



வரிசை எண் : 4011 சுவடி எண் : 1872

## திருக்காளத்திப் புராணம்

ஏடுகள் : 172 கி. எண்ணிக்கை: 8000 அளவு : 30×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : பரிமள கவிராசன் பொருள்: புராணம்

முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக திருக்காளத்திப் புராணம்

செழுவிய வடமொழி தென்மொழிப் படமொழி வுறுமாக் கதை
முழுதுங் காக்குமாற் குழவிவெண் டிங்க ளோர் கோட்டு

நூல்

சீர்பூத்த பேரொளியாய்ச் சித்துருவாய் நித்தமாய்ச்
சிவமர யொன்றாய்
யோர்பூத்த சத்தாகி நித்தமா யனாதியாய்
யாண்டுமாகிப்

முடிவு :

வாழி வானவர் வாழிய வந்தணர்
வாழி யானினம் வாழிய வேந்தனும்
வாழி யிக்கதை வாழி படிப்பவர்
வாழி கேட்பவர் வாழி யெல்லோருமே ! — 50

முப்பத்து மூன்றாவது சூத்திரன் முத்திபெற்ற வத்தியாயம் முற்றும்.
ஞானப் பூங்கோதை துணை.

பொருனை நதி யுவட்டெரியுந் தமிழ்நாட்டி லளகை நகர்
பொருவும் வீனாக் குரிசில் பரிமள கவிராசன் தமிழ் தேர்ானந்தன்
கூத்தன் விண்ணோர் பரவு மியற்காசிதன்னில்
வாசமாயகிலேசன் பாதம் பெற்றோன்

சுருதிபுகழ் காளத்திப் புராணத்தைச் செந்தமிழால்ச் சொன்னானன்றே !
திருக்காளத்தி சீபுராணம் முற்றும்.

சுப்பிரமணியன் திருவடிகளே சரணம்.

**காலம் :**

920 வருஷம் ரத்தாட்சி வருஷம் ஆனி மாதம் 18-ந் தேதி ஆதிவார திரையேதசி ரோகணி நட்சேத்திரங் கூடினது புண்ணிய தினத்தில் திருகாளத்திப் புராணம் ந மங்கை நாயகம் எழுதி முகிந்தது முற்றும்.

ஞானப் பூங்கோதையம்மன் துணை. சாலிவாடீசுரர் துணை.
காந்திமதியம்மன் துணை.

குறிப்பு :

இது, சீகாளத்திப்புராணத்தின் வேறயாதா என்பது அறியக்கூடவில்லை: சீ-சிலந்தி, காளம்—பாம்பு, அத்தி—யானை மூன்றும் பூசித்ததால் சீகாளத்தி என்றாயிற்று என்பர். இறுதிப்பாடலால் இதனை, பரிமளக்கவிராசன் இயற்றியது எனத் தெரிகிறது. இடையிடையே ஏடுகள் இல்லை.



வரிசை எண் : 4012 சுவடி எண் : 1873-a

# திருக்குறள் — பரிமேலழகருரை

ஏடுகள்: 260 கி. எண்ணிக்கை: 16000 அளவு : 19 × 5½ செ.மீ

பக்கத்திற்கு: 18–20 வரிகள் ஆசிரியர்: திருவள்ளுவர் பொருள்: நீதிநூல்

நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

இந்திரன் முதலிய விறையவர் பதங்களு மந்தமி லின்பத்
தழிவில் வீடு நெறியறிந் தெய்துதற்குரிய மாந்தர்க்குறுதியென
வுயர்ந்தோரா லெடுத் (தோ) தப்பட்ட பொருணான்கு

நூல்

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு — எ.து அகரமாகிய முதலை
யுடைய வெழுத்துக்களெல்லா மது போல

முடிவு :

ஒருகாலத்தோர் குற்றத்துளதா ரதல்லதுலகியல்பாய்
வாராமையானு மீண்டொழிக்கப் பட்டதென்பதாம்
காமத்துப்பால் முற்றும்.

ஆக கொறள் (குறள்) 1330-ம் எழுதி முகிந்தது முற்றும்.
திருவள்ளுவர் குறளுக்கு பரிமேலழகர் உரையெழுதி முகிந்தது முற்றும்.

திருத்தகுசீர் வள்ளுவன்...... ...நாமன் வந்து
தெய்வப்புலமை ...............னேர்ந்து
திருவள்ளுவ நாயனார் குறள் எழுதி முகிந்தது முற்றும்.

காலம் :

1039-ஆம் வருஷம் ஆடி மாதம் 13-ந் தேதி பூருவ பட்சம் திசமி அனுச நட்சேத்திரம் கூடின சுபயோக சுபதினத்தில் குலசேகரம் பட்டணம் ராமநாதபிள்ளை குமாரன் மாறியாடும் பெருமான் கையெழுத்து. நீடூழி காலம் வாழ்க.

குமர குருபரன் துணை.

குறிப்பு :

இது, கூந்தற்பனை ஏடுகளில் எழுதப்பட்டுள்ளது. எழுத்துக்கள் தெளிவாக உள்ளன. பக்கத்தில் 18-20 வரிகள் வியப்பே. பிழைகள் உள்ளன.



வரிசை எண் : 4013 சுவடி எண் : 1873-b

## நாலடியார்

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 19 × 5½ செ.மீ.
பக்கத்திற்கு: 18—20 வரிகள் ஆசிரியர்: எண்ணாயிரம் சமண முனிவர்கள் பொருள் : நீதிநூல் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

எப்போ தகத்தும் நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்.

நூல்

வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை — யானிலஞ்

சென்னி யுறவணங்கிச் சேர்துமெம் முள்ளத்து
முன்னிய யவை முடிக வென்று. —1

முடிவு :

கண்மூன் றுடையானுங் காக்கையும் பையரவு
மெண்ணீன்ற தாயும் பிழைத்ததென்—பொன்னீன்ற
கோங்கரும் பன்ன முலையாய் பொருள் வயிற்
பாங்கனார் சென்ற நெறி. —10

காமனுதலியல் முற்றும்.

ஆக அதிகாரம் 40-க்கு வெண்பா 400

சண்முக தெய்வம் கிருபை செய்ய வேணும்.

காலம் :

1020-ஆம் வருஷம் ஐப்பசி மாதம் 20-ந் தேதி வியாழக் கிழமையும் உத்திர நட்சேத்திரமும் கூடின சுபயோக சுப கரணத்தில் நாலடியார் எழுதி முகிந்தது. முற்றும். செப்பறை மடத்துக்கு இது எழுதியது. குலசேகரம் பட்டணம் ராமனாத பிள்ளை யவர்கள் குமாரன் மாறியாடும் பெருமான் கய் யெழுத்து. நீடூழிகாலம் வாழ்க. நன்றாக.

சரசுபதி துணை.

குறிப்பு :

இது, எமது சுவடி. எண் 78/D-143 போன்றது. பிற செய்திகளை ஆங்கு காண்க. இதில், பிழைகள் காணப்படுகின்றன. சில நல்ல பாடமாகவும் காணப்படு கிறது. கூந்தற்பனை ஏடுகள்.



வரிசை எண் 4014 சுவடி எண் ; 1874-a

# திருப்பாவை

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 200 அளவு : 26 × 4½ செ.மீ. பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : சூடிக்கொடுத்த நாச்சியார் பொருள் : வைணவம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அன்ன வயற்புதுவை யாண்டா ளரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதிய — மின்னிசையாற்

பாடிக் கொடுத்தாணற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

நூல்

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர்.

முடிவு :

செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்குந் திருவருள் பெத்து இன்புறுவ ரெம்பாவாய் —30.

மார்கழி வையம் ............ வங்கந்தை
கோதை பிறந்தவூர் ............ கோனூர்
பாதங்கள் தீர்க்கும் பரம னடிகாட்டும்
வேத மனத்துக்கும் வித்தாகும் — கோதைதமிழ்
ஐயைந்து மய்ந்தும் அறியாத மானிடரை
வையஞ் சுமப்பதும் வம்பு.

குறிப்பு :

ஆண்டாள் நாச்சியார் பாடிய பாடல்கள், நாலாயிரத் திவ்விய பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன. இன்னும் பாடல்கள் உண்டு. கூற்றற்பனை ஏடுகள்.



வரிசை எண்: 4015

சுவடி எண்: 1874-b

## திருவாய்மொழி

ஏடுகள் : 105 கி. எண்ணிக்கை : 4000 அளவு : 26 × 4½ செ.மீ.
பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : நம்மாழ்வார் பொருள் : வைணவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக தனியன்

திருவழுதி நாடென்றுந் தென்குருகூரென்று
மருவினிய வண்பொருனை லென்றும்

நூல்

உயர்வர வுயர்நல முடையவன் னெவனவன்
மயர்வற மதிநல மருளின னெவனவன்
மயர்வறு மமரர்கள் அதிபதி யெவனவன்
சுடரடி தொழுதெழென் மனனே! —1.

முடிவு :

அவரவர் சூழ்ந்தரியை ......... பிறந்தா ருயர்ந்தே 11:
ஸ்ரீராமஜெயம் திருவாய்மொழி யெழுதினது முற்றும்
ஆழ்வார் திருவடிகளே சரணம்
ஆச்சாரியன் வானமாமலைச் சீயர் திருவடிகளே சரணம்.

காலம் :

102--ம் வருஷம் ஆவணிமாதம் 21-ந் தேதி சனிக்கிழமை அமரபட்சம் ரோகணி கிருஷ்ண அஷ்டமி கூடிய சுபயோக சுபதினத்தில் குல சேகரம் பட்டணம் ராமநாதம் பிள்ளையவர்கள் குமாரன் மாறியாடிய பெருமாபிள்ளை கையெழுத்து

நீடுழிகாலம் வாழ்க நன்றாக

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 1092/D–1885 போன்றது. இதுவும் நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தில் இடம் பெற்றுளது. கூந்தற்பனை ஏடுகள்

❀ ❀

வரிசை எண் : 4016 சுவடி எண் : 1874-c

# திருமொழி

ஏடுகள் : 94 கி. எண்ணிக்கை : 4500 அளவு : 26×4½ செ.மீ. பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : திருமங்கையாழ்வார் பொருள்: வைணவம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துய ரிடும்பையிற் பிறந்து
கூடினேன் கூடி யிளையவர் தம்மொடவர்
தருங் கலவியே கருதி

குன்ற மெடுத் தானிரை காத்தவன் றன்னை
மன்றில் மலி மங்கைமன் கலிகன்றி சொல்லொன்று
நின்றவொன்பதும் வல்லவர் சுங்கமே
லென்றுங் வினையாயின சாரகில்லாவே ! — 10

முடிவு :

மாற்றருஞ் ............ குன்ற மந்தி,
திரு(வாய்) மொழி முற்றும்.
ஆழ்வார் திருவடிகளே சரணம் நன்றாக.

குறிப்பு :

இது, பெரிய திருமொழி எனப்படும் எமது சுவடி எண் 1118 D- 902 போன்றது.
கூந்தற்பனை ஏடுகள்



வரிசை எண் : 4017 சுவடி எண் : 1874-d

# திருக்குறுந் தாண்டகம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 300 அளவு : $26 \times 4\frac{1}{2}$ செ மீ.
பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : திருமங்யைாழ்வார் பொருள் : வைணவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நிதியினைப் பவளத்தூணை நெறிமை
நேரிமையால் நினைய வல்லார்க்
கதியினைக் கஞ்சன் மாளக்
கண்டு முன்னிண்ட மாளு
மதியினை மாலைவாழித்தி வணங்கி
யென் மனத்து வந்த
விதியினைக் கண்டுகொண்ட
தொண்டனேன் விடுகிலேனே ! — 1.

முடிவு :

மன்னுமாமழை தவழு மேகவண்ணா
விண்ணவர்தம் பெருமாளே யருளாயென்
றன்னமாய் முனிவரோ டமரரேத்த
வருமறை மைவெளிப்படுத்த வம்மான் உன்னை
மன்னுமாமணி மாடமங்கை வேந்தன்
மானவேற் பரகாலன் கலியன் சொன்ன

பன்னிய நூற்றமிழ் மாலைவல்லார் தொல்லைப்
பழுவினையை முதலரிய வல்லார் தாமே ! — 30

மின்பார் திருவடி மந்திர ———— தென்னிலங்கை அன்றாயர்
மின்னுமா வையம். ஆழ்வார் திருவடிகளே சரணம்
திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம். ஆழ்வார் திருவாய் மொழி
முற்றும். செப்பறை மடம் நன்றாக

குறிப்பு :

இது, ஆழ்வார்கள் பன்னிருவர் பாடிய நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்துள் ஒரு பகுதி அச்சாகியுளது. இது, கூந்தற்பனை ஏடுகளாலானது. பிழைகள் மலிவு,



வரிசை எண் : 4018 சுவடி எண் : 1875-a

# வஸ்த்து நின்னயம்

ஏடுகள் : 85 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 23½×2 செ.மீ.
பக்கத்திற்கு : 6—8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுள்து எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வைதீக கற்மம் லகீக் க்ற்மம்
எந்தக் கற்மமா யிருக்கிலும் எந்தத்
தேவதைக்கு அக்கிர பூசை பண்ணி
யுலந்த அரே நிருவிக்கின பலமடைவார்கள்

முடிவு :

அது சுருதிஸ்ஸ்ரிதி இதிகாசத்துக்கு விரோதமாகையால்
அந்தவசனம் பிரமாண மல்ல வென்றே யறிக.
ஆகையால் இந்தப் பதினைஞ்சு தூஷணமுஞ்
சிவத்துக்குப் பூஷண மென்றே சகல சாத்திர
நின்னயம். சுபமஸ்து.

குறிப்பு :

இதில், கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுதப்பட்டுள்ளன. நித்தியவஸ்த்து, சகல சாத்திர நின்னயம், இரண்டாந்தேவதையளுக்கு இல்லை என்ற நின்னயம், சகல வித்தைக்கு மீசுரன், மூர்த்தி இவளென்ற நின்னயம்; சூரிய மண்டல உபாசிக்க சிவன், சகல நூலுக்குப், புத்திப் பிரதானத்துக்கு சிவநின்னயம் முதலான தலைப்புகள் உள்ளன.

இது, தொடக்க ஏடு அகலம் குறுகியும் வரவர கடைசி ஏடு அகின்றும் உள்ளது.



வரிசை எண் : 4019 சுவடி எண் : 1875-b

# சைவ சமய நூற்காண்டிகை

ஏடுகள் : 57 (87—143) கி எண்ணிக்கை : 800 அளவு : 24 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : சிறிது பழுது முழுமை முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

நல்லார் தொழும் வெண்ணை நல்லூர் சிவாலயத்துட்
பொல்லார் தாள்யாஞ் சூடும்போது
எ.து. பொல்லார்தாள் யாஞ்சூடும் பூ. அஃதே
சிறப்பினை யுடையதெனில் எண்வகைப் பத்தியையுடைய
நல்லாரால் வணங்கா நின்ற திருவெண்ணை நல்லூர்ச்
சிவாலயமே பதியாக வெழுந்தருளி

முடிவு :

சதுர்த்தேசியும் அட்டமியும் அமாவாசையும்
மாறினையுந் தைமாதப் பிறப்புஞ் சித்திரை மாதப் பிறப்பு
மென்றவாறு — 12. ஆடி முதநாளற்பசி முதனாட்
பேரொளி.

குறிப்பு :

இதில், ஆசாரிய லட்சணம், சிஷ்யலட்சணம் முதலானவை கூறப்பட்டுள்ளன. கிரந்த எழுத்துக்கள் கலந்து எழுப்பட்டுள்ளன. பாட்டின் முதற்குறிப்பினை அந்தந்த ஏட்டின் தலைப்பில் எழுதப்பட்டுளது.

வரிசை எண் : 4020 சுவடி எண் : 1875-c

# திருவாலவாய்க் கட்டளை

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 450 அளவு : 25 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : திருஞானசம்பந்தசுவாமிகள் பொருள் : சைவசித்தாந்தம் நிலைமை : சற்றே பழுது முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம் பலம்
அத்திமுகத் துத்தமனை
நித்த நினை சித்தமே !
பதிபசு பாச மூன்று மனாதி. நித்தியவிவைகள்
திறபதியாவது பரிபூரணமாய் மூன்றா யறிவுக்
கறிவாய் நின்மலமாயுயிர்க் குயிராய்

முடிவு :

இப்படிச் செய்ய வுண்மை வந்து கூடு மந்தப்படி
நெய்த்த முந்தல் முதலாக யெந்த நிலையிலே
நின்றாலு மாசாரியரையுந் திருக்கோயிலையும்
வேடத்தையு மிகவும் வழிபட வென்றவாறு
திருவாலவாய்க் கட்டளை முற்றும்
திருச்சிற்றம்பலம் ஆலவாய் ஞானதேசிகன் திருவடிகளே
சரணம். பொன்னம்பல தேசிகர் பாதமே சரணம்
திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இதில், பதியிலக்கணம், பசுவிலக்கணம், பாசவிலக்கணம் பற்றி உரைநடையில் கூறப்பட்டுள்ளது. அச்சாகியுளது.



வரிசை எண் : 4021 சுவடி எண் : 18.6

# திருக்குறள் - மூலம்

ஏடுகள் : 129 கி. எண்ணிக்கை: 1500 அளவு : 34½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : திருவள்ளுவர் பொருள் : நீதிநூல்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவே துணை

திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டு
× × × ×
கூப்புவர்தங் கை.

நூல்

அகரமுதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு

முடிவு :

கண்ணிற் றுணித்தே கலங்கினாள் புல்லுத
லெண்ணினுந் தான்விதுப் புற்று

குறிப்பு :

கடைசி 5 அதிகாரங்கள் இல்லை



வரிசை எண் : 4022 சுவடி எண் : 1877-அ

# திருஉத்தரகோச மங்கைத் தலபுராணம்

ஏடுகள் : 77 கி. எண்ணிக்கை : 2300 அளவு : 20 × 4½ செ.மீ

பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : வைத்தியநாதமுனிவர் பொருள் : தலபுராணம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

முருகு விரைபொறிச் .......... களிற்றினடித்தலங்கள் முடி சேர்பவாம்.

நூல்

... ... பொருளாய்ப் பலவுருவாய் யொளியாகி
யானந்த வுண்மையாகி
கருதரிதாய்த் தெரிவரிதாய்க் காரண காரியங்
கடந்த கருணையாகி
பொருவின் மறைக் கொழுந்தாகி யுபநிடதப் பொருளாகி

முடிவு :

தரியலர்ச் செகுத்து நாளுந் தங்கிய வனைத்து நீட
விரிதலை நிலத்தில் வாழ வரமெய்மையே யிம்மை யம்மை
வரிநெடுங்கண்ணி பங்கன் வளர்புரத்தடைந்து வீறு
புரிசிவ கணங்களொடு பொலிந்து நித்தியராய் வாழ்வார் — 64

பதினோராவது வலைவீசு மத்தியாய முற்றும்
மங்களேசுர சுவாமி துணை
வாரேறு பூண்முலை யம்மை துணை.
ஆக அத்தியாயம் பதினொன்றுக்கு விருத்தம் 445. செப்பறைமடம்

குறிப்பு :

மாணிக்கவாசகரால் புகழ்ந்து பாடப்பட்ட தலமாகுமிது, 1. வேதமித்திரன் சுவர்க்க மடைந்தது, 2. சந்திறாவர் கன்னியர் பிரம சாபந்தீர்ந்தது, 3. ஐந்தெழுத்துரைப்போர், விபூதி தரிப்போர், ருத்திராக்கள் தரிப்போர் பெறும் பேறு உரைத்தது 4. தீர்த்தச் சிறப்புரைத்தது, 5. அரித்துவசன் சர்பந்தீர்ந்தது, 6. நளச் சக்கரவர்த்தி மோசனம், 7. மங்கலபுரி சதுர்வேத புரியானது முதலான கப்பல் சரிதை யுரைத்தது, 8, பார்வதி தவம்புரிந்தது, 9. மணம் புரிந்த வத்தியாயம், 10, பிருகு சாபந்தீர்ந்தது, 11. வலைவீசுற அத்தியாயம் ஆகியவை உள்ளன.



வரிசை எண் : 4023 சுவடி எண் : 1877 -b

# கூவப் புராணம்

ஏடுகள் : 177 கி. எண்ணிக்கை : 3000 அளவு: 20 × 4½ செ மீ.
பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : சிவப்பிரகாச சுவாமிகள் பொருள் : தலபுராணம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

ஓம் குருவே துணை.

நச்சிறுத்த நயனக் குவி முலை
யச்சிறுத்த விரகிலிக் கரங்கொ(ந)போ
யச்சிறுத்த நுசுப்பினிற் போற்றிவர
மிச்சிறுத்த விறகிலிக்கரங் கொலேர
வைச்சிவத்த வடிக ளடிகளே !

முடிவு :

வாழ்க நல்லா மன்னி யுலகெலாம்
வாழ்க பையர வல்குல் மகிணர்த்தாள்
வாழ்க கூவப் புரத்துறை மாந்தர்கள்
வாழ்க கூவபுரான மருவியே ! —295

ஆக விருத்தம் 701. காப்பு விருத்தம் 2. ஆக விருத்தம் 703.

கூவப்புராணம் முற்றும்.

குறிப்பு :

இதில், நைமிசாரணியச் சருக்கம், திருத்தலச் சருக்கம், திரிபுர தகனச் சருக்கம், அடிமுடி தேடு சருக்கம், சென்னெல் வைத்த சருக்கம், தாரகன் வதைத்த சருக்கம் ஆகிய சருக்கங்கள் காணப்படுகின்றன. பிழைகள் அதிகம்.



வரிசை எண் : 4024 சுவடி எண் : 1877-c

# கண் மருத்துவ நூல்

ஏடுகள்: 15(2-16) கி. எண்ணிக்கை : 300 அளவு : 20×4½ செ.மீ.
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மருந்திடு நயனந்தன்னை
மகிழ்ந்தொரு நேர மிட்டுத்
திருந்துமக கருப்புக் கெட்டுத்
திகழுநீர் சொறியு மாறிப்
பறிந்திடு நோவு மாறப்
பலபல குணமுண் டாகும்

விரைந்து பின்னியுங் கேளாய்
விழிக்குநோய் சொல்லு கன்றேன் !

முடிவு :

அன்பா யோரோர் சாமமென்ன
வுழக்காய வெவ்வேறே அரைச்ச
யின்பாந் தேனி லுரைத்திடவே
பிறினவ காயம் வெள்ளெழுத்துத்
துன்பாம் படலம் பில்லமென்ன
சொல்லும் ரோக பெல்லாம்
மின்பா மிரவிகதிர்போ லியலுஞ்
சுளேகத்தி ராதி யீதே !

குறிப்பு :

முதலேடு இல்லாததால் தலைப்பு அறிய இயலவில்லை. சுவடியில் 'பேரில்லாதது' என்று தொடக்கத்தில் கூறப்பட்டுளது. கண் நோய்களுக்கு மருந்துகள் இதில் காணப் படுவதால் கண் மருத்துவ நூல் எனப் பெயரிடப்பட்டது.



வரிசை எண் : 4025 சுவடி எண் : 1878-a

# கேதாரவிரதக் கதை

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 500 அளவு : 29½ × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவே துணை.

செம்பொன் மேய்ந்த வம்பலந் தன்னில்
சரணம் புரிந்து பாதம் பயிலும்
ஆதி தேவனைக் கேதார நாதனை
அமையா வருள்சே ருமையா ளர்ச்சித்
திறைவன் பாகங் குறைவறப் பெற்ற
தேவருங் கதையை யாவருங் கேண்மின்

முடிவு :

கேதார நாதன் கிளர்கதையை மாநிலத்தில்
ஆதார மீதென் றவரே காதலாற்

போர்மாதுஞ் செங்கமலப் பூமாதும் நாமாதும்
பார்மாதும் நல்கும்படி
ஆதார மற்றவர்க் காதார மாகிய
கேதார நாதன் கிளர்கதையைப் பூதலத்தில்
கற்பார்கேட் டின்புறுவார் கண்ணுத லோன்றன்
சபையினிற் பாரருளா நிறைந்து

கேதார விரத கதை முற்றும்.

இந்த பதினாலாமேடு கிழிந்ததினால் நான் எழுதினேன் அருணாசலம் இதுா வேடெழுதினது என் குருவாகியும் பிதாமகராயுமுள்ள அழகிய கூத்த தேசிக சுவாமிகள்,

குறிப்பு :

இது, கேதாரநாதரைப் பூசிக்க வேண்டிய முறைகளைக் கதையாக கூறுகிறது.



வரிசை எண் : 4026 சுவடி எண்: 18/8-b

## கேதாரவிரத கற்பம்

ஏடுகள் : 3(15-17) கி. எண்ணிக்கை : 120 அளவு : $29\frac{1}{2} \times 3$ செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பார்பதியார் பரமேசுரனைத் தெண்டம் பண்ணி
சுவாமி ! விரதங்களுக்குள்ளே உத்தமமா
யிருக்கிற கேதார விரதத்தி னுடைய பூசா
கற்பத்தைத் திருவுளம் பற்ற வேணும் மென்று கேட்க

முடிவு :

நந்திகேசுரர் கொம்புக்கு நடுவே வைத்து
கும்பசெலத்தினாலே அபிஷேகம் பண்ணி நிவேதித்து
தூபதீபங்கொடுத்து நந்திகேசுரரை
எழுந்தருளப்பண்ணி பிராமண போசனம்
பண்ணிவித்து மயேசுர பூசையும் பண்ணி முடிப்பான்

குறிப்பு :

இது, கேதார நாதரைப் பூசிக்கும் தன்மை பற்றிப் பார்வதி தேவியாருக்குப் பரமேசுரன் கூறினது.



வரிசை எண் : 4027 சுவடி எண் : 1878-C

# இருபத்தொருபத்திர புட்பத்துக்கு வகை

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை : 30 அளவு : 29½×3 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுள்ளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் சிவாய நம ... அலரி
ஓம் சோமாய நம — மகிழ்
ஓம் சங்கராய நம — அறுகு
ஓம் கபர்தினே நம — ககத்தி
ஓம் அந்தகாந்தாயநம — நந்தியாவர்த்தம்

முடிவு :

ஓம் ருத்ராய நம — கோங்கு
ஓம் பற்காய நம — செவ்வந்தி
ஓம் பவகாரிணே நம — தாமரை
ஓம் கேதார நாதாய நம — கொக்கிறகு, மந்தாரை
ஆக மந்திரம் — 21
ஆக புட்பவகை — 21

குறிப்பு :

இதில், சிவார்ச்சனையும் அதற்கான பூக்களின் வகையும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4028 சுவடி எண் : 1878-d

# அருச்சனை மந்திரம்

ஏடுகள் : $\frac{1}{2}$ கி. எண்ணிக்கை : 30 அளவு : $29\frac{1}{2} \times 3$ செ.மீ

பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் சிவாய நம
ஓம் சோமாய நம
ஓம் சங்காரய நம
ஓம் கபற்தினே நம
ஓம் அந்தகாந்தாய நம

முடிவு :

ஓம் சறுவா்ய நம
ஓம் ருத்திராய நம
ஓம் பற்காய நம
ஓம் பவகாரிணே நம
ஓம் கேதாரநாதாய நம
ஆக மந்திரம் — 21

குறிப்பு :

இது முன்கூறிய, கேதார நாதரை அருச்சிக்கும் மந்திரங்கள்.



வரிசை எண் : 4029 சுவடி எண் : 1878-e

# வேதமந்திரம்

ஏடுகள் : $\frac{1}{2}$ கி எண்ணிக்கை : 30 அளவு : $29\frac{1}{2} \times 3$ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் சிவாய நம
ஓம் ரிஷப வாகனாய நம
ஓம் விசுவேசுராய நம
ஓம் சிறி கண்டாய நம
ஓம் வாம தேவாய நம

முடிவு :

ஓம் புரகாய நம
ஓம் காலகாலாய நம
ஓம் கெங்காதராய நம
ஓம் கேதார நாதாய நம
ஓம் சிவகுருவே நம
ஆகமந்திரம் — 22

குறிப்பு :

இது, கேதார நாதரைப் பூசிக்கும் வடமொழி மந்திரங்கள்



வரிசை எண் : 4030 சுவடி எண் : 1878-f

## தேவி பூசை கற்பம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 29½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

உதையத்திலே ஸ்நானம் பண்ணி
நித்திய கரும முடித்து ஆசனத்திலே யிருந்து
நியாசம் பண்ணி பிராணப் பிரதிஷ்டை
தியாசம் பண்ணி மூலத்தினாலே சாமான்னிய
அர்க்கியம் தாபித்து தன்னையும் பூஜாதிரவியங்களையும்
புரோட்சித்து

முடிவு :

செபம் தற்பணம் ஓமமும் பண்ணி
பத்தானாள் தசமி யன்றைக்கு
உத்தியாபனம் பண்ணி பிராமண
போசனமும் மாயே சுர பூசையும் பண்ணி
முடிக்கவும்

குறிப்பு :

இதில், தேவியைப் பூசை செய்யும் முறை கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4031 சுவடி எண் : 1878-g

# தேவி அருச்சனை மந்திரம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 120 அளவு : 29½×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவ சக்தியே நம
திறிலோக நாயகியே நம
யாமளையே நம
மூல காரணியே நம
நீலாயியே நம

முடிவு :

நிலயாயை நம
புத்திர க்திறிய நிவாசினியே நம
சதுர்ச்சி றேயாய நம
திறிய கேதாயை நம
விந்துஞ்ச கிரிவாசினியே நம

அஷ்டோத்தர சதம் முற்றும்

குறிப்பு :

இது, தமிழிலும் வட மொழியிலும் கலந்த அருச்சனை. தேவிக்குரியது.

வரிசை எண் : 4032 சுவடி எண் : 1878-h

# விநாயகர் பூசை

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை : 20 அளவு : 29½×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பிள்ளையாரைப் பீடத்தில் எழுந்தருளப் பண்ணி
அபிஷேகம் பண்ணி கணபதி ஆசனாய நம
கணபதி மூர்த்தியே நம கணபதியே நம என்று
பூஜித்து

முடிவு :

வக்கிர தந்தாய நம, சூர்ப்ப கர்ணாய நம
ஏரம்பாய நம கந்த பூர் வஜாய நம
யென்று அர்ச்சனை பண்ணி செவித்துச்
சாத்தி நமஸ்காரம் பண்ணி தோந்திரம் பண்ணி
பரா முகார்க்கியம் கொடுத்து உத்தியா பனம்
பண்ணி முடிக்கவும்.

குறிப்பு :

இது, பிள்ளையாரை வழிபடும் முறை



வரிசை எண் : 4033 சுவடி எண் : 1878-i

# சரசுவதி பூஜை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 100 அளவு : 29½×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சரசுபதியை கிழக்கு முகமாகுதல்
தெற்கு முகமாகுதல் யெழுந்தருளப் பண்ணி
ஆசனத்திலே யிருந்து சரசுபதி
அனுட்டானம் பண்ணி

முடிவு :

அர்ச்சனை பண்ணி சேவித்துச் சாத்தி
நமஸ்காரம் பண்ணி இஷ்ட காமியங்கள்
விண்ணைப்பஞ் செய்து மறுநாளும் யிப்படி
பூஜித்து சறுவ வித்தியா வாசினியே நம
வென்று உத்தியாபனம் பண்ணி ஏடெடுக்கவும்

குறிப்பு :

இது, ஏடுகளை (சுவடிகளை) வைத்து சரசுவதி பூசை செய்யும் முறையினைக் கூறுகிறது.



வரிசை எண் : 4034 சுவடி எண் : 1878–j

## சுப்பிரமணியர் பூசை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 29½ × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

ஓம் சுப்பிரமண்ணியாசனாய நம
சுப்பிரமண்ணிய மூர்த்தியே நம
சுப்பிரமண்ணியாய நம
சுப்பிரமணிய யீசானாய நம

முடிவு :

ஓம் கசவல்லி யே நம
ஓம் வள்ளி நாயகியே நம
ஆக மந்திரம் 35-ம் முற்றும்.

குறிப்பு :

இது, சுப்பிரமணியர் அருச்சனை மந்திரம்.

வரிசை எண் : 4035 சுவடி எண் : 1878 k

# சுப்பிரமணியர் பாலாயந்திரம்

ஏடுகள் : ½ கி. எண்ணிக்கை : 30 அளவு : 29½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மாந்திரீகம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் ஆம் ஔம் ஹாம் ஸ்ரீம்
ஆரோம ஐயும் கிலீயும் சௌம்
அம் சாம் ஸ்ரீம்

முடிவு :

உச்சாடய துட்ட துட்ட நிக்கிரக நிக்கிரக
ஆவேசய ஆவேசய சீக்கிரம் சீக்கிரம்
ஐயும் க்லீம் சௌம் சிவ சுப்ரமண்யா சுவாகா,
குமரனே தெய்வம்.

குறிப்பு :

இது, முருகனை முன்னிலைப் படுத்திச் செய்யும் மந்திரங்கள்



வரிசை எண் : 4036 சுவடி எண் : 1878-l

# அக்கினி காரியம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 200 அளவு : 29½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆசனத்திலே யிருந்து கரநியாசம் பண்ணி
அற்கிய முதலானதை யிடப்புறத்திலும்,
ஓம திரவியுங்களை வலப் புறத்திலும்
வைத்துக்கொண்டு

முடிவு :

இஷ்ட தெய்வத்தை ஆவாகனம் பண்ணித்
தனக்கு வேண்டுமளவும் ஓமம் பண்ணி
இஷ்ட காரியங்களை விண்ணப்பஞ் செய்து
பிரார்த்தனை பண்ணி உத்தியாபனம் செய்து
முடிக்கவும்.

அக்கினி காரியம் முற்றும்.

குறிப்பு :

இது, தினந்தோறும் காலையில் தீ வளர்த்து வழிபாடு செய்வது.



வரிசை எண் : 4037 சுவடி எண் : 1878—m

## தற்புருஷ முக சக்கரம் முதலியன

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : 29½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள்: மாந்திரீகம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

யநவாஸிம் அகோர பஞ்சாக்கரம்
இது செவிக்க எல்லா உச்சாடன முமாம்
ஹம் சிவாய நம பஞ்சாக்கரம் செவிக்கப்
புத்திர ருண்டாம்.

முடிவு :

ஓம்ஸிம் சிவாய ஸிம் க ஸிம் ஓம்
செவிக்கச் சுவைக ளெல்லாம் அறியலாம்
லாம் க்லீம் வம் கணையும் க்லவ்வும்
கலாகாமி வாய நம

குறிப்பு :

இதில், தற்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோசக சாதம், ஆகிய சிவ பெருமானுடைய முகங்களின் பெயரால் மந்திரங்கள் காணப்படுகின்றன. ஈசான முகம் காணப்படவில்லை.

வரிசை எண் : 4038 சுவடி எண் : 1878-n

# செப்பறை ஊடல்

ஏடுகள் : 2½ கி. எண்ணிக்கை : 120 அளவு : 29½×3 செ மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : ஊடல்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வெண்பா

சாந்தமென நீறணியுஞ் சாலியா டீசுரர்க்குங்
காந்திமதி யுமைக்குங் காசினியில்—ஆய்ந்ததமிழ்
யேச லியம்ய யெழிற்செப் பறைமருவும்
பூச(ல்)மத வாரணத்தைப் போற்று

முடிவு :

திரிபுர மெரித்தார் செய்த பிழையெலாம் பொறுத்தோந் தீர
பெரியனாங் கோபந் தீர் பிரான்பரி சனத்தார் தம்மை
தாதிமார் கையில் வாளைத் தடையினா லடிப்போ மென்று
மாதுமை ஊடல் நீங்கி வள்ளல்பா லினிது சேர்ந்தாள்.

செப்பறை ஊடல் முற்றும்.

குறிப்பு :

இது, நெல்லை மாவட்டம், ராசவல்லிபுரம் எனும் ஊரில் எழுந்தருளியுள்ள சிவபெருமானும், உமையம்மையும் ஊடியதாகப் பாடப்பட்டதாகும். இவ்வூர் சிவன் கோவிலிலுள்ள நடராசர் அம்பலத்தின் மீது செம்பு ஓடுகள் (சிதம்பரம் தங்க ஓடுபோல) வேயப்பட்டிருப்பதால் இதற்கு செப்பறை என்றும் பெயராயிற்று.



வரிசை எண் : 4039 சுவடி எண் : 1878-o

# அகிலாண்டவள் ஊடல்

ஏடுகள் : 1½ கி எண்ணிக்கை : 80 அளவு : 29× ½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : ஊடல்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பொங்குலவு சீராசை புண்ணியற்கும் பூங்கொடிக்கும்
நங்குலவு யேசல் நிகழ்த்தவே — மிங்குலவு
சிற்பறையா ளெங்கு நிறை செல்வியகி லாண்டமருள்
கற்பகச்செல் வக்களிறே காப்பு.

முடிவு :

வேதனாயகனார் சொல்ல விளங்கிய நாவனூரர்க்
ஆதி னாயகன் முன்கூற அகமலர்ந் தூடல் நீங்கி
பேதமைசெய் தீருங்கள் பெரும்பரிசனத் தாதம்மை
தாதிமார் கையில் வாளைத் தடையினால் அடிப்போ மென்று
மாதுமை ஊடல்நீங்கி வள்ளல்பா லினிது சேர்ந்தாள்.

ராசவல்லிபுரம் ஊடல் முற்றும்.

குறிப்பு :

இது, நெல்லை மாவட்டம், ராசவல்லிபுரத்து எழுந்தருளியுள்ள அம்மை அதிலாண்டேசுவரி மீது பாடப்பட்ட ஊடல் போலும். முதல் வெண்பாவில் ஏசல் என்றும், தலைப்பில் அகிலாண்டேசுவரமி ஊடல் என்றும், இறுதியில் ராசவல்லிபுரம் ஊடல் என்றும் காணப்படுகின்றன.



வரிசை எண் : 4040 சுவடி எண் : 1878-p

## அகிலாண்ட நாயகி பேரில் ஊஞ்சல்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 29½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அழகியகூத்தன் பொருள் : ஊசல்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நிஷ்களமாகிய விமலன் ராசை மீதில்
நீடுயிர் களீடேறச் சகள மான
அக்கினீசுரர் கனக சயில மீன்ற
அகிலாண்ட நாயகியை அமரர் போற்ற
× × × × × காப்பதாமே.

முடிவு :

சதுமறை யந்தணர் சைவ சமயம் வாழ்கச்
சத்த மேகங்கள் பொழி தரணி வாழ்க
விதிமுறை செங்கோ லரசர் மன்னி வாழ்க
விளங்குஞ் செல்வ ராசைநகர் மென்மேல் வாழ்க
துதிசெய் யழகிய கூத்தன் கவிதை வாழ்கத்
தொண்டு செய்யும் அடியவர்கள் துலங்கி வாழ்க
அதிக வாழ்வுடைய திரு அக்கினீசர் அகிலாண்ட நாயகியோர்
ஆடிருஞ்சல்.

திருச்சிற்றம்பலம்.

குறிப்பு :

இதில், அழகிய கூத்தன் கவிதை என்றிருப்பதால் முன் சுவடிகளும் அழகிய கூத்தன் பாடியதே போலும் எனத் தோன்றுகிறது. இதில், அம்மையுடன் அப்பர் அமர்ந்து ஊசலாடும் அழகு கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4041 சுவடி எண் : 1878-ஏ

# திருப்புகழ்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 120 அளவு : 29½×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அருணாகிரியார் பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

இருந்த வீடுங் கொஞ்சிய சிறுவனும் உறவோரும்
யிசைந்த வூரும் பெண்டிரு மிளமையும்—வளமோதான்
விரிந்த நாடுங் குன்றமும் நிலையென மகிழாதே
விளங்குதீபங் கொண்டுனை வழிபட-யருள் வாயே

முடிவு :

யெதிர்வரு முதார சூர னிரு பிளவ தாகவே
அயியல்பொடு கடாவுதீர் குமரேசே
யினியான சொல்கீரனோது தமிழை
யுனைநாடியோதும் மெளியவர்கள்
வாரமான — கதிர்வேலர்

நதியுடனராவு பூணு மாறூட குமாரனான
நடைபெறு கடூரமான மயில் வீரா
நகை முகைவினோ நாரி குறமினை
யெனாளு மேவு நவமணி புலாவு
மாரப் — பெருமாளே !

குறிப்பு :

இதில், இருந்த வீடு, கருப்பத்தூரிற், துள்ளுமத வேட்கை, நீலங்கொள் மேகத்தின், மருக்கு லாவிய,எனையடந்த குட்டம், உருவே செறித்த,மாலையலைந்து, இசைந்த வேலும்,மதிதனையிலாத எனத் தொடங்கும் திருப்புகழ் பாடல்கள் உள்ளன. பாடபேதங்கள் காணப்படுகின்றன.



வரிசை எண் : 4042 சுவடி எண் : 1879-a

## செவ்வந்திப்புராணம்

ஏடுகள் : 67 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 27 × 8½ செ.மீ
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : சைவ எல்லப்ப நாவலர் பொருள் : தலபுராணம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவ துணை.

திருவாக்குஞ் ......... கூப்புவர் தங்கை
சிவந்திப் புராணம் - திருமலைச் சருக்கம்

திருசிரகிரியுறை செம்மலார் கதை
யுரை செய்பசுந்
தமிழுதவி செய்யுமால் மரகதமணி
நிரையனைய
வண்டெனுங்கரை
பொருகடா மலைக்கமலப் பாதமே — 1

முடிவு :

இனியவிந்தக் கதையி லொன்று படித்த பேர்க
ளிருசெவியி லேற்றவர்க ளெழுதினோர்கள்

மனையிடத்துப் பரிகரித்து வைத்தபேர்கள் படித்தவருக்
குறையுளுண்டி வழங்கினோர்கள் தனமிகுதி
நெடுவாழ்க்கை யடைவர் நல்லதனையரும் பெறுவர்
சிவபதமுஞ் சார்வார் னலனுக்காதாவ மெய்தாதல்
கைசோர்ந்த முறையினிதிருந்த வகற்றிற்றானே — 54

தாயான சருக்கம் முற்றும் ஆக சருக்கம் 11-க்கு விருத்தம் 518
தாயான செல்வர் பாதாரவிந்தமே கெதி மட்டுவார் குழலம்மன்
பாதார விந்தமே கெதி

காலம் :

விகாரி வருஷம் அற்பிசை மாதம் 27-ந் தேதி புரவாரனாள் திசமி சதைய நெட்சேத்திரமுங்கூடின சுபதினத்தில் சுவாமினாதன் செல்வந்திப் புராணம் எழுதி நிறைந்தது.

முற்றும்
திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

'சிவந்திப்புராணம்' என்று தலைப்பிடப்பட்டுள்ளது. இறுதியில் செவ்வாந்திப் புராணம் என்றுளது. அச்சாகியுள்ளது. திருச்சிராப்பள்ளித் தலபுராண மாகுமிது. பதினோறு சருக்கங்களையுடையது. சருக்க அட்டவணை கடைசி ஏட்டில் உள்ளது. அதன் பின்புறம். செப்பறை குருமூர்த்தம் பொன்னம்பல திருஞான தேசிகன் துணை. என்றுளது.



வரிசை எண் : 4013 சுவடி எண் : 1879-b

# சைவசோடஸ கிரியை

ஏடுகள் . 3 கி. எண்ணிக்கை : 50 அளவு : 27 × 3½ செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அக்னி முகவிதி ருச்சதே !
சுத்த ஸ்தானமான ஸ்தலத்திலே
சமகளமாக மணல் பரப்பி
ஓடு புல் முதலானவை எல்லாம் ஆராய்ந்து

முடிவு :

இதில் முன்னூத்து நாலு நாள் விலக்கு நின்றநாள்
பனிரெண்டில் ரெட்டித்த நாளான ஓரதித்த நாளென்பன
சுவரதி, மூல, ரோகிணி, ரேவதி உத்திர மூன்றும்
சதையம், ஹஸ்தம் இவை விசேஷ உத்தமம்

குறிப்பு :

இதில், சைவ காரியங்கள் செய்யுமுன் 16 வகையான செயல்கள் செய்ய வேண்டுவன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4044 சுவடி எண் : 1879-c

# சிவ கோத்திரசைவ விவாக சடங்கு காசிபரிஷி வசனம்

ஏடுகள் : 5 கி எண்ணிக்கை : 150 அளவு : 27 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : காசிபரிஷி பொருள் : சைவ
தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : கிரந்தம்.

தொடக்கம் :

விவாக வேதிகை –வது அடி நீளம், 3-வது அடி அகலம்,
2 அடி உயரம். இப்படி வேதிகை கல்பித்து மேலே
பூம்பந்தரிட்டு அலங்காரம் பண்ணி

முடிவு :

விசேட வசனம்.
ரதஸ்தம் ரிஷிபாரூடம் சந்தனாலிபக தாண்டவம் !
ப்லவஸ்தம் சங்கரம் த்ருஷ்ட்வா புனர் ஜன்ம னவித்யதே !

குறிப்பு :

இது சிவகோத்திரர்களுக்குரிய, சைவத் திருமணச் சடங்கினைக் கூறுகிறது.

வரிசை எண் : 4045 சுவடி எண் : 1879-d

## சந்நியாசி ஆதீன குரு அபிஷேக விதி

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 150 அளவு : 27 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : நந்திதேவர் பொருள் : சைவதோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆத்ராசுத்தி முதலாகச் சிவாத்து
விதாந்தகம் வரைக்குங் கற்று கேட்டுத்
தெளிந்து நிட்டை கூடின மகாத்மாக்களான
சன்னியாச குரு ஆதீனத்திலே

முடிவு :

சிந்தை செய்திருக்க வென்று நந்திகேசுரர்
அருளிச்செய்த திருவாக்கியப்படி ஒரு குரு
பிரதிட்டை செய்தால் ஆயிரத்தெட்டு
சிவப்பிரதிட்டை செய்த பலனடை வார்க
ளென்றவாறு.

சிவமயம்.
விசலாட்சியம்மாள் துணை

குறிப்பு :

இது, ஆசிரமத்துக்குக் குருவை நியமிக்கும் போது செய்ய வேண்டிய ஆசார்யாபிஷேகமாகும்.



வரிசை எண் : 4046 சுவடி எண் : 1879-e

## ருதுபலன்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 100 அளவு : 27 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஞாயிற்றுக் கிழலமக்ரு
அதிவாரம் ரிதுவானால் ராட்சதகுலம், ஆண் பெண்
என்கிற தேவதையளுக்கும் அதின் பலன்
தலைநோக்கும் எரிப்புண்டாகும்

முடிவு :

இந்தப்படி ஏழுவாரமும் பார்த்துக் கொண்டு
அந்தப் படியே அனுகூலம் பண்ணும்
காத்திமதி சகாயம்

குறிப்பு :

இதில், இன்ன கிழமையில இன்னபலன் என்று கூறப்பட்டுள்ளது. கடைசி ஏட்டில், இன்ன நட்சத்திரத்தில் ருதுவானால் இன்ன பலன் என்றும இத்தன்ாவது சாமத்திலானால் இன்ன பலனென்றும் காணப்படுகிறது



வரிசை எண் : 4047 சுவடி எண் : 1879-f

## தெருட்சி பலன்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 200 அளவு : 27 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஞாயிறு நோய்
திங்கள் கெறுவி
செவ்வாய் துக்கம்
புதன் புத்தி

குறிப்பு :

இப்படி இந்த இந்தக் கிழமை களில் இந்த இந்த
பட்சி பாடு என்று பெயர் இந்தப்
படுபட்சி வந்த நாள்களில் யேதொரு
காரியமும் முயற்சிக்கக் கூடாது.
என்றவாறு

குறிப்பு :

இது, முன்சுவடி போல ருதுபலன் குறிப்பதோடு, பஞ்சாங்கம் பார்க்கும் விதம், ராகுகால மறிய, குளிகைவேளை, பஞ்சபட்சி, பூருவபட்சம், படுபட்சி ஆகியன உள்ளன.



வரிசை எண் : 5048 சுவடி எண் : 1879-g

# தேவாரம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை: 120 அளவு : 27 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : ஞானசம்பந்தர் பொருள்: தோத்திரம்

முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்
திருவிளையாடல்

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக்கை மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூத நாயகனால்
வேதமும் பொருள்களும் அருளி
யங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த
வாலவா யாவது மிதுவே ! —1

முடிவு :

பிணிகெட நல்கும் பெருந்துறை யெம்
பொருளாளன் பெண்பாலுகந்து
மணிவலை கொண்டு வான்மீன் விசிறும்
வகையறிவா ரெம்பிரானாவாரே !

குறிப்பு :

மதுரையில் சொக்கேசன் ஆடிய திருவிளையாடல்கள் வரும் தேவாரத்தினைத் தொகுத்து சில (பாடல்கள்) எழுதியிருப்பது.



ரிசை எண் : 4049

சுவடி எண் : 1879-h

# நிர்வாண தீட்சா விதி

ஏடுகள் : 42 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 27×3½ செ.மீ. பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : சைவ தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து: கிரந்கம்.

தொடக்கம் :

பூர்வே சாயங்காலத்திலே அங்குரார்ப்பணம்
பண்ணும்படி மடக்கு பாலிகை நாலு இது
நாலு கோடிகளிலும் வைத்து பின்பு அகறப்
பாலிகையினாலும், இது, பூர்வ, தட்சிண, பச்சிம, உத்தர
இவை கிழக்கே உடக்கடையவும்

முடிவு :

சிவதத்துவத்தை ஓம் ஹௌம் சிவதத்வாய நம : என்று
உபஸ்தானம் பண்ணி. அர்ச்சித்து, மனசினாலே
உச்சரிக்கப்பட்ட மூலத்தால் மானஸ வைகவ்ய சுத்தியின்
பொருட்டு நூற்றெட்டு ஆகுதி பண்ணி பின்பு, திரோதான
சத்தியினுடைய திப்ராதான நிவிருத்தியின் பொருட்டு
மூலத்தால் ....... ...... ...

குறிப்பு :

இது, சமய தீட்சை, விசேட தீட்சை ஆகியவை பெற்ற பின் மூன்றாவது தீட்சையாகப் பெறப்படுவது. தமிழில் 'நுண்மை தீக்கை' என்பர். துறவு நிலையின் தொடக்கமாகுமிது.



வரிசை எண் : 4050

சுவடி எண் : 1879-j

# சேத்திர சிவநாமப் பஃறொடை

ஏடுகள் : 19 கி. எண்ணிக்கை : 700 அளவு : 27×3½ செ.மீ. பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர்: குரு வேலப்ப தேசிக மூர்த்தி பொருள் : சைவ தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

நன்மை மிகுந்த சிவநாமப் பஃறொடையைச்
சொன்மொழியி னாலே துதிப்பதற்குப்—பன்மைத்
திருப்பதிக டோத்நதிகள் களிற்றின் றானை
விருப்பதிக மாகநெஞ் சே.

நூல்

பொன்னி வடகரையிற் பொன்னம் பலக்கோயின்
மன்னுசிவ காமி மதுழ்ந் தேத்த—நன்னடன
மாடுஞ் சபாபதியே யம்மையுமை கண்குளிர
நாடுந் திருமூல நாயகா.

முடிவு :

— தேகமாய்ப்
பந்த மறவனையும் பாக்கியமும் பேரன்புந்
தந்தருளுன் றாளே சரண். முற்றியது. திருச்சிற்றம்பலம்

சரணமென்றுன் றாண்மலரைச் சாரு மெளியேற்குன்
னருளையன்றி வேறுமா றுண்டோ—கரணங்
கடந்த பரமானந்தக் கண்ணுதலே யுன்பே
ரடைந்த சொற்பா மாலையுங்கொண் டாள்.

சேத்திரச் சிவநாமப் பஃறொடை முற்றியது
பன்னிரு நயனத் தறுமுகத் தமிர்தின் சரணமே கெதி.

சோழ தேசம் காவேரிக்கு வடகரைத்தலம் 63. தென்கரை 128, ஆக 191 ஈழம்—2 பாண்டி—14 மலைநாடு—1 கொங்கு நாடு—7 நடு நாடு —22 தொண்டை நாடு—32 துளுவ நாடு —1 உத்தரம்—4 இந்த திருப்பாட்டுப் பெற்றதலம்—274 இந்த சேத்திர சிவநாமப் பஃறொடை பாட்டு அருளியது திருவாவடுதுறை பதினோராங் குரு வேலப்ப தேசிக மூர்த்தி யருளிச் செய்தது.

வையம் நீடுக மாமழை மன்னுக
மெய்வி ரும்பிய வன்பர் விளங்குக
சைவ நன்னெறி தான்தழைத் தோங்குக.
தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே.

குறிப்பு :

இதில், 15-வது ஏடு இல்லாததால், அதற்குப் பதிலாக கடைசியில் 2 ஏடுகளில் எழுதிக் சேர்க்கப்பட்டுளது. மூவராலும் பாடல் பெற்ற தலங்கள் சிறப்புக் கூறுகின்றது.



வரிசை எண் : 4051

சுவடி எண் : 1879-j

# சிவஞான சித்தியார்

ஏடுகள்: 4 ஏ. எண்ணிக்கை : 150 அளவு : 27 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர் : அருணந்தி சிவச்சாரியர் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம் குருவே துணை.

அறுவகைச் சமையத் தோற்கும்
அவ்வவர் பொருளாய் வேறாங்
குறியது வுடைத்தாய் வேதாக மங்களின்
குறியிறந்தங் கறிவினி லருளால்

முடிவு :

காண்டுந் தொல்வித்தான மிரண் டிருபத் திரண்டாங் கருதிலிவை
யாண்டு மொழி வரிவை யெல்லா மனக்கி லறுபத்தைந்தாகும் — 19
அளவை முற்றும்

ஸ்ரீமத்தே சொக்கலிங்கம் துணை
சொக்கலிங்கம் துணை

குறிப்பு :

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் இதுவும் ஒன்று. இது சுபக்கம், பரபக்கம் என இரண்டு பகுதிகளையுடையது. இது, சுபக்கத்தில் முன்பகுதி மட்டும் ஆகும்.



வரிசை எண் : 4052

சுவடி எண் : 1879-k

# அகத்தியர் பெருங்குழம்பு

ஏடுகள் : 4 ஏ. எண்ணிக்கை : 150 அளவு : 27 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பருவதந் தன்னில் வாழும் பரமனா ரருளினாலே
பொறுமையோன் கிணைசன்பாதம் போற்றினேன் உலக மீதில்
உறுமையாஞ் சனங்க ளுக்கு உண்மையாய் நோவு வந்தால்
அருமையார் தீர்க்க நல்ல அகத்திய ருரைத்த தாமே ! — 1

முடிவு :

சித்தனென்ற விபரத்தைத் தெளியச் சொல்லுஞ்
சிவாயநம யநமசிவா மசிவாயந
யுத்தமனே நமசிவாயா வயநமசி யென்று
ஒருலட்சம் செபித்திடவே மூலங் காண்பாய்
சத்தரிஷி சாபங்கள் நிவிர்த்தி யாகுஞ்
சத்தசா கரங்களெல்லாந் தனக்குள் ளாகும்
வித்தகனாய்ப் பேறுபெற்று வாழ்வாய் நீயும்
மேலான பெருங்குழம்பு முற்று முற்றே !

திருச்சிற்றம்பலம்
கபாலீசுவரர் துணை

குறிப்பு :

இது, மருத்துவத்தைச்சாரும் மருந்தும், மாந்திரிகமுமாக உளது.



வரிசை எண் : 4053 சுவடி எண் : 1879-1

## சரநூல்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 400 அளவு : 27 × 3½ செ.மீ

பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை (சங்கரனார்) பொருள்
சோதிடம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

ஹரி : ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை

உமைமாதுக் கீச னுரைத்த சரனூல்
அமையாப் பொருளை யறிவிப் பமையாப்
புவிமடந்தை பூமடந்தை போர் மடந்தை யான
கவிமடந்தை யிக்கவினோர் காப்பு — 1

பின்பிறப்பு பிறக்கிலுஞ் சற்குரு முகத்தால்ப்
    பொருத்திய மெய்சரனூலைப் புகலக் கேட்டு
நன்குணர்ந்து வழிநடப்போர் மனிதரெனும்
    நாமவரென்று இரண்டில்லை நல்லாய் கேளே
மின்பிறக்குஞ் செந்தமி ழலையடுத்த தெல்லா
    மிகுதழலின் வடிவாகி விட்டார் போல
தன்பிறப்பினிய பிறப்பாவரே சாகார்
    சடைமேலே நாமணிந்த பிறையொப் பாரே ! ... 51

மீனாம்பிகை அம்மாள் பாதாரவிந்தமே துணை
யிந்தச் சர நூல் எழுதினேன் திருச்சிற்றம்பலம் எழுத்து

குறிப்பு ;

இது, எமது சுவடி எண் 720/D-1458 போன்றது.



வரிசை எண் : 4054 சுவடி எண்: 1879-ந

# சர நூல்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 300 அளவு : 27 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை(பரமேசுவரன்) பொருள் : சோதிடம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் முன்னிற்க குருவே துணை
குருமொழி விபரம்
பரமேசுபரன் திருமுக னோக்கிப் பார்ப்பதி யம்மன்
கேழ்க்கிறம உத்திரம் :
சுவாமி வாக்குனாலே நினைவினாலே நாலு
வேதம் ஆறு சாத்திரம் பதினெண் புராணம்
பஞ்சாங்க மத்தபல சாத்திரத்தினாலேயும் விசாரிச்சுச்
    சொல்லலாம்

முடிவு :

சகல காரியஞ் செயமாம். இறப்பும் பிறப்பு மில்லாமல்
பரம ரகசியம் சாயுச்சியம் பெறு சித்தியாம். இகத்திலே

பாக்கியமும் பரத்திலே முத்தியும் பெறுவா ரொன்று
பரமகுரு அனுக்கிரகம் பண்ணினது
சர சாத்திர முற்றும்.

காலம் :

குரோதன வருஷம் தை மாதம் 2-ந் தேதி சோமவாரனாள்
எழுதி நிறைந்தன.

குறிப்பு :

இது, முன் பிரதி போன்ற தெனினும் உரை நடையில் உளது



வரிசை எண் : 4055 சுவடி எண் : 1879-m

# பல்லி விழுந்தால் பலன்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : $27 \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்
நிலைமை : நல்ல நிலை முழுமை முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நடுத் தலையில் விழுந்தால் கலகம்
முடி மேல் விழில் மரணம்
நெத்த மேல் விழில் சம்பத்து
வலது புருவத்தில் விழில் சுகம்

குறிப்பு :

வுண்டான கனகத்தை யெடுத்துக் கொண்டு
பரிவான முடிதனை யடைத்துப் போடு
விண்டான விபூஷணந்தான் வைத்த வைப்பு
மேதினியி னடவாதே மலையி லேறே ! —2

முடிவு :

இதில், பல்லி விழும் பலனேயன்றி, துடி நூல் (அதாவது உடலுறுப்புக்கள் துடிப்பது) பகுப்பும் உள்ளது. பல்லிநூல் விரிவாக உளது. இதன் பின்னர் 4 உதிரி சிறு ஏடுகள் உள்ளன.

வரிசை எண் : 4056

சுவடி எண் : 1880

# சிவப்பிரகாசம் — உரை

ஏடுகள்: 150 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 29 × 4½ செ.மீ

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்

பொருள் : சைவசித்தாந்தம் நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றற்றது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

"...... ச் செலவரிதாய்ச் செல் கதியாய்ச்
சிறிதாகிப் பெரிதாய்த் திகழ்வது .........
...... . தெளிந்து ளோரே. எ.து. பலகலை யாகம
வேத மியாவையினுங் கருத்துப்ப

முடிவு :

போகங்க ளருந்தும் புரிந்து, எ.து.
பிராரத்தம் பொசிக்கச் செய்தே
யாகாமிய மேறு மெனக் கொள்க. இதனாற் சொல்லியது
ஆற்ம வர்க்கமும் ........... நித்தியமென்று
மனாதியிலே .......................

குறிப்பு:

ஏடுகள் சிதிலமாயுள்ளன. தொடக்கத்தில் 15 ஏடுகள் இல்லை இறுதி ஏடுகளும் இல்லை.



வரிசை எண் : 4057

சுவடி எண் : 1881-அ

# திருப்புகழ்

ஏடுகள் : 35 கி. எண்ணிக்கை : 2400 அளவு : 20 × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள்

சைவ தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக கணபதி துதி.

எல்லாரு ஞானத் தெளிஞரே கேளீர் சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமே — பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமே கானமயில் வீரன்
திருப் புகழைக் கேட்கும் செவி.

நூல்

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக னடி பேணி

முடிவு :

மாகதவா காரவயறு மிரணிய
வாகரா வேதனும் வசு வேத்து மாகார
வீசனும் மடி பேண
மயித்துறை வாழ்வே விநாயக மலையுறை வேளூர்
மகாரத வனசர ராதார மாகிய — பெருமாளே! —99

குறிப்பு :

அருணகிரிப் பெருமான் பாடிய பல பாடல்களில் ஒரு சில ஈண்டு இடம் பெற்றுள்ளன. கூந்தற்பனை ஏடுகளில் எழுதப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4058 சுவடி எண் : 1881-b

## திருப்புகழ்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 200 அளவு : 20 × 4 செ மீ.
பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : அருணகிரியார் பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

முத்தைத்தரு பத்தித் திருநகை
யத்திக்கிற சத்திச் சரவண
முத்துக்கொரு வித்துக் குருபர னென வோது
முக்கட்பர மற்குச் சுருதியில்

முற்பட்டது கற்பித் திருவரு
 முப்பத்துமூ வர்க்கற் றமரூ மடி பேண.

முடிவு :

கனியாகிய திறக்கந்தா வள்ளி நாயகி
 காமுறு மொழி வேலா
சிறக்குந்தாமரை யோடையில்
 மேடையில் நிற்குஞ் சூல்வளை பால்மணி
வீசிய திருச்செந்தூர் சேவகனே
 சுரர் பெருமாளே ! —6

குறிப்பு :

இதில், முன்னதிலல்லாத வேறு பாடல்கள் உள்ளன.



வரிசை எண் : 4059 சுவடி எண் : 1881-c

# தெட்சிணாமூர்த்தி சூத்திரம்

ஏடுகள் : 3 கி எண்ணிக்கை : 100 அளவு : 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் :
மருத்துவம் நிலைமை : நல்ல நிலை முழுமை முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

ஆதி சத்தி சிவமான சோதி காப்பு
 அண்ட மெனும் பூரணத்தின் அருளே காப்பு
சோதியென்ற வாலைமனோன் மனி காப்பு
 சொல்லடங்கா விண்ணொளியின் சுடரே காப்பு

முடிவு :

தெரியாத நிற்மோடர்களுக் கின்னூல் காட்டில்
 சீக்கிரத்தி லுனது தவஞ் சிதறிப் போகும்
பரியான தேசியப்பா தேசியான்
 பாராபரத்தி னருளதனை யேத்திப் பாரே ! —12

குறிப்பு :

இதில், 12 செய்யுட்களே உள்ளன,
கூந்தற்பனை ஏடுகளில் எழுதப்பட்டுள்ளன.



வரிசை எண் 4060 சுவடி எண் : 1881-d

## தாயுமான சுவாமி பாடல்கள்

ஏடுகள் : 30 கி. எண்ணிக்கை : 2000 அளவு : 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : தாயுமான சுவாமிகள் பொருள் : சைவத் தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருபாத முன்னிற்க
பொருள் வணக்கம்

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியை யுண்ணாடு
ஆறுமுகவனை னாறு மலர்கொடு
கூறு மடியவர் பேறு பெறுவரே !
திருச்சிற்றம்பலம்

நூல்

நித்தியமாய் நின்மலமாய் நிட்களமாய் நிராமயமாய்
நிறைவா நீங்காச் சுத்தமுமாய்த் தூரமுமாய்

முடிவு :

தோயாத வறிவாகிச் சுத்தமாகி நிகரில்பசு பதியான
பொருளை நாடி நெட்டுயிர்த்துப் போன பாளினைத்
தல செய்வாம்—12 ஆக வதிகாரம் 13-க்குச்
செய்யுள் 131 சின்மயம்
சச்சிதானந்த குருமயம்.

குறிப்பு :

இதுவும், கூந்தற்பனை ஏடுகளில் எழுதப்பட்டுள்ளது. இதில், பரிபூரணானந்த சிவகுரு வணக்கம், சின்மயானந்தம், நிற்த குரு வணக்கம், அருட்குரு வணக்கம், பரிபூரணானந்தம், சித்தானந்தம், பரமானந்த மகிழ்ச்சி, சிவானந்த மகிழ்ச்சி, ஆனந்த சாட்சரத்காரம், அருட் கூட்டச் சிறப்பு, நித்தியானந்தம், சுகோதைய விலாசம், நிர்மலானந்தம் ஆகப் பதின்மூன்று அதிகாரங்கள் உள்ளன.



வரிசை எண் : 4061 சுவடி எண் : 1881-e

# தெட்சணாமூர்த்தி பாடல்

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை : 600 அளவு : 20×4 செ.மீ

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : தெட்சிணாமூர்த்தி பொருள் வைத்தியம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பார்க்க ஒரு கருச் சொல்வேன் மைந்தா கேளு
பகருகிறேன் அண்டமொன்று வாங்கி வந்து
ஏர்க்கையுடன் முப்பூவைக் கருவா லாட்டி
இன்பமுடன் ரவிமதியு மதிலே சேர்த்து
மார்க்கமுள்ள அண்டமதில்க் கவசஞ் செய்து
மைந்தனே நிலவுப்பை வாரி வந்து
தாக்கவுரு பாண்டமதில் அரைமட் டிட்டு
தானான அண்டமதை அதின்மேல் வையே ! — 1

முடிவு :

கறந்ததொரு பால்போலே அமுர்த மூறுங்
கனிவான அமுதமதைத் தினமுங் கொள்ளு
சிறந்ததொரு பூரணத்தைத் தினமுங் கொண்டு
சிவமான மவுனத்தில் சேற முற்றே ! — 108

குரு பாதார விந்தமே கெதி

குறிப்பு :

இது கூந்தற்பனை ஏடுகளாலானது. இதில், உயர்ந்த மருந்து செய்முறை வகைகள் கூறப்பட்டுள்ளன.

வரிசை எண் : 4062 சுவடி எண் : 1882-a

# சைவப்பிரகாச சமரசம்

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 600 அளவு : 30 × 4 செ.மீ

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள்: சைவ சமயம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சைவக் கிரியாதிகாரர் நிருபணம்

சைவ சமயிகள் சமூகத்துக்கு ஓர் விண்ணப்பம்
தூத்துக்குடி என்றும் திருமந்திர நகரமென்றும் விளங்கும்
நமது ஊரின்கண் வாசஞ் செய்யும் சைவ சமயிகளில் நமது சுபா —
சுபக்கிரியைகளைச் சைவாகம விதிப்படி சமய, விசேட, நிருவாண
தீட்சை பெற்று ஆச்சார்யாபிஷேகமும் பெற்ற சைவாச் சாரியரைக்
கொண்டே செய்யவேண்டு மென்று சிலரும்

முடிவு :

அவ்வாறு செய்து சைவசயத்துக்கும், சைவ சமயிகளுக்கும் நேர்ந் திருக்கும் அவமானத்தை நீக்கும்படி ஆன்றோர்களையும், அவர்களது அறிவுக்கறி வாயிருந்து விளங்கும் சிற்சொருப சிவ பரஞ்சுடரையும் பிரார்த்திக்கின்றோம்.

சுபம். சுபம்.

இந்த நூலின் முதற்பாரம் இச்சபை சைவப்பிரகாச சமரசமென்னும் பேரால் நடைபெறும் போது பதிப்பித்தமையால் அப்பெயரை முகவுரையில் பதிப்பிக்கப்பட்டது. கனகசபாபதி அழகிய கூத்தக்குருக்களய்யர் அவர்கள் புத்திரன் கையெழுத்து,

குறிப்பு :

இது, சைவ சமயத்தவர்களுடைய நன்மை, தீமை காரியங்களுக்கு ஆச்சார்யா பிஷேகம் பெற்ற சைவ சமயத்தலைவர்களே செய்யவேண்டும் என்று வற்புறுத்திக் கூறுகிறது.

இது, அச்சு நூலின் சுவடிப்படியாகும்.



வரிசை எண் : 4063 சுவடி எண் : 1882-b

# வருணாச்சிரம தருமம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 300 அளவு : 30×4 செ.மீ
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : சிவப்பிரகாச பிள்ளை பொருள் :
சைவ சமயம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ் & கிரந்தம்

தொடக்கம் :

வைதிகம் — வருணம் — வருணமாவது பரம்பரையால் உபகரிக்கப்பட்ட ஒழுக்கமுடைமையோடு கூடிய பரிபாக விசேடம் பற்றிய அதிகார பேதமாம்.

முடிவு :

அந்தந்த வருணத்தார் தத்தம்பக்குவத்துக்கேற்ற ஆச்சிரமத்திலதிகரித்துத் தமதிகாரத்துக்கேற்ற கிரியைகளை யனுட்டித்துப் போக மோக்ஷங்களையடைய முயலல் வேண்டும். சுபமஸ்து.

திருச்சிற்றம்பலம்

காலம் :

இஃது யாழ்ப்பாணத்து நீர்வேலி சங்கரபண்டிதருடைய புத்திரராகிய சிவப் பிரகாசபிள்ளை செய்ததாகிய புத்தகத்தின்படி எழுதப்பட்டது. 1078-ஆம் வருஷம் ஆவணிமாதம் 29-ந் தேதி இராசவல்லிபுரம் செப்பறை மடலாயம் பொன்னம்பலக் குருக்களய்யர் அவர்கள் புத்திரன் அருணாசலம் ஸ்வஹஸ்தலிகிதம்.

பொன்னம்பழகுருவே துணை.

குறிப்பு :

இதுவும், அச்சுப்பிரதியின் சுவடிப்படியாகும். இது அவரவர்களுக்குரிய கடமை களைக் கூறுவது.



வரிசை எண் : 4064 சுவடி எண் : 1882-c

# திருக்காளத்திப் புராணம்

ஏடுகள் : 61 கி. எண்ணிக்கை : 3500 அளவு : 30×4 செ.மீ. பக்கத்திற்கு: 13 வரிகள் ஆசிரியர்: கருணை சிவப்பிரகாச சுவாமிகள் பொருள்: தல புராணம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பாயிரம்

சீர் பூத்த பேரொழியாய்ச் சித்துருவாய்
நித்தமாய்ச் சிவமா யொன்றாய்
யேர்பூத்த சத்தாகி நித்தமா யனாதியா
யாண்டுமாகி

முடிவு :

சிந்தா மணியாற் றிகழ்கின்ற சமையப் பொருப்பிற்
புத்தொளிர்
நந்தா வளத்தி னவிரொளித்து நனிவீற்றிருப்பர்
தன் மனைவி
சந்தார் கொங்கை நயன்று யம்பதல்லாற் பிறரைத்
தழுவாதோன
கொந்தார் குழல் வானர மகளிர் குழுமித் தொழ வின்குலவுவ
னாசை —18

குறிப்பு :

இதில், அருச்சுனன் தீர்த்தயாத்திரை பரத்துவாச அத்தியாயம், மலருஞ் சிலந்தியும் பூசித்த வத்தியாயம், பிரம்மா வரம் பெற்றது, காளனும் அத்தியும் பூசித்தது, கண்ணப்பர் சிவ கோசரியார் முத்தியடைந்தது, சிவ மான்மிய முரைத்தது, தீர்த்த விரத பஞ்சாக்கர மகிமை, தீவுகளின் மான்மியம். சம்புத்தீவு மகிமை, கன்மநிருபண முரைத்தது, ஆகிய பத்து அத்தியாயங்களே உள்ளன.



வரிசை எண் : 4065 சுவடி எண் : 1882-d

# உத்சவ பத்ததி

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 30×4 செ.மீ. பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ ஆகமம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : கிரந்தம்

தொடக்கம் :

ஹரிம் கணபதிம் ஸ்கந்தம், சாம்பஞ்ச பரமேஸ்வர : I
வந்தே வாணீம் மகாலக்ஷ்மீம் இஷ்ட கார்யார்த்த சித்தயே॥

முடிவு :

நைவேத்ய தூப தீபம் தத்வா வேதபாராயண பத்த
புராணாதி வாச்ய த்வஜபடம் தத்சூத்ரேண பந்தயித்வா
படஸ்தம் தத்பர்ணாதி நிச்சயேத்

ஊர்வசி தர்பேண ஓம ஹாம் சூர்யாய நம : ஸ்கந்தாய நம :
மேனகாதிருத பூர்ணகும்பே ஓம் ஹாம்

குறிப்பு :

இதில், கோயிலில் விழா தொடங்கு முன் குடியேற்றம் முதலான செயல்கள் கூறப்பட்டுள்ளன. அனுக்ஞை அபிஷேகம், மிருத் சங்கிரஹணம், சோம கும்பஸ் தாபனம், த்வஜபட அதிவாசம, அக்னி காரியம், முதலான தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 4066 சுவடி எண் : 1882-e

## த்வார பூஜை

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 30 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ ஆகமம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : கிரந்தம்

தொடக்கம் :

பூர்வத் வாரே தேசே ஓம் ஹாம் சாந்தி தோரணாய நம :
நீல வஸ்த்ராங்கார பஞ்சதி புஜாஞ்சலி பந்மகம் I
கராள வ(த)னம் ஸ்யாமம்-யேத்வை சாந்தி தோரணம் ॥

முடிவு :

சாவித்ரியை நம : சரஸ்வத்யை நம : ஸ்ரீ ப்ரதாய நம :
சத்யலோகாய நம : சிவலோகாய நம : ராகவே நம :
கேதவே நம : யமாய நம : பாத்யாதிபி : சம்பூஜ்ய.

குறிப்பு :

இதில் (யாகசாலை முதலானதற்கு) வாசல் பூசை செய்யும் முறை கூறப் பட்டுள்ளது.

இதன் பின் வாஸ்து என்ற தலைப்புடன் 3 உதிரி ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4067 சுவடி எண் : 1882-f

# அனுஷ்டான ரக்சியம்

ஏடுகள் : 17 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 30×4 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ ஆகமம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம் திக்கு நோக்கல்

சந்தி வந்தனப் போது உத்தர திசையை நோக்கலால்
முத்தியும், பூருவதிசையை நோக்கலால் புத்தியும், சித்திக்கும்
இனி முன்னையது முத்தியை விரும்பும் சைவர்க்கும்
பின்னையது புத்தியை விரும்பும் வைதிகர்க்கு,முரியனவாம்.

முடிவு :

சந்தியா சத்தியைத் தியானித்ததின்மேற் செய்யப்படும்
இவையே சந்தியாவந்தன மெனப்படும் ஆகலின் இவற்றி
னிரகசியங்கள் மாத்திரம் ஈண்டுரைத்தனம்.
சந்தியா வந்தனத்தினான செய்யப்படுகிற செபம், தோத்திரம்
என்பன இவற்றின் வேறாகலின் அவற்றியல்பு ஈண்டுரைத்திலம்

காலம் :

1810 வருஷம் ஐப்பசி மாதம் 22-ம் தேதி அருணாசலம்
ஸ்வஹஸ்த லிகிதம். அவசரமா யெழுதப்பட்டது.
தாமோதரம் பிள்ளை வதிரி பருத்தித்துறைப் பொலி.

குறிப்பு:

இதில், காலையில் அனுட்டானம் செய்யும், திசை,
நேரம், பலன் முதலானவை கூறப்பட்டுள்ளன.

வரிசை எண் : 4068 சுவடி எண் : 1882-ஐ

# லலிதா சகஸ்ரநாம தோத்திரம்

ஏடுகள் : 20 கி. எண்ணிக்கை : 1300 அளவு : 30×4 செ.மீ.

பக்கத்திற்கு : ர வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவத்

தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : கிரந்தம்

தொடக்கம் :

பொன்னம்பல குரவே நம

அகஸ்த்ய :

அச்வானன மகாபுத்தே ஸர்வ ஸாஸ்த்ர விசாரதே ।
கதிதலோலிதா தேவ்யா: சரிதம் பலதாத்புதம் ॥

முடிவு :

லலிதாப்ரேரிதே ஙநவம் மயோக்தம் ஸ்தோத்ர முத்தம் ।
கீர்த்தயத்வம் இதம் பக்த்யா கும்பயோனே நிரந்தரம் ॥
தேன க்ருஷ்டாமகா தேவீ தவாபீஷ்டம் பிரதாஸ்யதி
இத்யுக்த்வா ஸ்ரீ ஹயக்ரீவோ த்யாத்வா ஸ்ரீலலிதாம்பிகாம்
ஆமக்ன ஹ்ருதய: ஸத்ய : புளகிதோ பவேத்.

காலம் :

1082-ம் வருஷம் கார்த்திகை மாதம் 7-ந்தேதி இராசவல்லிபுரம் செப்பறை மடம் பொன்னம்பல தேசிகரவர்கள் சிரேஷ்டபுத்திரன் அருணசலநாதன் ஸ்வஹஸ்தலிகிதம். சிவமயம் சிவோஹம்

குறிப்பு :

இதில், ஸ்ரீலலிதாம்பிகையின் ஆயிர நாம தோத்திரம் விரிவாக உளது.

இதன்பின்னர், ஆத்மார்த்த பாணலிங்கப் பிரதிஷ்டை, செப்பறை மடாலயம் ஞானபூசாவிதியின் சுருக்கம் முதலான ஏழு உதிரி ஏடுகள் உள்ளன.

வசை எண் : 4069 சுவடி எண் : 1883-a

# சிவரூபம் 25-க்கு வகை

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25×2½ செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

சந்திரதர முமைபாக மிடப — — — — மவிபாகந்
தருபிட்சாடனங் காமதகனங் கூற்றுதைத்த
லுந்து புரஞ் செற்ற — — — — காதரங் கரியை யுரித்த

முடிவு :

வேழ்வியனைத்தினையு முடித்திடு பலமுஞ்
சேர்வான ரோமருரைக்கு மிதழி மணிமுடி யமலன்
வெகுருப மகிமைதானே. — 15

அகிலாண்டகுருபாதமே கெதி

குறிப்பு :

இதில், முதலில் 25 சிவமூர்த்தங்களின் பெயரும் பின்னர் பஞ்சகெவ்விய மகிமையும் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4070 சுவடி எண் : 1883-b

# சிவஞான போத வியாக்கியானம்

ஏடுகள் : 118 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 25×2½ செ.மீ.

பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர்: மெய்கண்டதேவர் பொருள் : சித்தாந்த சாத்திரம்

நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி :ஓம் சுக்லாம் பரதரம் ......... சாந்தயேத்
குருபாதம்
கல்லா னிழல்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே !

கல்லால் னிழல் என்றது கல்லாலின் கீழே யெழுந்தருளியிருந்து அகத்தியன், புலத்தியன் சனகன் சனற்குமாரனென்கிற

முடிவு :

தனையருளால் காண்டல் வானையருளால் நாடலுயிரு நயத்தமுந்தல் மகேச னுயிர்க்களித்த லெண்ணி வழிபட லீறாகப் பொருவரிய சிவஞானமாகியதோ ரின்பப் போதமுறுஞ் சூத்திரத்தின் பொருட்டொகை பன்னிரண்டே.

சிவஞான போத சூத்திரப் பொழிப்புரை
முற்றும்
பொன்னம்பல நாத சிவகுரு பாதமே கெதி
சுபமஸ்து

குறிப்பு :

இது, சைவசித்தாந்த நூல் பதினான்கனுள் முதன்மையானது பன்னிரு சூத்திரங்களையுடையது. இவ்வுரை இன்னாருடையது எனக் கூற இயலவில்லை.



வரிசை எண் : 4071 சுவடி எண் : 1883-c

# ஞான பூசைத் திருவிருத்த உரை

ஏடுகள் : 41(126-166) கி. எண்ணிக்கை : 900 அளவு : 25 × 2½ செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ தோத்திரம் நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கல்லானிழல்மலை ... ... ... நல்லார் புனைவரே ! இதுகாப்பு.
பணித்தவருடன் சந்தி பண்ணினோர்கள் பயில்காலந்
திரிசந்தி பகர்வன கங்குல் புணர்த்திய சூக்கும வுடலாற்
போகந் துய்த்துப் பூதவுடற் போகத்துப் போத நாத ஞுணர்த்திய
போது

முடிவு :

சுதந்தர ஹானியாவது பாசஞ் செடம் அறிக
கூறு நாவே முதலாக வென்ற திருவாக்குங் கண்டு கொள்க — 18

ஞானபூசைத் திருவிருத்தவுரை முற்றும்
பொன்னம்பல குருபாதம் ஸ்ரீதேவ்யை நம :
செப்பறை அய்யர் திருமுறை நன்றாக
குருப்யோ நம :

குறிப்பு :

இது, ஞான பூசை செய்கின்ற முறையினைக் கூறுவது.



வரிசை எண் : 4072 சுவடி எண் : 1884-a

## தொண்டை மண்டலம் கோட்டம், நாடு, கோத்திரம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 100 அளவு : 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ
சமயம் நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

1-வது புழற் கோட்ட மதற்கு நாடு
நாயறு, அம்பத்தூர், ஆகுடி, ஆத்தூர், எழுமூர் ஆக நாடு — 5
2-வது புலியூர்க் கோட்டம்
குன்றத்தூர், போரூர், மாங்காடு, அமரூர், கோடூர் ஆக —

முடிவு :

மணக்குடையார்
செக்குளார்

பாற்கிளார்
கூடகிளார்
புருஷகிளார்
இவடத்திலிருப்பு இவளவுதான்

குறிப்பு :

இதில், தொண்டை நாட்டின் விரிவான விளக்கம் தரப்பட்டுளது.



வரிசை எண் : 4013 சுவடி எண் : 1884-b

# திருவருட்பயன்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 200 அளவு : 20×4 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியார்
பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நற்குஞ்சரக் கென்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக் கென்று காண.

பதிமுது நிலை

அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரில்றை நிற்கும் நிறைந்து. —1

முடிவு :

ஏன்ற வினையுடலோ டேகு மீடையேறும் வினை
தோன்றி லருளே சுடும். —8

மும்மை தரும்வினைகள் மூளாவரம் மூதறிவார்க்
கம்மையு மிம்மையே யாம் —9

கள்ளத் தலைவர் துயர்கருதித்தங் கருணை
வெள்ளத் தலைவர் மிக. —10

ஆக அதிகாரம் 10. திருவருட்பயன் முற்றும்
குருபாதமே கெதி.

குறிப்பு :

இது, சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று.



வரிசை எண் : 4074 சுவடி எண் : 1884-c

# சிற்றம்பல நாடிகள் கலித்துறை

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 300 அளவு : 20×4 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீர்கொண்ட காழிச் சிற்றம்பல நாடி. நற்றேசிகனைப்
பார்கொண்டு போற்றவோர் பாமாலை சொல்வனிப் பாவினுக்கே
யேர்கொண்ட சீர்தளை யெல்லா நிறைந்து மிலங்கியிடப்
போர்கொண்ட மும்மதக் கற்பக யானையைப் போற்றுதுமே ! — 1

முடிவு :

ஒன்றென்றுசொல் பலர் சொன்னாலுஞ் சொல்லுக
வொன்றிரண்டா மென்றென்று சொல்பவர் சொன்னாலுஞ் சொல்லுக
வெத்தியன்பர்
சென்றங்கு நல்கு சிற்றம்பல நாடி சிரபுரத்தோன்
னன் றென் றிதா மென்று சொல்லாத முத்தியளித்தனனே ! —55

சிற்றம்பல நாடியார் கலித்துறை முற்றும்.
சிவமயம்.

குறிப்பு :

இது, சிற்றம்பல நாடிகள் மீது பாடப்பட்டதாகத் தெரிகின்றது.



வரிசை எண் : 4075 சுவடி எண் : 1884-d

# சிற்றம்பல நாடி வெண்பா

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 250 அளவு : 20×4 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

செந்திருவைச் சேரலாஞ் செந்தமிழைப் பாடலா
மிந்திரனைப் போலவாழ்ந் திருக்கலா—மந்திரஞ்சேர்
வெற்பகத்தை யூடறுத்த வேலவற்கு முன்பிறந்த
கற்பகத்தைக் கைதொழுதக் கால்

முடிவு :

மாயை மலமெங்கே மடிந்துதோ மாயைதனி
லாய சகமெங்கே யழிந்துதோ-காய மதிற்
றங்கு புருடனெங்கோ சச்சிதானந்த வெள்ள
மெங்கு மிகக் கோர்த்த தோ. —66

சிற்றம்பல நாடி வெண்பா முற்றும்.

முடிவு :

இதுவும், சிற்றம்பல நாடிகள் மீது பாடப்பட்டது போலும்.



வரிசை எண் : 4076 சுவடி எண் : 1884-e

# ஞானபூசை விதி

ஏடுகள்: 5 (5வது ஏடுஇல்லை) கி. எண்ணிக்கை: 200 அளவு: 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு: 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: சிவ தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சத்தினிபாத முதிர்ச்சியினாலே ஞானாசாரியனை யடைந்து
ஞான தீட்சையைப் பெற்று சிவாகமஞ் சிவானுபூதியு முடைய
ஞானவான்களை ஞானமார்க்க மனுட்டிக்கக் கடவர்.

முடிவு :

இந்த மந்திரங்களையு மந்தியங் களையு மொடுக்கிப்
பாதசுத்தி யாசமனங்கள் செய்து சிவ சமாதியிலிருப்பது

ஞானபூசை அட்டவணை முற்றும். சுபமஸ்து'
தாண்டவராய பிள்ளையவர்கள் குமாரன்
சங்கரலிங்கமெழுத்து. யேடு.
நீடூழி காலம் வாழ்க. கனகசபாபதி துணை.

குறிப்பு :

இது, தீட்சை முறைகளையும், அனுட்டான விதிகளையும் கூறுகிறது. முதலில் ஞானபூசை விதி என்றும இறுதியில் அட்டவணை என்றும் உளதால், 5-வது ஏட்டில் தலைப்பு இருக்குமோ என்பது ஐயம்.



வரிசை எண் : 077 சுவடி எண் : 1884-f

# உத்தரபோதம்

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை: 300 அளவு : 29×4 செ.மீ.
பக்கத்திற்கு 9 வரிகள் ஆசிரியர் : பரமானந்த முனிவர் பொருள் : வேதாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பொன்மலை வில்லிமைந்தன்
போதக னாதி நாதன்
நன்மலி யிமவா னீன்ற
நாரணி யீன்ற யானை
நின்மல வடிவ னெந்தன்
நெஞ்சத் தடர்ந்து வாழ்வோன்
மென்மலர்ப்பாதந் தன்னை
விரும்பியான் போறறு வேனே! —1.

முடிவு :

உத்தர போதந் தன்னை யுலகிலே யாவ ரேனும்
பத்தியா யுவந்து கேட்கப் பழவினை யொழிந்து போகு
முத்தியுண் டாகும் வேத மொழியினுங் காண வேணுஞ்
சித்தியுண் டாகு மென்று தேசிக னருளிச் செய்தார்! —51.

உத்திரபோதம் முற்றும்.
ஏகாம்பர நாதர் பாதார விந்தமே கெதி.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 90-b/D-430 போன்றது. சில இடங்களில் உத்திரபோகம் என்று காணப்படுகிறது.

இதன்பின்னர், 'சுந்தர மிகுந்த சந்திரவதனன்' எனத்தொடங்கும் அழகிய கூத்த தேசிகன் மீது பாடப்பட்ட ஒரு பாடல் இருக்கிறது.

வரிசை எண்: 4078 சுவடி எண் : 1884-g

# கொடிக்கவி — உரை

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 350 அளவு : 20 × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : கொற்றவன்குடி உமாபதி சிவாச்சாரியர் பொருள் : சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சார்புநூல் பண்ணின கொற்றவன் குடியார் இதிலே கொடிப்பாட்டு நாலும் ஒரு சாத்திர மந்த சாத்திர மெல்லாத்திலும் மேம்பட்ட சங்கையைத் திருவுளம் பத்தினதென வறிக.

ஒளிக்கு மிருளுக்கு மொன்றே யிடம் எ.து. ஆணவத்துக்கும் ஞானத்துக்கு மிட மொனறே.

முடிவு :

உ.ம். திருவுந்தியாரிலே நஞ்செய லற்றந்த னாமற்றபின் னாதன்றன் செயறானே யென்றுந்தீபற — தன்னையே தந்ததென் றுந்தீ பற. ஆகையாலிந்த மூன்றுவகை யாலுங் கண்டுகொள்க. —4.

கொடிக் கவி யுரை முற்றும்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 553-e/D-718 போன்றதெனினும் இதில் உரை மட்டு முளது. அதில் மூலம் மட்டுமே உளது இதன் பிற செய்திகளை ஆண்டு காண்க.



வரிசை எண் : 4079 சுவடி எண் : 1884-h

# சிவன் பெயர்கள் முதலியன

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 150 அளவு : 20 × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சிவதோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம் பலம்

சந்திர சேகர மொன்று ரண்டுமையோர் பாகந்
தடரிப்பவாஹன மூன்று ஒரு நாற்றாண்டவமா
மைந்து கலியாணம் பிச்சாடன மாறாகுங்

முடிவு :

மூங்கிலிற் பிறந்த முழங்குதீ
மூங்கில் முதலிடனை முருக்குமா போல்
தாங்கருஞ் சினத்தீ தன்னுளே பிறந்து
தன்னுடகளை யெல்லாந் தருக்கு
மாங்கதன் வெம்மை யறிந்தவர்க் கமையா
அடக்கமுந் தனுளே யடங்கார்
ஓங்குய கோபத் தீயினை யொக்கும்
உடம்பை உலகில் வேறுண்டோ ?

குறிப்பு :

இதில், சிவன் பெயர்கள் எண்களோடும், மற்றும் பதினெண் கணங்கள் முதலானவர் பெயர்களும், கோபத்தாலுண்டாகும் விளைவுகளும் கூறப்பட்டுள்ளன.

இது, முன் 188 –a போன்றது,



வரிசை எண் : 4080 சுவடி எண் : 1884-i

## சதாசிவரூப அட்டவணை

ஏடுகள் : 19 கி எண்ணிக்கை : 500 அளவு : 20 × 4 செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ. சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்

உ

சிவமென்றும் சதாசிவ மென்றும்
மகேசுர னென்றும் மூன்று வகைப்படும்
இவையிற்றுள் சிவம் நிட்களம் சதாசிவம் சகளநிட்களும்

மகேசுரம் சகளம். இவை தரம் பிரியும் வகை சிவம் ஒன்று
சதாசிவம் ஐந்து மகேசுர மிருபத்தஞ்சு.

முடிவு :

ஆனபடியாலே ஞானபூசை யென்று சொன்னது
அந்தரியாகமும் வெகுரியாகமும் பிரித்து பூசிக்கிறது
கிரியாபூசை யிப்படி யிடை விடாம லிருதய கமலத்திலே
பூசிக்கிற வனுக்குச் சாயுச்சிய பத மூன்று முண்டு

சாதசிவ ரூப அட்டவணை. முற்றும்
ஞானசம் ந்த குருவே துணை.

முடிவு :

இது, செய்யுளாக உள்ள சுவடி 298-j /-D-834-ல் காணப்படுகிறது. இது அதற்கு உரைபோல் தெரிகிறது.



வரிசை எண் : 4081 சுவடி எண் : 1884-j

# பூப்பிள்ளை அட்டவணைக்கு சிந்தனை

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 300 அளவு : 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு :8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவதத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

உயிர்எண்ணித் தொகை பண்ணப்படாது
வசனம் பிறந்த நாள் அற்மா எப்படிப்போல
கணபடிகம் ஆகாயம் போல கண்ணாரது
யிருளினாலே மறைபட்டு, விளக்கு வந்தவிடத்து
யிருட்டு நீங்கிப் பதார்த்தங்களைக் காணும்.

முடிவு :

சிவன் சத்தி உருமேனி தரித்து, சத்தி விந்து
சத்தி மனோன் மணி மயேசுரி உமை லட்சுமி
சரசுபதி முன் சொன்ன சீவ பேதங்களுக்குத்
தொழில் சத்தியவன் வசனம் சத்தியாய விந்து.
திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, உயிர், இறை தத்துவங்களைக் கூறுகிறது. இதன் பின்னர் சௌம்ய வருஷ பஞ்சாங்க ஏடுகள் 7 உள்ளன.



வரிசை எண் : 4082 சுவடி எண் : 1884-k

# தத்துவக் கட்டளை

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 600 அளவு : 20×4 செ.மீ. பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ தத்துவம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

குருபாதம் நிற்மலம்

பதி பசு பாச மூன்று மனாதி நித்தியம்

இவைகளிற் பதியாவது ஒன்றாய்ப் பரிபூரணமா
யறிவுக் கறிவாய் நின்மலமா யுயிர்க் குயிராய்க்
குறியுங் குணமு மில்லாததாய் அருவு முருவு மருவுருவு
மல்லாததாய் அகண்டிதமாய் ஆனந்த மயமாயிருக்கிற

முடிவு :

ஞான நூலோத லோதிச் சிந்தித்து அந்தரியாகம்
பண்ணவும். இப்படிச் செய்ய உண்மை வந்து கூடும்
நேயத்தழுந்தல் முதலான யெந்த நிலையிலே நின்றாலும்
ஆசாரியரையும், கோயிலையும், வேடத்தையு
மிகவும் வழிபட. சிவமயம்

திரு ஆலவாய் ஞான தேசிகன் பாதமே சரணம்

சுந்தரி துணை.

குறிப்பு :

சேஷாத்திரி சிவனார் எழுதிய தத்துவக் கட்டளை எமது சுவடி எண் 996-f/D-1867, ஆசிரியர் பெயர் தெரியாத கட்டளைகள் சுவடி எண் 1233/D-1868, 1328/D-1869, 944-c/D-1349 முதலியன உள்ளன. சைவ சித்தாந்த உண்மைகளை உரைப்பது.



வரிசை எண் : 4033

சுவடி எண் : 1884-I

# நெஞ்சுவிடு தூது

ஏடுகள் : 11½ கி. எண்ணிக்கை : 400 அளவு : 0 x 4 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள் : சைவ சித்தாந்த சாத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

பூமேவு முந்திப் புயல்வண்ணன் பொற்பமைந்த
நாமேவு மாதுபுணர் நான்முகத்தோன் — மேவிப்
பன்றியு மன்னமுமாய்ப் பாரிடந்தும் வரன்பறந்து
மென்று மறியா வியல்பினா னன்றியு

முடிவு :

பூங்கொன்றை வாங்கிப் புகழ்ந்து புரி நெஞ்சமே
யீங் கொன்றும் வாரா தினி !

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்புந்த மா முனிவன் றார்வாங்கி — யம்புந்தும்
வஞ்சமே வும் விழியார் வல்வினையெல் லாமகல
நெஞ்சமே வாராய் நினைந்து.

நெஞ்சுவிடு தூது முற்றும்.

குறிப்பு :

இது, சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கனுள் ஒன்று. தமது ஞானாசிரியர் பால் தனது நெஞ்சினைத் தூது விடு முகத்தான் அவரது அருமை பெருமைகளையும் சித்தாந்தக் கருத்துக்களையும் விளக்குவது.

இது, எமது சுவடி எண் 553-q/D-730 போன்றது. அச்சிடப்பட்டுளது.



வரிசை எண் : 4084 சுவடி எண் : 1884-m

## போற்றிப் பஃறொடை

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 300 அளவு : 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள் :
சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

பூமன்னு நான்முகத்தோன் புத்தேளி ராங்கவர் கோன்
மாமன்னு சோதி மணிமார்ப — னாமன்னு
வேதவேதாந்தம் விளக்கஞ்செய் விந்துவுட
னாதநா தாந்த நடுவேதம் — போதத்தா

முடிவு :

மானந்த மாக்கடலி னாரா வமுதளித்துத்
தான்வந்து செய்யுந் தகுதியினா — லூனுயிர்தான்
முன்கண்ட காலத்து நீங்காத முன்னோனை
யென்கொண்டு போற்றிசைப்பே னியான்,

போற்றி ஃறொடை எழுதினது
முற்றும்.
சோமசுந்தர சுவாமியள் பாதாரவிந்தமே கெதி.

குறிப்பு :

இது, சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. எமது D-121 போன்றது. அச்சிடப்பட்டுளது.



வரிசை எண் : 4085 சுவடி எண் : 1884-m

## வினா வெண்பா

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள் :
சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

நீடு மொழியு நீறையிருளு மோரிடத்துக்
கூட வரிது கொடுவினையேன் — பாடிதன்
முன்னோன்ற வார் சொலையு யாமருதச் சம்பந்தா
நின்றவா றெவ்வாறு நீ ! —1.

முடிவு :

அருளா லுணருவாற் கல்லாத செம்பைப்
பொருளாகி நிற்கும் பொருந்தித் — தெருளா
வினாவெண்பா வுண்மை வினாவாரை யூமன்
கனாவின்பா லேயதுவிக்குங் காண். — 13.

வினா வெண்பா முற்றும்.
திருச்சிற்றம்பலம்
சோமசுந்தரந் துணை.

குறிப்பு :

இது, சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று இதில், சிவப்பிர காசத்தின் சாரம் விளங்கப் பதின் மூன்று வெண்பாக்களால் சைவசித்தாந்தம் சுருக்க மாக வினாவப்பட்டுளது. அச்சிடப்பட்டுளது. இது, எமது, சுவடி எண் 54-h/D-695 போன்றது.



வரிசை எண் : 4086 சுவடி எண் 1884-o

# கொடிக் கவி

ஏடுகள். 1 (2 பக்கங்கள்) கி. எண்ணிக்கை: 20 அளவு: 20×4 செ.மீ. பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள்: சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாக்காலு மிக்க மனத்தாலு மெக்காலுந்
தாக்கா துணர்வரிய தன்மையனை — நோக்கிப்

பிறித்தறிவு தம்மிற் பிரியாமை தாமே
குறிக்கு மருணல்கக் கொடி.

முடிவு :

அஞ்செழுத்து மெட்டெழுத்து மாறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைப் பெருவெழுத்து — நெஞ்சழுத்திப்
பேசு - மெழுத்துடனே பேசாம னின்றெழுத்துங்
கூசாமற் கூறக் கொடி. — 4

கொடிக்கவி சித்தாந்த சாத்திரம் முற்றும்
திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 553-e/D-718 போன்றது சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள்ஒன்று. அச்சாகியுளது



வரிசை எண் : 4087 சுவடி எண் : 1884-p

# உண்மை விளக்கம்

ஏடுகள் : 9½ கி. எண்ணிக்கை : 300 அளவு : 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : திருவதிகை மனவாசகங்கடந்தார் பொருள் சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள் வழுவா
துண்மை விளக்க மூரைசெய்யத் — திண்மதஞ்சே
ரந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியில்வைப் பாம். — 1.

முடிவு :

மன்னுதிகை வாழு மன்வா சக்கங்கடந்தான்
மின்னனைய வாழ்விஹுறா மெய்கண்டான் — பன்னுமறை
வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள்வழுவா
துண்மைவிளக் கஞ்செய்தா னுற்று. — 54.

உண்மை விளக்க முற்றும்
திருச்சிற்றம் பலம்.

குறிப்பு :

இது, சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று இவர், மெய்கண்ட தேவருடைய மாணாக்கருள் ஒருவர் அச்சாகியுளது.

இதன் பின் ஒரு வெண்பாவும், அனுட்டானக் குறிப்புகளும் உள்ளன.



வரிசை எண் : 4088 சுவடி எண் : 1885-a

# சிவஞான போதகவுரை

ஏடுகள் : 44 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 25 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : மெய்கண்டார் பொருள் : சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கல்லா னிழல்மலை வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர் நல்லார் புனைவரே !

கல்லானிழன் என்றது கல்லாலின் கீழே யெழுந்தருளியிருந்து
அகத்தியர் புலத்தியர், சனகர், சனத்குமார ரிவர்கள்
நால்வருக்குந் தன்மார்த்த காம மோக்ஷங்களை யருளிச் செய்து

முடிவு :

தானே தானாய்ச் செய்து தன்னைத் தானாகச் செய்து
மதைவ மென்றுந் தைவமே அடிமை யென்று மடிமையே
மானே பெண்ணே தொழுகை வலிவழிபாடு பண்ணுகிறதே
யுனக் குறுதி யென்ற வாறு.

திருச்சிற்றம்பலம்

பன்னிரண்டாஞ்சூத்திர முற்றும்.

குறிப்பு

இது, எமது சுவடி எண் 1883-b போன்றது.



வரிசை எண் : 4089 சுவடி எண் : 1885–b

# திருவருட் பயன்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 25 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர்: உமாபதி சிவாச்சாரியார் பொருள்: சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பதிமுது நிலை

நற்குஞ் சரக்கன்று நண்ணில் நல்லஞான
சொரூபனாகிய யானை முகத்தினை யுடைய
விக்கினே சுரனைப் பொருந்தி லஞ்ஞான
நீங்கி ஞானம் பிரகாசியா நிற்கும்

முடிவு :

அடியார்களிடத்திலே நினதன்றி மற்றப் பெரியோ
ரிடத்திலே யில்லையோ வென்னில் எங்கும்
எல்லா வுலகங்களினும் எவையும் சேடசித்துக்க
ளெல்லாம் எரியுறு நீர்போல அக்கினியைச்
சேர்ந்த நீரைப் போல ஏகந்தங்கும் வேறறக் கலந்து
நிற்பன். அவன்றானே தனி..............

குறிப்பு :

இது, சைவ சித்தாந்த பதினான்கு நூல்களி லொன்று. உரை இன்னாரதென அறிய இயலவில்லை.



வரிசை எண் : 4090 சுவடி எண் : 1885-c

# ஆக்கையைப் பழித்தல் (எங்நாட்கண்ணி)

ஏடுகள்: 10 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 25 × 3½ செ மீ.

பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : தாயுமானார் பொருள் : சித்தாந்த நூல் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

சுக்கிலமு நீருஞ் சொரிமலமு நாறு முடலம்
புக்குழலும் வாஞ்சை யினிப்போது மென்ப தென்னாளோ —1

நீர்க்குமியு ளைமைந்து நின்றாலு நில்லா மெய்
பார்க்கு மிடத்தின் மேற் பற்றறுவ தென்னாளோ —2

முடிவு :

வாட்டப் படாத மவுன வின்பங்கைய்யாலே
காட்டிக் கொடுத்தாள் வரவு காண்பேனோ—பைங்கிளியோ —49

குறிப்பு :

இதில், முதல் 246 பாடல்கள் எந்நாட் கண்ணியும், அதனைத் தொடர்ந்து பைங்கிளிக் கண்ணிகள் 49-ம் உள்ளன. இது தாயுமானார் பாடல். அச்சாகியுள்ளது.



வரிசை எண் : 4091 சுவடி எண் : 1885-d

# பராபரக் கண்ணி

ஏடுகள்: 11(11—21) கி. எண்ணிக்கை : 1000 அளவு: 25×3½ செ.மீ.
பக்கத்திற்கு: 11 வரிகள் ஆசிரியர்: தாயுமானார் பொருள்: தோத்திரப் பாடல்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அத்திமுகனடி நித்த நினைபவர்
சித்தி யொடுபர முத்தி பெறுவரே !

சொல்லா லடங்காச் சுகக்கடலின் வாய்மடுக்கி
னல்லா லென்முக மறுமோ—பராபரமே. —1

முடிவு :

உனக்குவமை யாய்க் கருணை யுள்ளவரும் வண்மை
எனக்குவமை யானவரு மில்லை பராபரமே. —80

குறிப்பு :

இதில், வெவ்வேறு பகுதியாக மொத்தம் 211 கண்ணிகள் உள்ளன. அச்சாகியுளது.



வரிசை எண் : 4092 சுவடி எண் : 1885-e

# சிவப்பிரகாசச் சிந்தனை

ஏடுகள் : 123 கி. எண்ணிக்கை : 6500 அளவு : 25×3½ செ மீ.

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஒளியான திருமேனி — ஞானப்பிரகாசமான திருமேனியி லொன்றும், உமிழ்தான மிகமேவு – சொரியாநின்ற மூன்று மதங்களு மிகுதியும் பெருகப் பொறுந் துகையினாலே

முடிவு :

ஆசாரியர் திருவுளம் பற்றினது சத்திய மென்கிறதைக்
குருமுகாந்திரமாகக் கேட்டு அனுபவத்தாற் கண்டு கொள்க.
இனியிந்த வியாக்கியையு மிந்தச் சாத்திரத்திலுள்ள
வினா விடையத்துக்குச் சாத்திர சம்மதியும், திருவாவடுதுறை
நமச்சிவாய பண்டார மரபில் வேலப்ப பண்டாரந்தின் சீஷன்
நமசிவாயத் தம்பிரான் எழுதினது.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 54-e/D-692-ன் உரையாகும். இதன் பின் மெய்கண்ட சாத்திரம் பதினாலுக்கு விளக்கம் எழுதப்பட்டுளது. இது சைவசித்தாந்த சாத்திரம் பதினான்கில் ஒன்று. பின்னர் இரண்டு உதிரி ஏடுகள் உள்ளன.



வரிசை எண் : 4093 சுவடி எண் : 1886-a

# சைவ சமய நெறி

ஏடுகள்: 53 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 24×3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : மறை ஞான சம்பந்தர் பொருள் : சைவ சாத்திரம் நிலைமை : பழுது முழுமை ; முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பாயிரம்

நல்லார் தொழும்வெண்ணை நல்லூர்ச் சிவாலயத்துள்
பொல்லார்தாள் யான்சூடும் போது
உலகமும் பல்லுயிரு மொன்றி நிறைந் தோங்கி
யிலகுஞ் சிவனெம் மிறை.

முடிவு :

சைவ சமையநெறி சாற்றிய சம்பந்த னுயிர்
மையலற வாய்க்க வரம்

சைவசமைய நெறி எழுதி முடிந்தது.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 371/D-74ட போன்றது.



வரிசை எண் : 4094 சுவடி எண் : 1886 b

## சைவ சமய நெறி

ஏடுகள் : 40 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 24×3 செ.மீ. பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : மறை ஞான சம்பந்தர் பொருள் : சைவ சமய சாத்திரம் நிலைமை : பழுது் முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

பாயிரம்

நல்லார் தொழும்வெண்ணை நல்லூர்ச் சிவாலயத்துள்
பொல்லார்தாள் யாஞ்சூடும் போது

முடிவு :

பந்த மறுக்கும் பசுபதிதன் பத்தர்க்கு
மந்தணர்க்கு மூட்டுகவன் னம்

(பின்னிரு குறட்பாக்கள் சிதைந்துள்ளன)

முற்றும்.

ஆக சூத்திரம் 723.
குருபாத மறவேன்.
சொக்கலிங்கம் துணை.

குறிப்பு

இது, முன்பிரதி போன்றது.



வரிசை எண் : 4095 சுவடி எண் : 1886-c

## நித்திய கன்ம நெறி

ஏடுகள் : 35 கி. எண்ணிக்கை : 1500 அளவு : 24×4 செ.மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சமய நூல் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

அத்தனரு ளாகமத்தி லாராய்ந்த வாவினிற்செய்
நித்திய கன்ம நெறிதனக்கு ....... தரு
மன்னத்தா னத்தானத்தான் பாவைம்முகத் தானருளுங்
கன்னத்தான் ........... காப்பு.
சீர்தங்கு செங்கதிர் கீழ்திக் கெழுமுன்னர்
கடிகையோ ரைந்தென வெழுந்து ... .......

முடிவு :

கற்றோருறு கிறிகை செய்தோரில்
பாதியதிற் பாதியலன் ...........
............ 8.
நித்திய கன்மநெறி குறள் 754.
திருச்சிற்றம்பலம்.

காலம் :

............ சித்திரை மாதம் 11-ந் தேதி சோமவாரம் எளு வீதி அட்டமி முதல் 18-ந் தேதி ........... அம்மாவாசி ஒரு சாமத்திலே மூல நட்சேத்திரம், சிவனடியார் பாதாரவிந்தம் தெரி(சினை)யால் சேக்கிழ பிள்ளையாரடுமை குமாரசாமி யெழுதினேன். சோமசுந்தரம் துணை.

குறிப்பு :

இது, சைவ சமயத்தார் நாடோறு அனுட்டிக்க வேண்டிய நெறிமுறைகளையும், அனுட்டான விதிகளையும் கூறுகிறது.

இதன் பின்னர் சைவசித்தாந்த சாத்திர நூல்களின் விளக்கம் எழுதப்பட்டுளது.



வரிசை எண் : 4096 சுவடி எண் : 1887-a

## சாதக சிந்தாமணி - இரண்டாம் பாவ பலன்

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 500 அளவு : 35×3 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

எண்ணுங் கருமங்க ளெல்லாம் முடித்தெனக்கு
நண்ணுங் கலையனைத்து நல்குவாம் — கண்ணுதலின்
னண்டத்தான முண்டத்தான ஞாலத்தான மூலஞ்சேர்
கண்டத்தான பெற்ற களிறு

முடிவு :

செவ்விய செவ்வாயந்த வியனாத னாகச்சேரில்
வெவ்வலி லுளவிலீயு முடன்பிறப் பினத்தோர்க்கீயுங்
கவ்வைகொள் காரியாகிலு லோபியாங் கடுத்தோர்க்கீயும்
வெவ்விய வெய்யோனாகில் வேதியர் வேந்தர்க்கீயும், — 3

பன்னிரண்டாம் பாவபலம் முற்றும்
ஆக விருத் ம் 1-7 குருவே துணை
சிவமயம்

குறிப்பு :

இதில், முதல்பாவ பலன் நீங்கலாக ஏனையவை உள்ளன,

இது, எமது சுவடி எண் 783/D-1477 சாதக சிந்தாமணி. 784/D-1432 போன்ற தெனினும் மாறுபாடு காணப்படுகிறது.

இதன்முன்னர் ஒருஏடு 'திருநாவுக்கரசு நாயனார் புராணம்' என்றுளது.



வரிசை எண் : 4097 சுவடி எண் : 1887-b

# உள்ளமுடையான் சூளாமணி

ஏடுகள் : 91 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 38×3 செ.மீ
பக்கத்திற்கு: 10 வரிகள் ஆசிரியர் : திருக்கோட்டி நம்பி பொருள் : சோதிடம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவே துணை

விளங்கிய சகர (வாண்டா) யிரத்திரு நூற்றின் மிக்க
வளம்புகழ் பாண்ட மங்கை மாதவ னாய வன்சே
யிளங்கொடி மடவார் காம னியல்திருக் கோட்டி நம்பி
யுளம்புகள் கணித நூலை யுரைத்தன னுலகுக் கெல்லாம்

முடிவு :

வலவோட்டுக் கெல்லாம் அசுபதி பரணி ஒட்டினாப்போலே
ஒட்டிக்கொள்வது. யிடவோட்டுக் கெல்லாம் அசுபதி பரணி
ஒட்டினாப் போலே ஒட்டிக்கொள்வது. இடவேட்டுக்
கெல்லாம் முடிந்த ராசியு யிருமுத லிராசியுடலுமாகக்
கொள்வ தென்ற வாறு — 568

காலம் .

விளம்பிய சகரவாண்டு 1200

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 658-a/D-1015, எண் 659/D-1017 முதலியன போன்றது.

பின்னர் உதிரி ஏடுகள் மூன்று உள்ளன,

வரிசை எண் : 4098 சுவடி எண் : 1888

# சருவ ஞானோத்தரம்

ஏடுகள் : 26 கி. எண்ணிக்கை : 600 அளவு : 32 × 3 செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

சிவமயம்

முத்தி விநாயகன் மனத்தின் முரணற வான
நிலமுதலாக விளக்கு
மத்தி விநாயக னெனவந்த வித்தை பொழிந்து
வித்தை யளித்தறத்தை யாக்கும்
சத்திவினாயக னுயர்ந்த தாணு வினாயக
ரோற்றந் தருமோரட்ட
சித்தி வினாயகன் மதுரைச் சித்தி வினாயக
னிருதாள் சிரத்தின் வைப்பாம் ... 1

முடிவு :

சுத்தாத்துவித மிதுவே, திரும்பாத முத்தி தூவிதாத்துவிதம்
விசிட்டமதோ பாகமாக வுத்தவ.சாதாரண சாதாரண ?
கற்பிதங்களுணர்ந்து சுயம் பிரகாசமா யெங்கும்
நிறைவாய்த் தத்துவாதீதமாய்த் தனையறியதல் முத்தி.
சருவ ஞானோத்திரஞ் சம்பூரணஞ் சபாபதி.

காலம் :

1062-ம் வருஷம் கார்த்திகை மாதம் 5-ஆம் தேதி இராசவல்லிபுரம் செப்பறை மடம். அருணாசலநாதன் ஸ்வஹஸ்தம்.

பொன்னம்பலபிள்ளை. குருவே துணை.

குறிப்பு :

சைவசித்தாந்த ஞானத்தினை வினாவிடையாகக் கூறுவது. ஞான மார்க்கமும், முத்தி மார்க்கமும் கூறப்பட்டுளது,

வரிசை எண் : 4099 சுவடி எண் : 1889-a

# திருவாதவூரர் புராணம்

ஏடுகள் : 66 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 40×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : கடவுண்மாமுனிவர் பொருள் : புராணம் நிலைமை : மிகப் பழுது முழுமை முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

———— னும் புத்தனுடன் பெருவாது வென்று
சிவன்பெரு நாமமிக வளர் வொருவாத பிறவியிற்
சென்றொரு நாம முறாத ————

முடிவு :

ஞால மோங்குக நான்மறை நீடுக
சீல மன்னவன் செங்கோல் விளங்குக.
கால மாமழை மன்னுக காதலாற் !
சாலு மீசனடி யார்கள் தழைக்கவே ! — 130

திருச்சிற்றம்பலம்

திருவாதவூர் நாயனார் புராணம் சருக்கம் 6-க்குத்திருவிருத்தம் 541
எழுதி முகிந்தது முற்றும். அகிலாண்டவள் பாதமே கெதி
இந்தவாதவூர்ப் புராணம் சுவாமிநாதன் எழுதின ஏடு.
எடுத்தவன் குடுத்துப் போகவும். குடாதே போனால் கற்பகோடி
காலம் சுகமே வச்சு படிக்கவும் நீடூழி வாழ்க. செப்பறை மடத்தில் வைத்து [எழுதினது]

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 274/D-180. போன்றது. பிற செய்திகளை அங்கு காண்க



வரிசை எண் 4100 சுவடி எண் : 1889-b

# தாமிரபரணிப் புராணம்

ஏடுகள் : 102 கி. எண்ணிக்கை : 4000 அளவு : 40×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : சங்கரலிங்கம் பிள்ளை பொருள் : தலபுராணம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

பத்தியுந் தவமு மெய்பதியு ஞானமுந்
சித்தியு முத்தியுஞ் சிறந்து நல்கவே
நித்திய னால நன்னிழ லொன்றரு
மத்தியை யாசென வகத்தி லுன்னுவாம்.

நெல்வேலி லிங்கமே துணை. காந்திமதி சகாயம்.
வைகுண்டபதி லட்சிக்க

திருச்சிற்றம் பலம்

நூல்

பார் கொண்ட சதுமுகனுந் திருமாலு மிமையவரும்
பணிந்து வாழ்த்த
யேர் கொண்ட பதஞ்சலி யஞ்சலி புரியப்
புலிமுனி நின்றிறைஞ்சி யேத்த

முடிவு

———— னிலை யின்னருள் புரியு மலடி மகவுந்து
பெறவளிக்கும் ————
————னனலமுந் தருந்தவத்தீர்
ரென்றுரைத்தான் சூதமுனி ————

குறிப்பு

இதில், திருக்கலியாண வெழுச்சி, அகத்தியர் வரவுச்சருக்கம், தண்பொருனை யுற்பவச் சருக்கம், தீர்த்தத் தொகைச் சருக்கம், சிவாலய வடுக்குச் சருக்கம், பொதிய வரைச் சருக்கம்; பாவனாசச் சிறப்பு, திருமூலத்தானம், காசிபேசுரம், சோமதீர்த்தச் சிறப்பு, உரோமசேசுரஞ் சிறப்பு, துருவேசுரஞ் சிறப்பு, திருநெல்வேலி விசிட்டம், இராமீசுர விசிட்டம், மங்கல தீர்த்த விசிட்டம் காந்தீசுர விசிட்டம் திருநகரி விசிட்டம், நவலிங்கநகர் விசிட்டம்; பிரமீசுர விசிட்டம், சோமீசுர விசிட்டம், திருச்செந்தூர் விசிட்டம், நதி சங்கமச் சருக்கம் ஆகியவை உள்ளன.



வரிசை எண் : 4101 சுவடி எண் : 1889-c

# திரிகூடற் புராணம்

ஏடுகள் : 64 கி. எண்ணிக்கை: 3500 அளவு : 40×3 செ.மீ.
பக்கத்திற்கு 8வரிகள் ஆசிரியர் : திரிகூடராசப்பக் கவிராயர் பொருள் :
தலபுராணம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

பூந்து(ணா)ர் சண்பகப் போது ........... தருகுழவி வேழமே,

கார்பூத்த திருமேனிக் கடிக்கமலக் கண்ணானும்
பார்பூத்த நான் முகனும் பழமறையுங் காணாத
ஏர்பூத்த தனி——— ———
சீர்பூத்த திரிகூடி சிவக்கொழுந்தை வணங்குவாம்

முடிவு :

நீடுஞ் சைவ நெறியினர் வாழிய
நாடு ————————
— டுந் தானத் தொகைய வாழி
—.. — — னேழாவது நலம் பெற வாழி தானே — 22

(ஆகத் திருவி)ருத்தம் 654. திரிகூடப்புராணம் எழுதி முகிந்தது முற்றும். குற்றாலநாதர் குழல்வாய் மொழியம்மை நீடூழி வாழ்க. திரிகூடப் புராணம் நீடூழி வாழ்க, அருணாசலம் திருவாசகம் திருக்குற்றால ———— (எடு)த்தவன் குடுக்கவும். குருபாதமே கெதி. வாசித்துப் பார்த்துக் கொண்டு குடுக்கவும். அருணாசலம் எழுத்து. அருணாசலம்

காலம் :

கலி நாலாயிரத்து நூற்றுத் தொண்ணூற்றாரில்ன்ப ......... னூல் பாடியாங் கேற்றினானே ! (இரண்டாம் ஏட்டின் பின்புறம்)

குறிப்பு :

இது, குற்றாலத்தல புராணத்தின் வேறாயது போல் தோன்றுகிறது. பின்னர் இரு ஏட்டில் கடைசியில் 17 சருக்கங்களின் பெயர்களும் திருவிருத்தம் 654—ம் எழுதப் பட்டுளது.



வரிசை எண் : 4102 சுவடி எண் : 1889-d

# பிரமோத்தர காண்டம்

ஏடுகள் : 108 கி. எண்ணிக்கை : 6000 அளவு : 40 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : வரதுங்க பாண்டியர் பொருள் : தல புராணம் நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது
எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக திருச்சிற்றம்பலம்

நல்ல சொற்பொருள் நாளு நடா தவு
மெல்லை காணரும் பேரின்ப மெய்தவும்
வெல்லு மியானை முகத்தனை மேவி வாழ
வல்லவைக் குரியானை வழுத்துவாம்

நூல்

பூமேவு சதுமுகனுந் திருமாலும் போற்றிசைப்ப
தேமேவு குழலுமையாள் செழுங்குவளை விழி களிப்ப

முடிவு :

மேவரப் புகன்ற சிவகதை முழுதும் விழைவுடன்
கேட்குனவர்தாம்
(யாவர்மற்றே)னு மாலயன் முதலோ ரெய்தருஞ்
சிவபதமடைவார். —108

சிவகதை கேட்போர் மானிய முற்றும். குருபாதமே துணை.

ஆகத் திருவிருத்தம் 1339. நீடூழி வாழ்க.

குறிப்பு :

இதுவும், எமது சுவடி எண் 248/D- 65 போன்றது. பிற செய்திகளை ஆண்டு காண்க.



வரிசை எண் : 4103 சுவடி எண் : 1889-e

# வீரமாற னம்மானை

ஏடுகள் : 11 கி. எண்ணிக்கை : 400 அளவு : 40×3 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

திருவுங் கல்வியுஞ்...........மாடத்துப் பிள்ளையைப் பேணுவாம்.
காட்டுவழி போனாலுங்............தும்பிக்கையுண்டே துணை.

நூல்

சீராருந் தின்புயவென் தென்ன னரசர்பிரான்
வீர ரதிசூர வீரந் துரந்தரிகன்
தென்னர் மறுமன்னர் சீர்வேந்தர் செம்மனமு
மன்னர் பணிந் தேற்ற மதிவெண் குடைநிழற்ற.

முடிவு :

சென்றுநீ நம்முடைய சேனை வளநாடும்
கன்றுமொரு தாயும்போல் காத்திருந்து காசினியை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 229-c D-563-ன் வேறாயது. இது, அம்மானை சந்தத்தில் பாடப்பட்டுளது.



வரிசை எண் : 4104 சுவடி எண் : 1889-f

## உத்தர போதம்

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 400 அளவு : 40×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர்: பரமானந்த முனிவர் பொருள் : வேதாந்தம்
நிலைமை: பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

பொன்மலை வில்லை மைந்தன் போத னாதி நாதன்
நன்மலை யரசன் தந்த நாரணி யீன்ற யானை
நின்மல வடிவ னெந்தை நெஞ்சகத் திருந்து வாழ்வோன்
மென்மலர்ப் பாதந் தன்னை விரும்பியான் பேற்று வேனே !

முடிவு :

உத்திர போதந் தன்னை உலகிலே யாவ ரேனும்
பத்தியாய் அறிந்து கேட்கப் பழவினை யொழிந்து போகு
முத்தியுண் டாகும் வேத வொளியினுங் காண வேணும்
சித்தியுண் டாகு மென்றே தேசிக னருளிச் செய்தார். —51

உத்திரர் போத முற்றும்.

குறிப்பு :

இது, வினாவும் விடையுமாக ஞான விஷயங்களைச் சொல்வது. எமது சுவடி எண் 90-b/D-430 போன்றது.



வரிசை எண் : 4105 சுவடி எண் : 1889-g

## இராசி நிலை

ஏடுகள் : 3 கி எண்ணிக்கை : 150 அளவு : 40×3 செ.மீ
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் :சோதிடம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மேஷம்

பாசமாம் செயலை சேரும் பால்பழ முளதா தாகும்
தேசமே போனார் மீள்வார் சேயிழை மனமு முண்டாந்
தூசிய பைம்பொன் பூமி பெருந்துலை வில்லா வின்பம் சேரும்
வாசமென் குழலினாளே வந்திடு மேசந் தானே

முடிவு :

மிதுனத்தில் வந்து நின்று விளம்பிய கருமங் கேழ்க்கில்
உதவியாகஞ் செய்ய உன்னிய கருமம் முற்றும்
குதனியப் பொருளுந் தோன்றும் கோருவையாம் பவள மெய்யாம்
சுதனிய மேனி யாறக் கைக்கொணிடசுலதி யாமே ! — 2

குறிப்பு :

இதில், மேஷம், ரிசபம், மிதுனம் ஆகிய மூன்று ராசிகளுக்கு மட்டுமே பலன் கூறப்பட்டுள்ளது.



வரிசை எண் : 4106 சுவடி எண் : 1889-h

# அபிராமி அந்தாதி

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 600 அளவு : 40 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அபிராமிப் பட்டர் பொருள் அந்தாதி

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

தாரமர் கொன்றையுஞ் செண்பக மாலையுஞ் சாற்றுந் தில்லை
.................................................. ..........................
காரமர் மேனிக் கணபதி யேநிற்கக் கட்டுரையே

நூல்

உதிக்கின்ற செங்கதி ருச்சித் திலர்த முணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்க மாதுளம் போது மலர்க்கமலந்
துதிக்கின்ற மென்கொடி மின்கொடி குங்குமத் தோயமென்ன
விதிக்கின்ற மேனி யபிராமி யென்றன் விழித்துணையே ! — 1

முடிவு

குழையந் தழுவிய கொன்றையந் தார்கமழ் கொங்கைவல்லி
களையப் பொருத திருநெடுந் தோளுங் கருப்பு வில்லும்
விளையப் பொருவிறல் வேரியன் பாணமும் வெண்ணகையு
முழையப் பொருதிருக் கண்ணுமெப் போது முதிக்கின்றதே ! — 100

அபிராமி அந்தாதி முகிந்தது. முற்றும்

சிவமயம்.

குறிப்பு :

இந்நூல், அச்சாகியுளது. பாடவேறுபாடுகள் காணப்படுகின்றன.



வரிசை எண் : 4107

சுவடி எண் : 1889- i

# திருப்புகழ்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 30 அளவு : 40×3 செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள்: சைவ தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குமரன் துணை நன்றாக

எல்லாரு மானிடவ ராவரோ இப்புவியில்
கல்லெல்லா மாணிக்கக் கல்லாமோ —பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கான மயில்வீரன்
திருப் புகழைக் கேட்குஞ் செவி.

நூல்

முத்தைத்தரு பத்தித்திருநகை யத்திக்கிறை சத்திச்சரவண
முத்துக்கொரு வித்துக் குருபா — னெனவோது
முக்கட்பர மர்க்குச் சுருதியின் முற்பட்டது
கற்பித் திருவருள் முப்பத்துமூ வர்க்கத் தமரரு — மடிபேண

முடிவு :

கொத்துப்பறை கொட்டக்களமிசை குக்குக்குகு
குக்குகுகுகுகுத்திப் புதை புக்குப் பிடியெனு — முதுகூகை
கொற்புற்றென நட்புற்றவுணரை வெட்டிப்பலி
யிட்டுக்குலகிரி குத்துப்படவொத்துப் புரவல — பெருமானே !

குறிப்பு :

ஒருபாடலே உளது பிழைகள் அதிகம். அச்சாகியுளது.



வரிசை எண் : 4108 சுவடி எண் : 1889-j

# இராமசாமி வாசகம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 40×3 செ மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவே துணை

நாடிய பொருள் கைகூடும் ........... கூறுவோர்க்கே !
இஸ்வாகம் எழுத சரசுபதியும் அகிலாண்டவளும்
முன்னின்று துணை செய்யவும்.

நூல்

திசதர மகாராசர் அறுபதினாயிரம் வருசம்
ராச்சிய பரிபாலம் பண்ணியிருக்கிற காலத்திலே

முடிவு :

இனிக் கலைக்கேட்டு மாரிஷியை அழைப்பித்து
புத்திரை யாகம் பண்ண வேணு மந்தக்
கலைக்கோட்டு மாரிஷியை அழைத்துவரவேணுமென்று
நாலு பெண்களை ............

குறிப்பு :

இது, இராமனது சரித்திரத்தை வசன நடையில் கூறுகிறது. பிழைகள் மலிவு.



வரிசை எண் : 4109 சுவடி எண் : 1889-k

# கோளறு மாலை

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 250 அளவு : 40×4 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி: ஓம்

உரைத்த முன்னூல்க ளெல்லாம்
உண்மையாய் விளங்க வேண்டி
திருத்தமாம் ராசி காலந்
திடம்பட வுரைத்த தெல்லாம்
னிருத்தமாம் ராசி வாக்கில்
அறிவுசி யத்தவன் விளங்கிக்
குருத்தமான நல்லோர் கேள்மின்
கோள்வகை உரைத்த னானே ! — 1.

முடிவு :

மையிலா மாதர் விழியாய் பதினாறு பதிய
லெரிக்கு நாளுங் கயிலாசமலைய னந்த
யிலங்காபுரி மட்டுங் கலகந் தானே! — 41.

கோழுறு மாலை முற்றும்.

அகிலாண்டவள் பாதார விந்தந் துணை.

குறிப்பு :

இது, ராசிபலன் கூறும் சோதிடமாகும்.



வரிசை எண் : 4110 சுவடி எண் : 1889-1

## சிவகாமி அம்மன் அகவல்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 300 அளவு : 40 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

பூவினில் வாழும் பொன்னே முன்னே
மூவர்கள் முதல்வி தேவர்கள் தலைவி
சதுமறை யிறவி தலைவனை யருளி
பசுபதி யின்றவி பரசமை யுறவி

முடிவு :

யுண்ட சுகந்தனை யுன்மன தறியும்
வேண்டாம் யென்னுட விண்ணப்பங் கேளாய்
தூண்டா விளக்கே சுடரொளி மணியே
பார்த்தெனக் குன்தாள் பாலிப்ப துன்பரமே !

திருச்சிற்றம் பலம்

சிவகாம சவுந்தரி சரணம்

குறிப்பு :

இது, சிவகாமி அம்மையைத் தனக்கு வேண்டும் வரமளிக்கும் படி வேண்டிப் பாடியது. பிழைகள் அதிகம். 1889 என்றுள்ள சுவடி இராசவல்லிபுரம் செப்பறை மடத்தினதாகும்

இதன்பின் 'அழகிய கூத்தர் பேரில் பதம்' எழுதிய சிதைந்த ஒரு ஏடு உளது.



வரிசை எண்: 4111 சுவடி எண் : 1890-a

# சொக்கநாத சுவாமி திருவிளையாடல்

ஏடுகள் : 164 கி. எண்ணிக்கை : 1200 அளவு : 36×3 செ.மீ

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : திருவாலவாயுடையார் பொருள் : புராணம் நிலைமை : நல்ல நிலை (சிறிது பழுது) முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

செய்யபுகழ் மேனியனை தேவர் தொழுந்தேவை
மெய்யருளும் பொய்யா விநாயகனை — வையமெலாங்
காத்தானை யார்க்கு மிளையானைக் கந்தனுக்கு
மூத்தானை நாவே மொழி

நூல்

பொருப்பைப் பண்பொடு குனித்துச் சண்டவெம்
புரத்தைப் பொன்றமுன் சிரித்துக் கண்டவன்
காப்போர் குன்றடுந் திறத்துச்சிங்க

முடிவு :

வானுளீர் முற்றுஞ் சொன்னேனென்ன வோர் மாற்ற மின்றிச்
.............. ....... கடலிடைத் திளைத்தா ரன்றே ! — 20

அறுபத்து நாலாவது வேதங்கண்ட திருவிளையாடல் முற்றும்
ஆகத்திரு விருத்தம் 1809

ஞால மோங்குக நான்மறை நீடுக
சீல மன்னவன் செங்கோல் விளங்குக
கால மாமழை மன்னுக காதலாற்
சாலு மீசன் அடியார் தழைக்கவே ! .. 7

திருவாலவாயுடைய நாயனார் திருவிளையாடல் விருத்தம் 1816.

சிவனே துணை

காலம் :

1 21-ஆம் வருஷம் குரோதன வருஷம் மார்கழி மாதம் 9 ந் தேதி சோம வாரமும் விசாக நட்சேத்திரமும் ஆக சொக்கநாத சுவாமி அறுபத்து நாலு திருவிளையாடல் எழுதி முகிந்தது முற்றும். வேலப்ப முதலியார் குமாரன் சங்கரமூர்த்தி ஏடு நன்றாக, சங்கரமூர்த்தி எழுத்து அங்கயற்கண்ணம்மள் துணை,

செப்பறை மடத்துக்கு

குறிப்பு :

இது பரஞ்சோதி முனிவர் எழுதிய திருவிளையாடற் புராணத்தின் வேறாயது. பாடல்கள் மாறுபடுகின்றன.



வரிசை எண் : 4112 சுவடி எண் : 1890-b

# ஏகாம்பரநாதருலா

ஏடுகள் : 15 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 36 × 3 செ.மீ

பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : இளஞ்சூரியன், முதுசூரியன் ஆகிய இரட்டையர் பொருள் : உலா நிலைமை : நல்ல நிலை (சிறிது பழுது)

முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

சாற்றிய வாயிரக்கால் மண்டபத்திற சார்வாக
× × × × ×
போற்றுந் திறல்விகடச் சக்கிராயுதம். : இது காப்பு

நூல்

நிலம்போற்றும் பைந்துளப நீலப் பொருப்பும்
பொலம்போற்றும் போதிற் பொருப்பும் – நலம்போற்று
மேருப் பொருப்பொருதன வெள்ளிப் பொருப்பிலிரண்
டாரப் பொருப்புடைய வன்னமுடன் — சேர

முடிவு :

... ........................ ............... முடிமே
நிலாவுடையான் றேமா நிழலுடையான் சேர
னுலாவுடையான் போந்தா னுலா
பேரிளம் பெண் முற்றும்
ஏகாம்பரநாத ருலா முற்றும்

காலம் :

1122–ஆம் வருஷம் அட்சய வருஷம் ஆவணி மாதம் 7-ந் தேதி வெள்ளிக் கிழமையும் உத்திர நட்சேத்திரமுந் திறிதியையுமாக ஏகாம்பரநாதருலா எழுதி முகிந்தது. முற்றும் சங்கரமூர்த்தி எழுத்து. ஏகாம்பரநாத சுவாமி துணை.

காமாட்சியம்மன் துணை. வேலே துணை. குமரன் துணை.

தேவிசகாயம் மீனாட்சியம்மன் துணை

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 200/D-261. போன்றது. பிற செய்திகளை ஆங்கு காண்க.



வரிசை எண் : 4113 சுவடி எண் : 1890-c

# வருணகுலாதித்தன் உலா மடல்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 36×3 செ.மீ. பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர்: ஒரு பெண்பாற் புலவர் பொருள்: உலாமடல் நிலைமை: நல்ல நிலை (சிறிது பழுது) முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம்

நீர்கொண்ட மேக நிறங்கொண்ட மேனியான்
பாருண் டுமிழாத பரந்தாமன்—சீர்கொண்டு
உம்பர்க்கு மாலெழுப்பி ஓங்குநெடு மத்தாகச்
செம்பொற் கிரியைத் திரித்ததுவும் - அம்பரத்து

முடிவு :

அருணமலர் மாதுபுயன் அச்சுத ராய
வருண குலாதித்த மகிபன்—கிரண
மயல்தீர வென்பலர் காண.........க
வீதி சென்றார் வெள்வளையு கந்து

வெண்பா

......... ரை முலையார் பொற்பெலா நான்முக
...... .. ப்பாத்தா தரிகை படைத் தெழுதிக்
காத்தான் வருண குலாதித்தன் வளநாடு
தந்த தருணம்........ லூர் வென்றான்
வருணகுலாதித்தன் உலாமடல் முற்றும்

சிவனே துணை. தேவி சகாயம் குருவே துணை. குமரன் துணை.

சங்கர மூர்த்தி எழுத்து

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 222/D-263 போன்றது. பிற செய்திகளை அங்கு காண்க. பாட வேறுபாடுகள் மிகுந்து காணப்படுகின்றன.



வரிசை எண் : 4114 சுவடி எண் : 1890-d

## திருவானைக் காவாருலா

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 36×3 செ.மீ.
பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : காளமேகப் புலவர் பொருள் : உலா
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சீர்பெற்ற தற்பரமாய்ச் சிற்பரத்து
வேர்பெற்ற நாதமாய் விந்துவாய்ப்—பேர்பெற்ற

சோதியாய் மும்மைச் சொருபமா யைப்பூதத்
தாதியா யெவ்வுருவு மாயினோன்—வேதத்து

முடிவு :

மாதர் பலரும் மயங்கி மடலேற
மேதகு திண்டேரில் வீதிதொறும்—பூதரமாம்
வில்லைக் குனித்தான் வெண்ணாவல் வீற்றிருந்தான்
தொல்லைச் சிலந்திமுடி சூடினான்—தில்லைச்
சிவாவனத்தான் எங்கள் செழுநீர்த் திரளா
னுவாவனத்தான் போந்தா னுலா.

திருவானைக்கா சம்புனாத ருலா முற்றும்.

குறிப்பு :

பாடவேறுபாடுகள் மிகுந்து காணப்படுகின்றன.

இது, எமது சுவடி எண் 196/D-258 போன்றது. பிற செய்திகள் அதில் அறியலாம்.



வரிசை எண் : 4115 சுவடி எண் : 1890-c

# விக்கிரம சோழனுலா

ஏடுகள் : 12 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 36×3 செ மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : ஒட்டக் கூத்தர் பொருள் : உலா

நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

சீர்தந்த தாமரையாள் கேள்வன் திருவுருவக்
கார்தந்த வுந்திக் கமலத்துப்—பார்தந்த
வாதிக் கடவுட் டிசை முகனு மாம்கவன்றன்
காதற் குலமைந்தன் காசிபனு—மேதக்க.

முடிவு :

தூங்குமணி யொன்றே யுலகிற் கொழியுமே
யென்றென்று கூறி வணங்க—மாதிலர்க்
குத்துக் கடாக்களிற்றிற் போந்தான் குலச் சென்னி
யுத்துங்க துங்க னுலா.

விக்கிரம சோழனுலா மூவர்பாடல் முற்றும்.
அகிலாண்ட நாயகி துணை. திருவிளையாடல் உலா
செப்பறை மடத்துக்கு எழுதினது.

குறிப்பு :

இதன் தலைப்பில் 'மூவர் சொன்னது' என்றும், இறுதியில் மூவர் பாடல் முற்றும் என்றுளது. எமது சுவடி எண் 194/D-256 போன்றது. பிற செய்திகளை அங்கு காண்க. வேறுபாடுகள் காணப்படுகின்றன.



வரிசை எண் : 4116 சுவடி எண் : 1891-a

# துதிப்பாடல்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 30 அளவு : 20 × 2½ செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம்: நன்றாக குரு வாழ்க குருவே துணை

ஓங்கா ரத்தில் லுதிக்குஞ் சோதி
ரீங்கா ரத்திய் உதிக்கும் .......
சேர்க்க நிற்குந் திருவுரு வுடைய
மூர்க்க ......... முதல்வ போற்றி

முடிவு :

நின்னை நினைக்க நீ யருள் புரிந்து
தன்னைவிட் டகலத் தானருள் வாயே !
மகா கணபதி லுணை.
இராம செயம்.

குறிப்பு :

இது, நாலாயிரத்து நாற்பத்தெட்டு வியாதிகளையும் வராமல் தடுக்கும்படி இறைவனைப் போற்றித் துதிக்கும் அகவல்.

வரிசை எண் : 4117 சுவடி எண் : 1891-b

# சடாட்சர அந்தாதி

ஏடுகள். 50 கி. எண்ணிக்கை: 500 அளவு : 20 × 2½ செ.மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அகத்தியர் பொருள் : அந்தாதி

நிலைமை : மிகப் பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சர அண பவாய நம

ஆனந்த மாறெழுத் தாலய மாமென தங்கமெல்லாந்
தானந்த மாதி முதற்பொரு ளாகிசத் தாங்கமு நீ
மோனந்த முன்னுள தென்னுள துன்னுளதா
லீனந்தம் போக்கி யெனைநீய தாக்கிய வென் குருவே ! —1.

முடிவு :

வையஞ் சலமங்கி கால்வான் பலவுயிர் வான்முடியோ
டெய்யும் பரமுதற் சார்வதெல் லாமெம்பி ரான்முருகா
தெய்யன தின்றுநின் றாட்சிலம் போசை திருவிளையாட்
டையநின் னங்கம தென்னங்க மாய்நின்ற வானந்தமே ! — 102

அகத்திய முனிவர் அருளிச்செய்த
சடாட்சர வந்தாதி முற்றிற்று. சிவா,
குமர ருகுபரன்றுணை.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 843/D-1121 போன்றது. பாடவேறு பாடுகள் மிகுதி. கட்டளைக் கலித்துறை யாலானது.

பின் ஒரு ஏட்டில் முருக பீஜாட்சர மந்திரங்கள் உள்ளன.



வரிசை எண் : 4118 சுவடி எண் : 1891-c

# கந்தரந்தாதி

ஏடுகள் : 50 கி. எண்ணிக்கை : 500 அளவு : 20 × 2½ செ.மீ.

பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள் : அந்தாதி

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

காப்பு

உன்பதமே யன்றி யுன்னுபதம் வேற்றறியேன்
றுன்பமிக வாராமற் றோன்றியே — அன்புடனே
சுந்தரந் தாதிகனைக் கற்கக் கணபதியே
யெந்தன் மனத்தே யிரு

ஓம் கணபதி துணையுண்டு

நூல்

வாரணத்தா னையனை விண்ணோரை மலர்க்கரத்து
வாரணத்தானை மகத்து வென்றோன் மைத்தனைத் துவச

முடிவு :

செல்வந் திகழு மலநெஞ்ச மேயவன்றே யவமின்னு
செல்வந் திகழு நமதின்னம தீர்க்கும் ————
செல்வந் திகழுந் திருக்கையில் வேற்றினை காத்த செல்வி
செல்வந் திகழும் மணவாள னல்குந் திருவடியே ! — 100

கந்தரந்தாதி முற்றிற்று. தெண்டாயுத பாணி துணை ரட்சிக்கவும்
சின்னஞ்சிறுபிள்ளை .......... மாப்பிள்ளையே.
திருவே ரகத்து ......... மீதுற்ற சண்முகனே !
சுபமஸ்து

குறிப்பு :

இது, அச்சாகியுளது, இதில் பிழைகள் அதிகம்'



வரிசை எண் : 4119

சுவடி எண் : 1891-d

## கந்தரலங்காரம்

ஏடுகள்: 52 கி. எண்ணிக்கை: 500 அளவு: 20×2½ செ.மீ.
பக்கத்திற்கு: 4 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள்: முருகன் துதி
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அடலருணைத் திருக் கோபுரத்தே யந்த வாயிலுக்கு
வடவருகிற் சென்றுகண்டு கொண்டேன் வருவார் தலையிற்
றடபடடெனப் படுகுட்டுடன் சர்க்கரை மொக்கியகைக்
கடதட கும்ப களிற்றுக் கிளைய களிற்றினையே ! முருகா.

வேற்றைக் தவஞ்சற்று மில்லாத வென்னைப் பரபஞ்ச மென்னுஞ்
சேற்றைக் கழியவழிவிட்ட வா செஞ்சடாடவி மேல்
ஆற்றைக் பணியை யிதழியைத் தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமாள் குமாரன் கிருபாகரனே ! — 1

முடிவு :

சலங்காணும் வேந்தர் தமக்குஞ் சாரெமன் சன்னுக் கஞ்சா
துலங்கா நரகக் குழியணுகார் துட்டநோய் அணுகார்
கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்குங் கந்தனன்னூ
வலங்கார நூற்றுளொரு கவிதான் கற்றறிந்தவரே ! — 101.

குறிப்பு :

இது, முருகப்பெருமானை வருணித்து வரம் பெறும் நூல். அச்சாகியுளது.



வரிசை எண் : 4120 சுவடி எண் : 1891-e

## கந்தரனுபூதி

ஏடுகள் : 51 கி. எண்ணிக்கை 800 அளவு : 20×2½ செ. மீ
பக்கத்திற்கு : 4 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள் : சைவ தோத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம்

நெஞ்சக் கனகல்லு நிகழ்ந் திடவே
தஞ்சத் தருள் சண் முகனுக் கியல் சேர்
செஞ்சொற் பனுமா லைசிறந் தருள
பஞ்சக் கறவா னைபதம் பணிவாம்

முடிவு :

அரிவொன் றறிவா ரறிவீ ரறிவீர்
பிறிவொன் ...... ....... வந்தபிறா னலவோ
சிறிவந் தாவந் தது சூற் சிசைய
.................. ன் றலரோடு விமலா சலனே ! — 107

குறிப்பு:

அச்சுநூல்களில் 107 வரை இருப்பதாகத் தெரியவில்லை. பாடல்கள் மாறுபாடாக உள்ளன. பிழைகளும் உள்ளன. சக்கரங்களுடன் உள்ளன. முருகன் மீது பாடப் பட்டது.

இது, எமது சுவடி எண் 814/D–1287, எண் 829/D-1288, எண் 830/D-1289 போன்றது.



வரிசை எண் : சுவடி என் : 1892–a

## கைலாசச் சட்டை முனியார் நிகண்டு

ஏடுகள் : 63 கி. எண்ணிக்கை : 4000 அளவு : 31 × 3½ செ.மீ.

தக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : சட்டை முனியார் பொருள் : மருத்துவம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

ஆதியந்த மில்லாத பூரணத்தை நோக்கி
யடுத்து நின்ற வுன்மனைத்தாய் பதத்தைப் போற்றி
பாதியந்த மாகிநின்ற வுமையாள் சொல்லப்
பாங்கான சின்மயத்தின் கருணை யாலே

முவுடி :

ஒன்றாகவே போட்டு வுருக்கவே மூன்றுநாள்
நன்றா யரைக்க நற்சூத மாயிடுங்
கன்றாக ———

குறிப்பு :

இது, சட்டை முனியார் 1200 போலும். எமது மருத்துவப்பகுதி சுவடி எண் 318-b/D-594 போன்றது.



வரிசை எண் : 4122

சுவடி எண் : 1892-b

# பேரையூர்த் தலபுராணம்

ஏடுகள் : 81 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 31×3½ செ.மீ

பக்கத்திற்கு: 6 வரிகள் ஆசிரியர் : வடமலை நாராயணன் பொருள் : தலபுராணம்

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம். திருச்சிற்றம் பலம்

கார்பூத்த மலர்க் கூந்தற் கயல்விழிப் பச்சிளங்
கொடிசேர் கவினுர்க் கொன்றைத்
தார்பூத்த செழும் பவழாசல மேனி வெண்ணீறு
தயங்கச் செம் பொன்

முடிவு :

மங்கையோர் பாகன் பூசை வளர்ந்து
மேன்மேலும் வாழி
திங்கள் மும்மாரி பெய்து சிறந்து
கானாடு வாழி
தங்கிய மனிதர் யாருஞ்
சந்ததம் வாழி தானே ! — 33

காலம் :

பண்ணாருந் தமிழ்க்குதவுமிரசை யிருவப்ப மகிபாலனீன்ற
கண்ணான பெரியபிள்ளை வடமலை நாராயணக் கொடையாளன்
கலைவல்லாளன்
றண்ணாரும் பேரையூர் வடமொழிப் புராணத்தைத் தமிழாற் செய்தே
யெண்ணாருங் கொல்ல மெண்ணூற் றெழுபத் தைந்தாண்டில் அரங்
கேற்றினானே ! — 34

திருச்சிற்றம் பலம்

தானதனச் சருக்கம் முற்றும் ஆக விருக்கம் 501

பேரையூர்ப் புராணம் முற்றும். செப்பறை மடாலயத்துக்கு

குறிப்பு :

இது, அவையடக்கம், கடவுள் வாழ்த்து, மற்று 16 சருக்கங்களையுடைது என்பது முதலில் காப்பேட்டின் பின்புறம் உள்ளது சிறந்த. நூலாகக் கருதப்படுகிறது.



வரிசை எண் : 4123 சுவடி எண் : 1892-c

# கங்கையா ளாயிர நாம முரைத்த தோத்திரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை: 50 அளவு : 31×3½ செ.மீ.

பக்கத்திற்கு: 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

என்னலொடும் புனற் கங்கை யெய்தி யாட வலியில்லார்
பின்னற் றாங்கந் தவளகங்கைப் பெயர் யாறாடும் பெரும் பேறு
துன்னும் வண்ண முரைத்தியென்னச் சுடர்செய்திகிரி...... படைசுமந்த
கன்னித் துளபமால் கேட்ப முக்கட்கடவுள் கட்டுரைக்கும் — 1

அமுதோதகை யச்சுதை யனகை யதுலை யனந்தை யபிராமை
கமலை கவுரி கந்தவதி கங்கை கயதை கல்யாணி யெமை யூர்மினை

முடிவு :

மன்னு நிதியமுதல் பெருந்திருவி னோங்கி வாழ்வரென
மின்னு கதிர்வேலுடைக் கடவுள் முனிவனொடும்விளம்பினானால் 6

குறிப்பு

இதில் கங்கையின் வெவ்வேறு பெயர்கள் சில கூறப்பட்டுள்ளன,



வரிசை எண் : 4 24 சுவடி எண் ; 1892-d

# சாதிபேத நூல்

ஏடுகள் : 6½ கி. எண்ணிக்கை : 100 அளவு : 31×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வரலாறு

நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

ஆதி பெற்றதா லயனிடத்தி லுண்டான
சாதிபே தங்களெல்லாம் சாற்றவே—நீதித்
திடவார ணங்கள் தினம்பரவு மூக்கட்
கடவா ரணமுகனே காப்பு

முடிவு :

மூன்னிய தொழிலெடுத்து முருக்கியே சரடு கோர்த்துத்
துன்னிய யூசிக்கான தொழில்கொள் சிப்பியர்க ளாவார். – 54

முற்றும்

குறிப்பு :

இது, தொழிலையும், சாதியையும் பற்றிக் கூறுகிறது.



வரிசை எண் : 4125 சுவடி எண் : 1892-e

# சிவராத்திரி கற்பம்

ஏடுகள் : 3½ கி. எண்ணிக்கை : 200 அளவு : 31×3½ செ.மீ

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மாத சிவராத்திரி கற்பம்

மாதசிவ ராத்திரியுஞ் சொல்வாம் மலமறுக்கும்
போதகத்தான் பாதத்தார்வம் பூண்டு —1
பங்குனித குஞ்சித்திரைக் கும்வைகா சிக்கும்ப
ரங்களென வேநீ தெளி. —2

முடிவு :

துறவியே யென்னாளுந் தந்தசுத்தி செய்க
மறுவிதனா லேவரா து. —18

சோமவார சிவராத்திரி கற்ப முற்றும்

குறிப்பு :

இதில், மாத சிவராத்திரி விரதகற்பம், சோமவார சிவராத்திரி கற்பம் ஆகியவை உள்ளன.

சிவராத்திரியின் சிறப்பினைக் கூறுகிறது.



வரிசை எண் : 4126 சுவடி எண் : 1892-f

# திருவாய் மொழி

ஏடுகள்: 2 கி. எண்ணிக்கை : 70 அளவு: 31 × 3½ செ.மீ.
பக்கத்திற்கு: 6 வரிகள் ஆசிரியர்: நம்மாழ்வார் பொருள்: வைணவ தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கரிய மேனிமிசை வெளியநீறு சிறுதேயிடும்
பெரிய கோலத் தடங்கண் விண்ணோர் பெருமான் தனை
உரிய சொல்லா லிசை மாலை புரடி உள்கப் பெற்றேற்
கரிய துண்டோ ஒன்று தொட்டுமணி யென்றும் — 1.

முடிவு :

அரியை யயனை அரனை அலர்த்தி அவாவற்ற வீடுபெற்ற
குருகூர் சடகோபமாறன் வரவிலந்தாதி கழால
வரவிளந்தாதி பெறு பேறு பெற்றார் பிறந்தார் — 8.
வளர்ந்தா ருயர்ந்தே.

குறிப்பு :

நாலாயிரத்திவ்ய பிரபந்தங்களில் ஒரு பகுதி. இதன் பின்னர் 'மாணிக்கமலைப் புராணம்; அகத்தியச் சருக்கம்' எழுதிய ஏடு ஒன்று உளது.



வரிசை எண் : 4127 சுவடி எண் : 1893-a

## கேதாரவிரத கற்மம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : 28 × 3½ செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : சிறிது பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கன்னிமாதம் பூருவ பட்சத் தட்டமி
துடங்கி அமரபட்சத்துத் திரையேதேசி
வரைக்கும் இருபத்தொரு நாளும்
அனுஷ்டிக்குப்படி உதையத்திலே ஸ்நானம்
பண்ணி நித்திய கன்மங்களை முடித்துக் கொண்டு

முடிவு :

தாம்பூலத்திலே பிரமா விட்டுணு ருத்திரரையும்
காப்பிலே வாசுகியையும், முடிச்சுக்களிலே
பிரணவாட்சரத்தையும், விபூதியிலே
வெகுளீசுரனையும் ஆவாகனாதியாக
பூசித்து ஆண்பாலுக்கு

குறிப்பு :

இது, புரட்டாசி மாதத்திலே கேதாரகௌரீ நோன்பென்னும் விரதமிருக்கும் முறையினைக் கொண்டது. 4-வது ஏட்டில் 3 என்ற எண் காணப்படுகிறது. அதில், 'வேதமந்திரம்' என்ற தலைப்பில் சிவனது அருச்சனை மந்திரம் கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4128 சுவடி எண் : 1893-b

## சரசுபதி பூசை அட்டவணை

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 500 அளவு : 28 × 3½ செ மீ
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆகம மண்டபத்தைத் திருமெழுகினாலே
சுத்தி பண்ணி, பட்டு மேற்கட்டி வாழை
தோரணங் கமுகு புட்ப விதானங்களினாலே
அலங்கரித்து அகில் முதலாகிய தூப
தீபங்களினாலும்

முடிவு :

சாமரைக்கு ஓம் சம் சாமரய நம
பேரிகைக்கு ஓம் தும் துந்துபே நம
சங்கத்துக்கு சங்காய நம
செங்கோலுக்குக் கனகதெண்டாய நம
ஆசனத்துக்கு ஓம் சிங்காசனாய நம
சரசுவதி பூசை அட்டவனை முற்றும்.

குறிப்பு :

இது, சரசுவதி பூசை நவராத்திரி காலங்களில் செய்வதையும், அர்ச்சனை மந்திரமும், ஆயுத பூசை மந்திரமும் கூறுகிறது. மகாலட்சுமி பூசையும் இடம் பெற்றுள்ளது.



வரிசை எண் : 4129 சுவடி எண் : 1894-a

## சகுனம்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 250 அளவு : 2 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சோதிடம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தலைவிரி மொட்டை தட்டை
தவசி சன்னாசி பாப்பான் முலை அளி
விரத்த கும்ப முற்கரை விறகுக் கட்டு
நலமுடன் குருடன் செக்கா னாவிதன்

குசவன் குட்ட னிவையெல்லா மெதிரேகண்டால்
யாத்திரை போக ...
20-ஆக 32 இது தன அவச்சாய்கை

முடிவு :

மன்றினில் பாதம் வைத்தான் வளிப்பட்டான்
வாரா நன்றே,
காக்கை பல்லி பெருவாயல்
கருமஞ் சொல்லுந் தும்மலுடன்
யேற்க வந்து விடஞ் சொன்னால்
எல்லாக் கரும நன்றாமே !

குறிப்பு :

இதில், மந்திர சக்கரங்கள், இன்ன நட்சத்திரத்தில் சுரம் கண்டால் இத்தனை நாளில் விடும் என்பது, ராமர் சக்கரம், கௌவுளிசாதல், பாதச் சாய்கை யறிய, பக ளாளிகை ஆகியவை உள்ளன,



வரிசை எண் : 4.30 சுவடி எண் : 1894-b

# மார்க்கண்டன் அகவல்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 70 அளவு : 23 × 3 செ.மீ
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம்

வாத மிகுந்து வளரும்பிர மேகத்தால்
போதங் குறைந்து பிலம்போ காமல்
வாகடநூல் சாஸ்த்திரஞ் சிலோபந் தமிட்கிரந்த
மத்தனையும் பார்த்துப் பரிகரிக்கும் பண்டிதரே !

முடிவு·

கேளாய்நீ மார்க்கண்டன் நெய்யதனை மானிடறன் பேதமறத்
தார்க்கின்ற வேணிபதந் தான் பெற்றோ னார்க்குமிந்த
நெய்சஞ்சீவி வியல்பா யருந்து தற்கு
வந்தபின் நோயதனை மாற்றும்
சிவசகாய முன்னிற்க.

குறிப்பு :

இது, மார்க்கண்டன் நெய்-அகவல் என்றிருக்க வேண்டும்.



வரிசை எண் : 4131 சுவடி எண் : 1894-c

# தத்புருட முக சக்கரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 28×3 செ.மீ.
பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள். மந்திரங்கள் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது
எழுத்து : கிரந்தம்

தொடக்கம் :

யநவாசிம, அகோர பஞ்சாக்கரம்
செபிக்க எல்லா உச். ஹும் சிவாயநம
சவுமிய பஞ்சாக்கரம் செபிக்க
புத்திரருண்டாம்.

முடிவு :

சிவாய ஓம் நம ஸ்வாஹர
பிண்ண தாயினி பஞ்சாக்கரம்
செத்தவனை ஒருதரம் எழுந்திருக்கச்
சொன்னா லெழுத்திருப்பன்.
முற்றும்.

குறிப்பு :

இது, மாந்திரீகத்தின் அடிப்படையில் எழுதப்பட்டுளது. சிவபெருமானின், ஈசானம் தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் ஆகிய ஐந்து முகங்களின் தத்புருடமுகத்தால் அமைக்கப்பட்ட மாந்திரீகமாகும்.



வரிசை எண் : 4132 சுவடி எண் : 1894-d

# சத்தியோஜாதமுக சக்கரம்

ஏடுகள் : 1 கி எண்ணிக்கை : 50 அளவு : 28 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மந்ரீரகம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

மசிவாயந பெந்தன பஞ்சாட்சரம்
செபிக்கப் பிறிவிக்கும்
வம் சூவம் சிவாநம பிரசாபதி
பஞ்சாக்காம காயத்திரி தேவியைக் காணலாம்

முடிவு:

மோகய மாரய மாரய உச்சாடய உச்சாடய
துட்ட துட்ட நிக்கிரக நிக்கிரக ஆவே செய
ஆவே செய சீக்கிரம் சீக்கிரம் ஐயம் சீம்
சௌம் சிவ சுப்பிரமணிய சுவாகா.

சிவமயம்.

குறிப்பு :

இதுவும், சிவபெருமானுடைய ஐந்து முகங்களில் ஒன்றின் பெயரான சத்தியோஜாத முகத்தின் பெயரால் இந்த மந்திர சாத்திரம் அமைந்துளது.

சுப்பிரமணியமந்திரமும் உள்ளது.

வரிசை எண் : 4133 சுவடி எண் : 1894-e

# சுப்பிரமண்ணிய பூசை மந்திரம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 150 அளவு : 28×3 செ.மீ.

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓம் சுப்பிரமண்ணி யாசனாய நம.
ஓம் சுப்பிரமண்ணிய மூர்த்தியே நம
ஓம் சுப்பிரமண்ணி யாய நம
ஓம் சுப்பிரமண்ணிய யீசானாய நம

முடிவு :

அரம் புண்ணியம் பற்பந் திறிலோக்கிய
பாவனம்.
சிகாரம் சூரியனைப் போல
வகாரம் சோதியைப் போல
யகாரம் நெறியகண் போல
நகாரம் சீரிய பூமியைப் போல
யகாரம் பொன்னிருள் போல.

குறிப்பு :

இதில், சுப்பிரமணியரை அர்ச்சிக்கும் மந்திரங்கள் கூறப்பட்டுள்ளன. 108 நாமங்கள் கூறப்பட்டுள்ளன. வாயுக்களின் வகை, விபூதி சுலோகம் முதலியன கூறப் பட்டுள்ளன.



வரிசை எண் : 4134 சுவடி எண் : 1894-f

# 25 மூர்த்தம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 28×3 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

சந்திர சேகர மூர்த்தி
உமா கந்த மூர்த்தி
விற்சுவாருட மூர்த்தி
நடராச மூர்த்தி

முடிவு :

சிகார லகாரம் சிவமொடு சத்திய கார மதுவே
ஆற்மா வாகும் நகாரமதுவே நற்திரோ தாயி
மகாரமதுவே மலனெ லாமே.

குறிப்பு :

இதில், 25 மூர்த்திகளின் பெயர்களேயன்றி, சோடச கலைகளின் பெயர்கள், மதங்களின் பெயர்கள் முதலியன கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4135 சுவடி எண்: 1895–g

# திருச்சிற்றம்பலக் கோவை இயற்கைத் துறை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 28×3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : மாணிக்கவாசகர் பொருள் : திருமுறை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

எண்ணிறைந்த தொல்லை யெழுகோ புரந்திகழ்க்
கண்ணிறைந்து நின்றருளுங் கற்பகமே—நண்ணியசீர்த்
தேனூறு செஞ்சொற் றிறாக்கோவை யென்கின்ற
நானூறு மென்மனத்தே நல்கு !

முடிவு :

உருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே
மதிவாணுதல்வளர் வஞ்சியை
கதிர்வேலவன் கண்ணுற்றது. —1

குறிப்பு :

இதில், திருக்கோவையாரின் முதற் பாடல் மட்டுமே உளது.
பின்புறம் 25 மூர்த்தங்களின் பெயர்கள் உள்ளன.



வரிசை எண் : 4136 சுவடி எண் : 1894–h

# எழுவர் பாடல் வரலாறு

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை: 50 அளவு : 28 × 3 செ.மீ

பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : எழுவர் பொருள் : வரலாறு

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ

தொடக்கம் :

இதன்பின் சொல்லப்பட்ட பெண்பானால்வரும்
ஆண்பான் மூவரு மாகிய ஏழு பிள்ளைகளையும்
ஆதியும் பகவனும் அப்புரம் போம்போது
ஆதியானவன் அப்பிள்ளைகளை நோக்கி
யாவர் காப்பாற்றுவார் என்று

முடிவு :

கபிலர் :

கொர்ப்ப முதலின் றளவுங் கெடுவாராமற்
காத்தப்புடனே யன்ன மளித்திட்டோன்—தப்பித்துப்
போனானோ கண்டுயிலப் புக்கானோ நின்மனம்போல்
ஆனானோ யன்னா யறை — 7

எழுவர் பெயர் :

கபில ரதிகமான் கான குறப்பாவை முகிலனைய
கூந்த னுருவை பகருங்கால் வள்ளுவ ரம்வை
வயலூற்றுக் காட்டுப்பை யெள்ளி யெழுவரிவர்

முற்றிற்று

குறிப்பு :

ஆதியும் பகவனும் பெற்ற பிள்ளைகள் எழுவரையும் விட்டுவிட்டுச் சென்ற போது எழுவரும் பாடிய ஏழுபாடல்கள் உள்ளன. எழுவர் பெயர்களும் உள்ளன.



வரிசை எண் : 4137 சுவடி எண் : 1894-i

# வினாயகர் கவசம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 28×3 செ.மீ

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்:

திங்களின் சடையோன் குஞ்சி
 தெறிந்திடுஞ் சென்னி காக்க
பொங்கிய தூம கேது
 புரைகவர் நெற்றி காக்க
பங்கமில் வெள்ளை நேமிப்
 பரஞ்சுடர் விழிகள் காக்க
வெங்களைத் தாங்கு முக்க
 ணீச னாசியினைக் காக்க — 1

முடிவு :

சிந்தை செய்திருப்பார் நாளுஞ்
 செல்வரா யிருந்து பார்மே
லிந்திர னாவார் பின்னு
 மெய்துவர் பரலோ கத்தே! — 14

விநாயக கவசம் முற்றும்

வண்டுபடினு மயிர்படினு வளைந்து சிலந்தி சுத்திடினுத்
துண்டம் படினுங் கிரிமி துளைத்த ாயிடினுஞ்
சண்டமதனால் வீழ்லையுஞ் சருகா யுலர்ந்தானாலு
மண்டர் பிரானுக்கோர் வில்வ மளிப்பார் பெருமை யளப்பாரார்.

குறிப்பு :

இது, கந்தர் சஷ்டி முதலான கவசம் போல், நம்முடைய உடலுறுப்புகளைக் காக்கவேண்டு மென்று விநாயகரை வேண்டுவது. கடைசிப்பாட்டில் மேலும் பலன் கூறுகிறது.

இது, கஞ்சனூர் திருவருள் தலஇறநி மன்றம் வெளியிட்டுள்ள விநாயகர் கவசத்தினும் வேறாயது.



வரிசை எண் : 4138 சுவடி எண் : 1894-j

# சுப்பிரமணியர் பேரில் பதம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 28 × 3 செ மீ

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஆறுமுகச் சிவனே ஐந்துமுகச் சிவன் வடிவை
அடிமைக்குச் சொல்ல வேணும்
தேறுமுக மாக வதோமுகம் வந்த போது
திருவவ தாரஞ் செய்தருளிய திருச்செந்தூர்
ஆறுமுகச் சிவனே ஈசானமுகஞ் சுத்தப் பளிங்கு நிற
மாக யிலங்குஞ் சதுர்ப்புமு

முடிவு :

திகழொளி பவனே பரிபுரபவனே பவனொளி பவனே
சரவண பவனே சண்முக பவனே ததும்பாமல்
நிறைந்தருள் சிதம்பரச் சிவனே !
ஆறுமுகச் சிவனே ஐந்துமுகச் சிவன் வடிவை
அடிமைக்குச் சொல்லவேணும்
குமரகுருபர ஷண்முகனாதன் சகாயம்.

குறிப்பு :

ஆறுமுகப் பெருமான் சிறப்பியல்புகளும், சிவபெருமானது சிறப்பியல்புகளும் இதில் புகழ்ந்து கூறப்பட்டுள்ளன. பின்னர் 'நெற்றியிற் கண்ணர்' எனத் தொடங்கும் பாடலொன்று எழுதப்பட்டுளது.



வரிசை எண் : 4139 சுவடி எண் : 1894-k

# வேல்முருகாற்றுப்படை

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 28 × 3 செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பொன்னிற மேனியும் பொற்புமா முடியு
மின்னுறு முகமும் விழிபன்னி ரெண்டும்
நீறணி நெத்தியும் நீண(லை)க வாயும்
கூறொண(ா) வடிவுங் கூரிய முக்கும்

முடிவு :

நின்னையும் நின்னுடைய தெய்வா னையும்
மன்னிய வலத்தில் வள்ளிநா யகியும்
பச்சை மயிலையும் பதித்தென் இறுதயத்தில்
யிச்சை யுடனே யினிதிருந் தருளே !

வருமுருகாற்றுப்படை முற்றும்.
நயினார் முன்னிற்க

குறிப்பு :

நயினார் தியானம், வருமுருகாற்றுப்படை எனத் தலைப்பிடப்பட்டிருப்பினும், இது வேல்முருகாற்றுப்படை.

எமது, சுவடி எண் 1282-m/D-1584 போன்றது.



வரிசை எண் : 4140 சுவடி எண் : 1894-I

# அருணாசலப்பத்து

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு ; 28 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் :
தோத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

நினவாகி மூலநினை யாகிநேச்
நிசரூப மான வடிவே
மனமாய்கை மூடி யறிவே கலங்கி
மனமோ மயங்கி வெகுயா
யினமோ டிருந்து வெகுவா யலைந்து
விமதூத ரோடி வருமுன்
மனவேக மாக யருணாச லீசர்
வரவேணு மெந்தன் முன்னே ! —1

முடிவு :

அடிமூல வட்ட மதிலாறு திட்ட
மரியாத வெள்ள வடமே
துடியான சத்தி சிவரூப மான
சுகமான வேத வடிவே
அடியார்க ளுள்ளந் தெளிவாய் பிலங்கை
யானேயுன் னாம மறவேன்
வடிவான சோதி யுருணாச லீசர்
வரவேணு மெந்தன் முன்னே ! —10

அருணாசலபத்து முற்றும்

குறிப்பு :

இது, திருவண்ணாமலையில் எழுந்தருளியுள்ள அண்ணாமலையார் மீது பாடப் பட்ட பத்து பாடல்களாகும். பின் புறத்தில் 'கரினாள் அறியும்படி' என்ற தலைப்பும் விபரமும் உள்ளன.



வரிசை எண் : 4141 சுவடி எண் : 1894-m

# மயில் விருத்தம்

ஏடுகள் : 1½ கி. எண்ணிக்கை : 100 அளவு : 28×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அருணகிரிநாதர் பொருள்: தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வற்றாத வைகை வளநாடு கண்டு
மலைமே லிருந்த குமரா
உற்றா ரெனக்கு யொருபேரு மில்லை
உமையாள் தனக்கு மகனே !
முத்தான மைந்து யடியேனை யாளு
முருகேச ரென்ற பொருளே
விஸ்தார மாக மயில்மீதி லேறி
வரவேணு மெந்த னருகே ! —1

முடிவு :

கால னெழுந்து வெகுபூசை செய்து
கயறு மெடுத்து வருமுன்

வேலும் பிடித்து யடியார் தமக்கு
வீராதி வீர ருடனே
நீலஞ் சிறந்த குறமாது வள்ளி
நினவாக வைத்த குமார
மாலென்ற கொண்டல் மயில்மீதி லேறி
வரவேணு மெந்தன் அருகே !

மயில் விருத்த முற்றும்

குறிப்பு :

இது, திருவண்ணாமலையில் பாடியது. இது, எமது சுவடி எண் 1282–e/D-1861-ன் வேறாயது.



வரிசை எண் : 4142 சுவடி எண் : 1894-n

## சச்சிதானந்த மாலை

ஏடுகள்: ½ கி. எண்ணிக்கை: 20 அளவு: 28×3 செ.மீ.

பக்கத்திற்கு: 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: மாலை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

முத்தமாய் நின்றபர னாதவொலி கீதமொரு
முச்சந்தி வீதி நடுவில்
மும்மல மகற்றிவெளி நிர்மல சொருபமாய்
முச்சுடரி னுச்சி முடிவில்
உத்தமா தேசிபரி சுத்தமா யட்டதிசை
உண்டாடி வெட்ட வெளியில்
ஒளியாகி விரிசுடரி னுதையகிரி யணையிலே
ஒருநாலு மிருநா லுடன்.

முடிவு :

நித்தமாய் நின்றபரி யூரண சதாசிவ
நிலைகொண்ட சோதி மயமே.
நின்மகிமை கண்டுள்ளே தெண்டனிடு தொண்டர்தம்
நினவுசற் றயாரதவர் சற்றமாய்

நின்றவாளி றற்றினமணி தீபமே தரவேணு
மிது சமைய மே.
தற்பரா னத்தசபை நிட்களா னந்தசிவ
சச்சுதா னந்த குருவே ! —1.

குறிப்பு :

இதில், ஒரு பாடலே உளது, இது, எமது சுவடி எண் 894/D-1147 போன்றது.



வரிசை எண் : 4143 சுவடி எண் : 1894-o

## சனிகேசுவரன் பேரில்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 20 அளவு : 28×3 செ.மீ.

பக்கத்திற்கு : 5 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் ;

பனி பகலில் கண்டொடுந் நண்மை போலே
பழவினைக ளணுகாமல் பகுதி மைந்தா
கனிபசுந் தென்மதுர முற்ற கருணை யானை வீணை
கருத்த்ரங்க வேணுமெந்தன் கலிகள் தீர
யினிபல நூல்தெரியும் படியிருகண் காண
யிசாதிரு நள்ளாத்தி லிருக்குந் தேவே
சனிபக வானுனைத் தொழுதே னெனைத் தொடாமல்
தயவு வைத்துக் காத்தருள்செய் தம்பிரானே !

முடிவு :

சனிபகவானே யணுகாமல் தயவுசெய் வாயே
அனியாய மெத்த கலியுகந் தன்னில்
அடியவர்க் குந்தன் பிடியில் லாமலே
புனிதமாய்த் துதித்தினது கரத்தால் போற்றுவேன்
பதம் வாழ்த்துவேன் நிதம் ஸ்ரீ பகவானே !

குறிப்பு :

இதில், இவ்விரண்டு படல்கள் மட்டுமே உள்ளன.

வரிசை எண் : 4144 சுவடி எண் : 1894-p

# சிதம்பரேசுரர் பேரில் வண்ணம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 28×3 செ.மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வண்ணம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வள்ளைக்குள் விழிவைத்த குறப்பெண் போல
 வருதெய்வத் துறையழித்த துரைப்பெண் காதலா
செப்பும் பிரணவத்தின் பொருட்கண்டு
 சிறைக்கம்ப மிடற்றன்

முடிவு :

தில்லைப் பதிதழைக்க நடிக்கின்றோர் கமலத்தன்
 குலிசத்தன் தோள் பத்தன் சயனத்தன்
பணிகத்தன் புலிநித்தம் பணி சிற்றம்பல வாணர்
 வரைமாதருத் துதிக்குந் தோகைய ராட ..............

குறிப்பு :

இது எமது சுவடி எண் 702/D 357-ன் உட்பிரிவு போன்றது.



வரிசை எண் : 4145 சுவடி எண் : 1894-q

# மன்னார்பேரில் வண்ணம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 28×3 செ மீ.

பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வண்ணம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம்

வேலை நெடுந்திரை யாகியல்பாய்
விரிந்ததிலே நிமிராயிரம் படனாக பஞ்சணை
மீதுறங்கிய நன்பரந்தாமா

சீர்பெறு பஞ்சவ ரேவிய காரியஞ் சொலவே
திரியோதனன் சபையூடு சென்றிருகால் வருந்த

முடிவு :

சுருண்ட வெங்கானில் மாது நடந்தனளே
என்னகாரணந் தெய்வமே யினியாரை நொந்து
பிரையோனந் தனியே கிடந்து புலம்புமென்
பிராணன் விதியிது கற்மானு பவமே ! —1.

மன்னார்பேரில் வண்ண முற்றும்.

குறிப்பு :

இது, கண்ணபிரான் மீது பாடப்பட்ட வண்ணமாகத் தெரிகிறது.



வரிசை எண் : 4146 சுவடி எண் : 1894-ர

# பட்டினத்துப் பிள்ளையார் ஞானம்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 28×3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : பட்டினத்தார் பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஆண்ட குருவை அருண்மிகப் போற்றாமல்
வேண்டுங் கயிலாச வீடுவழி வாராமல்
பூண்டகுழல் மாதுநல்லாள் பெண்மாய்கைக் குள்ளாகி
தூண்டி லகப்பட்ட கடுகெண்டை போலா னோமே ! —1.

முடிவு :

ஓடுகின்ற மரக்கலத்தை ஒன்பதுவாய்ப் புழுக்கூட்டை
போடுமிட மெவ்விடமோ பொருந்துமுயிர் வெவ்வேறோ
தேடுகின்ற அவ்வடியார் சிவலோகக் கொடிகட்டி
ஆடுகின்ற அம்பலவர் அருளையோனங் காண்கிலனே னெஞ்சகமே —7.

குறிப்பு :

முதலேட்டிலுள்ள அதே 7 பாடல்களும் பின் ஏட்டிலும் உள்ளன.



வரிசை எண் : 4147 சுவடி எண் : 1894-s

# பராபரக் கண்ணி

ஏடுகள். 1 கி. எண்ணிக்கை: 50 அளவு : 28×3 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : பட்டினத்தார் பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பராபர மாலை சிவமயம் ராமஜெயம். சிவ மகா தேவ

சீராருந் தெய்வத் திருவருளாம் பூமிமுதல்
பாராதி யாண்ட பதியே—பராபரமே —1

கண்ணாரக் கண்டோர்க் கரும்பொருள் காணாமல்குள
விண்ணா டிருந்த வின்பபெற்பே—பராபரமே. —2

முடிவு :

ஈனந் தருமுடல மென்னிதியா னென்பர்
வானந்தம் வேண்டி யலந்தேன்—பராபரமே ! —20

குறிப்பு :

தலைப்பு 'பராபர மாலை' என்றுளது. இது அச்சாகியுளது.



வரிசை எண் : 4148 சுவடி எண் : 1894-t

# பத்திரகிரியார் புலம்பல்

ஏடுகள்: 1 கி. எண்ணிக்கை : 50 அளவு: 28×3 செ.மீ.

பக்கத்திறகு: 7 வரிகள் ஆசிரியர் : பத்திரகிரியார் பொருள்: தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

முத்தி தரும்வேத மொழிந்த மெய்ஞ்ஞானப் புன்சொ
லத்தி முகவன்பாதம் அருள்பெறுவ தெக்காலம் —1

ஆங்கார மும்மடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம் —2

முடிவு :

மேலாம் பரத்தே வீணி லலையாமல்
நாலாம் பறந்தேடி நலம்பறுெவ தெக்காலம் —16
ஒளிபடர்ந்த குண்டலியை உன்ன உணராமல்
........... ........... ...........

குறிப்பு :

பட்டினத்தாரின் கணக்காயிருந்து, பட்டினத்தார் துறவு பூண்டதும் அவரது சீடராயிருந்து பாடிய பாடல். இது, 'எக்காலக்கண்ணி' எனவும் பெயர் பெறும். அச்சாகியுளது.



வரிசை எண் : 4149 சுவடி எண் : 1894-u

## சித்தரந்தாதி

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 28 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர்: சித்தர் பொருள் : அந்தாதி
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பாரடையப் பதந்தந் திக்கடை யப்பரி வட்டங்குழல்
காரடையக் கொங்கை வெற்படையக் கடுகனகச் சடைக்காட்
டூரடையப் பகிரண்டத்து னெல்லைவல் லிக்குகாந்த
நீரடையத் தண்ணி திருக்கோயி லென்னெஞ்சகமே! —1.

முடிவு :

வேதாந்த மந்தஞ் சகல கலாந்தமும் பொதிந்தவிந்து
நாதாந்த நாயகி யென்னம்கே நின் நயனமென்னுங்
காதார்ந்தக் காற்கடல் கோக்குங் கருணை ...........

குறிப்பு :

இதில், 5 செய்யுட்கள் முழுமையாயுள்ளது. இது, எமது சுவடி எண் 128-a/D-228 போன்றது, பிற செய்திகளை அங்கே காண்க.

வரிசை எண் : 4150 சுவடி எண் : 1894-v

# சிவ பூசைத் திருவகவல்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 200 அளவு : 28×3 செ மீ. க்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : கமலை ஞானப்பிரகாச பட்டாரகர் பொருள் : சைவ சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓசைச் சிவாகமத்தி லுள்ளபடி கண்டமைத்த
பூசைத் திருவகவல் போற்றவே - யாசில்
பொருணயமுஞ் சொன்னயமும் போதத்தி னல்கக்
கருணை பொழி வாரணமே காப்பு.

பூங்கம லத்தயன் புண்ட ரீகக்கண்
ணீங்கிவர் காணரு மிலிங்கம தாகிய
சங்கரன் றன்னைச் சாற்றுதல் புரிவோர்
அங்கர னங்கவன் றென்பா லாசனத்திருந்தே.

முடிவு :

நறுமல ரணைந்த பாத்தியமுத லருக்கிய முன்றினுட
பொருவிலா ரங்கம் பொருந்து பாத்தியமும்
பிரம-மாதங்க ஆசன மனமுந்
தீதற வனமத்த பின்றிக ளருக்கியந்தனை
யாசன மூர்த்தியோ டைமுக மந்திரஞ்
சீலமா ...... ......

குறிப்பு :

இது, எமது, சுவடி எண் 387-b/D-152 போன்றது



வரிசை எண் : 4151 சுவடி எண் : 1895-a

# ஞானபூசை அட்டவணை

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 150 அளவு : 20×4 செ.மீ. பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சத்தினி பாத முதிர்ச்சியினாலே
ஞாநாசிரியனை யடைந்து தீட்சையைப்
பெற்று சிவாகமஞ் சிவானுபூதி யுமுடைய
ஞானவான்களை ஞானமார்கம் அனுட்டிக்கக்
கடவர்.

முடிவு :

பராமுக வர்க்கியங் கொடுத்து இந்த மந்திரங்களையு
மற்கியங்களையு மொடுக்கிப் பாத சுத்தி யாசமனங்கள்
செய்து சிவசமாதியிலிருப்பது.

ஞானபூசை அட்டவனை முற்றும். சுபமஸ்த்து

சங்கரலிங்கங் கையெழுத்து. நீடூழி காலம் வாழ்க
அழகிய கூத்த ஞான தேசிகன் திருவடியிற் கண்ணாக வருளில்
அலவற நிற்பதா மென வறிக.

சற்குரு பாதம்

குறிப்பு :

இதில், தகுந்த குருவை அடைந்து சமய தீட்சை முதலான தீட்சைகளைப் பெற்றுச் சிவபூசை செய்யும் முறை கூறப்பட்டுளது.

இது அடுத்த 6-வது ஏட்டில் முடிகிறது.



வரிசை எண் : 4152 சுவடி எண் : 1895-b

## ஞான போசன விதி

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : 20 × 4 செ.மீ. பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள்: சைவ சாத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருவரு ளறச்சனை யதனைச் செலுத்தி
முன் நீ செய்த வினைப்பயன் அருந்தச்
சிந்தை யாறியிருவரு மேலொருவனுள்ளில்லா
தில்லையிட வுரியோர்

முடிவு :

யோருணவு திவேதியா துண்ணா வாயமை
யுடையயா யுயர்ஞான போக முற்று
சாருமொரு நித்திரையு முய்த்துணர்க
ஞானச் சரிதமிது மெய்கண்டான் சந்தானத்தே ! —4

குறிப்பு:

ஏட்டின் பிற்பகுதியில் தொடங்குகிறது. மெய்கண்டார் சந்ததியினர் அனுட்டித்த முறையிது எனலாம்.



வரிசை எண் : 4153 சுவடி என் : 1895-c

# தத்துவப் பிரகாசம்

ஏடுகள் : 46 கி. எண்ணிக்கை : 3000 அளவு : 20×4 செ.மீ.
பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : தத்துவப் பிரகாசர் பொருள் : வேதாந்நம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக குரு பாதம்
பரையீன்ற தனியொளியே வடிவாய் ஞானம்
பகரிச்சை கிரியையும் மதமாய்ப் பண்டை
வரையீன்ற வுமையீன்ற வைங்கை நால்வாய்
வளர்முக்க ணிருசெவியோர் வலிய கோட்டு

முவுடி :

கோட்டிடு முரையு மாசான றுதிகளே
குணத்துள் மெய்யிற்

பூட்டுறு தொழிலு மாசான் வழி செயப்
புகழா மன்றே ! —337
தத்துவப் பிரகாசம் முற்றும்.
குருபாதார விந்தமே கெதி

குறிப்பு :

இதில், சரியை யாதி தொகை, சரியையிற் சரியை, கிரியையிற் சரியை யோகத்திற் சரியை, ஞானத்திற் சரியை முதான பல தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 4154 சுவடி எண் : 1895-d

# அண்ட பிண்டம் தத்துவ ரூபம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 400 அளவு : 20 × 4 செ.மீ.

பக்கத்திற்கு : 15 வரிகள் **ஆசிரியர் : அறியக்கூடவில்லை** பொருள் : வேதாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ் + கிரந்தம்

தொடக்கம் :

தத்துவ ரூபமாவது : தத்துவம் 36-ம்
சாதாரணமென்றும் அசாதாரண மென்றும்
இரண்டு வகைப்படு மிதில் சாதாரணமாவது:
ஆத்மாக்க டோறுந் தனித்தனியே யிருப்பது.

முடிவு :

சுத்தவித்தை முதல் ருத்திரமூர்த்தி மயேசுர
மூர்த்தி சதாசிவ மூர்த்தி சத்திசிவ முறையே
யிருந்து பிரேறிக்கையினாலே சிவதத்துவ மென்றும்
பேர். ஆகத் தத்துவம் 36-ன் றொழில்
கண்டு கொள்க.
தத்துவரூப முற்றும்

குறிப்பு :

இதில், தத்துவம் முப்பத்தாறின் இலக்கணம் கூறப்பட்டுளது.

வரிசை எண்: 4155 சுவடி எண் : 1895-e

# சிவஞான சார முகவுரை

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 150 அளவு : 20×4 செ.மீ.
பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

பவஞான மாயை காப்பு
ஆதியா யந்தமாய் 1
பெத்தநிலை நின்றும் 2
நன்னெறி சேர் 3

முடிவு :

யேதுடுத்தேனே தணிந்தே —.7
உண்டுறங்கிப் பூசி யுடுத்து 98
உள்ளும் புரம்பு மொரு 99
பந்த மறுத்தாண்ட பரஞ்சோதி 100

சிவஞான சாரம் முகவுரை முற்றிற்று
திருச்சிற்றம்பலம்

சந்தனாசல சண்முகத் தெய்வமே துணையாக வேணும்.

குறிப்பு :

இதில், பின்வரும் நூலின் பாடல் முதற் குறிப்பட்டவணை கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4156 சுவடி எண் : 1895-f

# சிவஞான சாரம்

ஏடுகள் : 9 கி. எண்ணிக்கை : 400 அளவு : 20×4 செ மீ.
பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : வேதாந்தம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பவஞான மாயைப் பிரபஞ்ச மெல்லாந் தீர
சிவஞான சாரத் தெளிவை—தவஞான
மேய வருளால் செப்ப விளங்குந் திருமுகத் தோ
கையுடயான் பொற்பாதங் காப்பு

முடிவு :

பந்த மறுத்தாண்ட பரஞ்சோதி மாமுனிவன்
றந்த பறமானந்த சாரத்தில் - அந்தமறச்
சந்ததமு மின்படிகந் தானா யிருந்ததனை
யெந்தநெறி சொல்வே னியான் —100

திருச்சிற்றம்பலம்
முற்றிற்று
செப்பறை மடத்துக்கு

குறிப்பு :

இதில், முன்கூறிய அட்டவணையில் உள்ள பாடல்கள் வெண்பாக்களாக உள்ளன.



வசை எண் : 4157 சுவடி எண் : 1895–ஐ

# ஆனந்தக் களிப்பு

ஏடுகள் : 2½ கி எண்ணிக்கை : 200 அளவு : 20 × 4 செ.மீ.
பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : தாயுமான சுவாமிகள் பொருள்: ஆனந்தக் களிப்பு நிலைமை : நல்லநிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சங்கர சங்கர சம்போ—சிவ
சங்கர சங்கர சம்போ
சங்கர சங்கர சம்போ
ஆதி யனாதியு மாகி—எனக்
கானந்த மாயறி வாய்நின்றிலங்குஞ்
சோதி மவுனியாய்த் தோன்றி

முடிவு :

அன்றென்று மாமென்று முண்டோ—வுனக்
கானந்தம் வேண்டி யறிவாகிச் சற்றே

நின்றாற் றெரியு மெனவே மறை
நீதியெம் மாதி நிகழ்த்தினான் றோழி
சங்கரா சங்கரா சம்போ —50

திருச்சிற்றம்பலம்
பொன்னம்பல தேசிகன் றிருவடி வாழ்க

குறிப்பு :

இது, ஆனந்த மேலீட்டால் இறைவனைத் துதித்துப் பாடும் பாடலாகும். இனிய சந்தமுடையது.



வரிசை எண் : 458 சுவடி எண் : 1895-h

# அம்பலவாணர் ஆனந்தக் களிப்பு

ஏடுகள் : 1½ கி. எண்ணிக்கை : 100 அளவு : 20×4 செ.மீ

பக்கத்திற்கு : 13 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : ஆனந்தக் களிப்பு நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம்:

சங்கர சிவ சம்போ—சிவ
சங்காரனந்த சங்கர சம்போ
சங்கர சிவசிவ சம்போ.

உற்பவ நாசமிலாதா னுருவெடுத் தென்போலுதித்தே
உலகிற்றற் பதஞ்சூட்டித் தலைமேற் சாரார் மற்சாராரவே.

முடிவு :

அத்துவா வாறுமடங்கும் பாவவினையை யறுத்ததற் கப்பால்
சத்த சத்துச்சத சத்துத் தானின்ற வாறிதுதா னெனச் சாற்றி
யத்து விதத்துவிதத்தோ டத்து விதத்தை யருளி
வித்தரித்தம்பல வாணன் வெளியில் வெறும் பாளில் வீடு தந்தான்
காண் —12

சங்கர சிவ சிவ சம்போ சிவ சங்கரா னந்த சங்கர சம்போ
சங்கர சிவ சிவ சம்போ

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

அடுத்த ஏட்டில் முடிகிறது. அம்பலக் கூத்தன் மீது பாடப்பட்ட பாடலாகுமிது.



எண் வரிசை : 4159 சுவடி எண் : 1895-i

# சிவஞானக் கிரியன் ஆனந்தக் களிப்பு

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 20×4 செ.மீ.

பக்கத்திற்கு: 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : ஆனந்தக்களிப்பு

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்+கிரந்தம்

தொடக்கம் :

ஆனந்த மானந்தந் தோழி-கம்ப
ராடுந் திருவிளையாட்டினைப் பார்க்கி
லானந்த மானந்தந் தோழி
ஒன்றுவிட் டொன்று பற் றாம — லென்று
மொன்றுவிட் டொன்றினைப் பற்றவல்லார்க்

முடிவு :

நாதத் துடியி னடிப்பு — மெள்ள
நடந்து நடந்து நடிக்கு நடிப்பும்
வேதம் படிக்கும் படிப்பும் — வதன
மீது விளங்குங் குறுவேர்ப் பொடிப்பு. — 15

ஆனந்த மானந்தந் தோழி — கம்ப
ராடுந் திருவிளையாட்டினைப் பார்க்கி
லானந்த மானந்தந் தோழி !

ஆனந்தக் களிப்பு முற்றும்
திருச்சிற்றம்பலம். அழகிய கூத்தன் துணை.

குறிப்பு :

இதில், முப்பத்தாறு தத்துவங்களின் விளக்கம் முதலான பல செய்திகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4160 சுவடி எண்: 1895-j

# செப்பறை சபாபதி பேரில் ஆனந்தக் களிப்பு

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 200 அளவு : 20×4 செ.மீ.

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : ஆனந்தக் களிப்பு நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

கங்கைச் சடைமிசை பாம்பு
    அரன்காதி லணி குண்டலம் பாம்பு மார்பிற்
றங்கு முபவீதமும் பாம்பு வரை
    தங்கிய நாண் கவுபீனமும் பாம்பு.

முடிவு

கண்ணுதல் நல்ல குணத்தார் வெய்ய
    கனலென வந்தகலை பட்சணத்தார்
வண்ணவரி கோவணத்தார் மன
    வஞ்சரை அஞ்சவே வாதை பணத்தார். — 12

குறிப்பு :

ஆனந்தக் களிப்பு 12 பாடல்கள் இருப்பதால் இதுவும் 12 பாடல்களைக் கொண்டதாக இருப்பதால் இது முழுமை எனக் கொள்ளலாம். முற்றும் என்று இல்லை.





வரிசை எண் : 4161 சுவடி எண் : 1895-k

# பரமஞான விளக்கம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 800 அளவு : 20×4 செ.மீ.
பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்தம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

உளங்களி கூர வென்ற
    லுண்மையாங் குருவைப் போற்றி
விளங்கிய பரம ஞான
    விளக்கத்தை இனிது பாட
விளங்களிற் றானைக் கன்றை
    யிறைவனார் மைந்தன் றன்னைக்
களங்கமற் றருள்க வென்றே
    கருத்தினால் வணக்கஞ் செய்வாம் — 1.

முடிவு :

வையந் தொழுவே பரமபத மன்னிடுவார்
அய்யன் றிருவாணை சத்திய மீதா மென்றார். — 99.
குருபாதமே துணை
பரமஞான விளக்க முற்றும்,

குறிப்பு :

இதில், பாயிரம், பாச தெரிசனம், சித்தாந்தம், பசு தெரிசனம், பதி தெரிசனம் அடைந்தோர் தன்மை, ஆகிய தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 4162 சுவடி எண் : 1895-1

# திருவாய் மொழி

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 50 அளவு : 20 × 4 செ.மீ. பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : நம்மாழ்வார் பொருள் : வைணவ தோத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்ப்
பெருந்துய ரிடுப்பையிற் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தம்மோ
டவர்தருங் கல்வியே கருதி

முடிவு :

சந்தினொடும் மணியும் கொழிக்கும்
புனல் காவிரி
யந்திபோலும் திறத்தார் வயல்சூழ்
தென்னரங்கமே. —1.

குறிப்பு :

இது, நாலாயிரத் திவ்ய பிரபந்தத்துள் காணப்படுவது

வரிசை எண் : 4163 சுவடி எண் : 1895-m

# தணிகை சகல பண்டிதராசன் விருத்தம்

ஏடுகள்: 1 கி. எண்ணிக்கை: 50 அளவு: 20×4 செ.மீ.

பக்கத்திற்கு: 13 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஓங்கார உருவ சின்மய விமல ஒளியாகி
உலக முழுவது நிறைந்த உண்மைப் பராபர
நிராமய நிராலம்ப வும்பர்கள் சிகா ரெத்தினமே
யாங்கார நீங்காத தீங்கான வத்தின்

முடிவு :

திருவாளரைத் தெரிசியாது உருமையுட னடியெனு
மச்சாவணைச் சாசுவந்து வந்தாடி யுட்கொண்
டுன்னடிகளே சரணமென் றோல மிடு மெனக்
குறுகுறை தவிர்த்தாளுவாய் ...........

குறிப்பு :

தலைப்பு இல்லை, கொடுக்கப்பட்டது. ''சகலபண்டித் ராசனே'' என முடியும் 2 பாட்ல்களும், 3-வது பாடலில் ஒரு பகுதியும் உள்ளன.



வரிசை எண் : 4164 சுவடி எண் : 1895-n

# உற்சவ விதி சுருக்கம்

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 100 அளவு : 20×4 செ.மீ.

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள்: தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : கிரந்தம்.

தொடக்கம் :

சாயரட்ச பூஜானந்தரம் விக்னேஸ்வரஸ்ய
தைலாதி கஜாந்த மனுஷ்ய விக்னேஸ்வரம்

சம்பூஜ்ய மகேசோத்சவம் கரிஷ்யே.
இதி சங்கல்ப்ய பிராம்மணர்களுக்கு
ராஜானுக்ஞை செய்து

முடிவு:

ரம் ராஜசே நம: தம் தபசே நம:
பத்மாசன கந்தாய நம: இத்யாதி
கர்ணனாய நம: வாமாதி நவசக்திம்
அப்யஸ்ய விதிப்படி …………

குறிப்பு :

இதில், விழாக்கள் செய்யு முன்னும், விழாக்கள் நடக்கும் போதும் செய்ய வேண்டிய கிரியைகளின் முறைகள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4165

சுவடி எண் : 1896

# அருணகிரிப் புராணம்

ஏடுகள் : 344 கி. எண்ணிக்கை : 10000 அளவு : 21×3 செ.மீ. பக்கத்திற்கு : 10 வரிகள் ஆசிரியர் : சைவ எல்லப்ப நாவலர் பொருள் : தல புராணம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்:

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

மிக்க வேத வியாதன் விளப்பிய
விக்க தைக்கிய வின்றருள் செய்திட
முக்கண் வெற்பனை மும்மத வாரியைக்
கைக்க ளிற்றினைக் கைதொழு தேத்துவாம்.

எ.து. மிகுதியான தபசுடைய வேத வியாசரிசி

முடிவு :

பூலோகத்திலே முழுது மொருகுடைக் கீழே அரசாட்சியாக ஆண்டு சந்தான பாக்கியமும் பெற்று வாழ்ந்திருந்து பின்பு திக்காகி லட்சிக்கப்பட்ட அருணாசல யீஸ்பரனுட வன்பினாலே சிவபதவி யடைவார் களென்றவாறு. புளகாதிபன் சருக்க முற்றும். ஆகத் திருவிருத்தம் 586. பாயிர விருத்தம் 21. அருணைமாநகர்ச் சருக்கம் 55. திருமலைச் சருக்கம் 87. திருவவதாரச் சருக்கம் 91 ×…×…×… ஆகச் சருக்கம் பாயிரம் உள்ளபட 13 க்கு திருவிருத்தம் 586.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 981/D-1190 அருணாசல புராணம் (உரையுடன்) போன்றது. செய்திகளை அங்கு காண்க.



வரிசை எண் : 4165 சுவடி எண் : 1897-a

## மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழ்

ஏடுகள் : 60 கி. எண்ணிக்கை : 1800 அளவு : 10×3½ செ.மீ
பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : குமரகுருபரர் பொருள் : பிள்ளைத்தமிழ்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவே துணை

செம்பொற் கிரியனைய சித்தி மத யானை
தும்பைச் சடிலச் சுடர்க் கொழுந்து
கொம்பிற் றனிச் சதங்கைக் கேற்ற தமிழ்
மதுரை வாழ்வின் றொளிச் சதங்கை பூந்தாடுணை

நூல்

கார்கொண்ட கடவுண்மதக் கடைவெள்ளமுங்
கட்கடைக் கடைக்கனலு மெல்லை

முடிவு :

பொருகயலும் வடிவழகும் பூத்த சுந்தரவல்லி
பொன்னூச லாடியருளே !
புழுகுநெய்ச் சொக்கர் திருவழகினுக் கொத்தகொடி
பொன்னூச லாடியருளே !! —10

பொன்னூசல் முற்றும்.
மீனாட்சியம்மன் பேரில் குமரகுருபர தம்பிரானருளிச் செய்த
பிள்ளைத் திருநாமம் முகிந்தது முற்றும்.
சிவகடாட்சம் முன்னிற்க வேண்டியது.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 943/D-1134 போன்றது. பிற செய்திகளை அங்கு காண்க.



வரிசை எண் : 4167 சுவடி எண் : 1897-b

# மதுரை பதிற்றுப்பத் தந்தாதி

ஏடுகள் : 22 கி. எண்ணிக்கை : 600 அளவு : 10 × 3½ செ.மீ. பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : மானூர் அனந்தகவிராயர் பொருள் : பதிற்றுப்பத்தந்தாதி நிலைமை : பழுது முழுமை முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக

பைந்தொடிபாற் சொக்கர் பதிற்றுப்பத் தந்தாதி
செந்தமிழைப் பாடச் செயலளிக்குஞ் – சந்ததமுஞ்
சிந்தா வளமதுரைச் சித்தி விநாயகனார்
தந்தா வளமதுரை தந்து.

நூல்

மேகம்வரக் கண்டுளங் களித்து
விரிக்குந் தோகை மயிலாட

முடிவு :

நீதிஞானம் புரக்கு மதனால்
மறவாது திங்கள்மும் மாரிபெய்ய
மல்குணா மேகம் வருமே! —100.

மதுரைப் பயிற்றுப்பத்தந்தாதி முகிந்தது முற்றும்

சொக்கலிங்கம் மீனாட்சி பாதாரவிந்தமே கெதி.
சண்முகநாதன் துணை. சிவமயம்.

குறிப்பு :

பத்துப் பத்தாகக்கொண்ட பத்து பகுதிகளைக்கொண்டது. 100 பாடல்களை உடையது. மதுரைச் சொக்கலிங்கர் மீது பாடப்பட்டதாகுமிது.

இதன்பின் ஒரு ஏடு, 'கருவையந்தாதி' காப்புச் செய்யுள் மட்டுமே எழுதியது உள்ளது.



வரிசை எண் : 4168 சுவடி எண் : 1898-a

# அரிச்சந்திர புராணம்

ஏடுகள் : 114 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 16×5 செ.மீ.

பக்கத்திற்கு : 17 வரிகள் ஆசிரியர் : ஆசுகவிராயர் பொருள் : புராணம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

சீர்கொண்ட செழுங்கமலத் திசைமுகனு நெடுமாலுஞ்
சிவனு மென்ன
பேர்கொண்ட மூவுருவு மீருருவு மோருருவாய்
பிறங்கு தொல்லை
நீர்கொண்ட வண்டத்துந் தாபரத்துஞ் சங்கமத்து
நிறைந்து நின்றோன்
றார்கொண்ட தாளினைக் கட்டழகைக் கொண்டவன்
பினொடுந் தலைமேற் கொள்வாம்.

முடிவு :

இத்தன்மை யிழைத்தன மன்னனுட னிதனும்
வெலற்கரிதா யின்னி
பித்தன் செய்வித்த கடுவனற்றவோர்
பெருமானிறையோ னொடு பேசினனே ! —௪2

உத்திர காண்டம் முற்றும்.

காலம் :

1023-ஆம் வருடம் கார்த்திகை மாதம் 12-ந் தேதி வெள்ளிக்கிழமை அமர பட்சம் பஞ்சமி புனர்பூச நட்சேத்திரம் கூடின சுபதினத்தில் இந்த அரிச்சந்திர புராணம் எழுதி முடித்தேன் குலசேகரம் பட்டணம் ராமனாதபிள்ளை குமாரன் மாறியாடும் பெருமாள் கையெழுத்து. நீடுழிகாலம் வாழ்க

குமரன் துணை. செப்பறை மடத்துக்கு

குறிப்பு :

முகப்பு ஏட்டில் காண்டங்களின் அட்டவணை, ஒவ்வொரு காண்டத்துக்கும் உரிய பாடல்கள், கூடுதல் எண்ணிக்கை முதலியன தரப்பட்டுள்ளன. எவ்வளவு துன்பம் வந்த காலத்தும் உண்மையே உரைத்த உத்தமன் வரலாறு கூறப்பட்டுளது.

இது, கூத்தற்பனை ஏடுகளா லானது.

வரிசை எண் : 4169 சுவடி எண் : 1898-b

# நளன் கதை (செய்யுள்)

ஏடுகள் : 104 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 16 × 5 செ மீ.

பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்: நன்றாக குருவே துணை

தழைவிரி க்டுக்கை மாலை
தனிமுதற் சடையிற் சூடுங்
குழவவெண் டிங்களிற்ற
கோட்டது குறை யென்றெண்ணி

நூல் நகரப்படலம்

கருவி மாமழை கலைமகளுருவென விளங்கி
யிருவிசும் பிடைப் படர்ந்து சென்றினமணி

முடிவு :

ஆழிசூழ் புவி முழுவது மாழியொன்ருட்டி
வாழிநல்லறம் புரிதரு மகம்பல வாற்றிச்
சூழிமால் வரைப் பிடருறு சுமையொழிந்தாற்
பாழியம் புயத்துல கெலாம் பரித்தினி திருந்தான் —15

அரசியற்கைப் படல முற்றும்

குருபாதமே கெதி

காலம் :

1023-ஆம் வருஷம் தைமாதம் 7-ந் தேதி சனிக்கிழமை அனுஷ நட்சேத்திரமுங் கூடின சுபயோக சுபதினத்தில் எழுதி முகிந்தது. குல்சேகரப் பட்டணம் ராமநாத் பிள்ளையவர்கள் குமாரர் மாறியாடும் பெருமாள் கையெழுத்து. நயினார் துணை.

செப்பறை மடத்துக்கு

குறிப்பு :

இது, கூந்தற்பனை ஏடுகளைக் கொண்டது.
நிடத நாட்டை ஆண்ட நளச்சக்கரவர்த்தி யினுடைய வரலாற்றினைக் கூறுவது.
இது, எமது சுவடி எண் 1380/D-1687-ன் வேறாயது

வரிசை எண் : 4170 சுவடி எண் : 1898-c

# ஞான வெட்டியான்

ஏடுகள் : 71 கி. எண்ணிக்கை : 3500 அளவு : 16×5 செ.மீ.

பக்கத்திற்கு: 16 வரிகள் ஆசிரியர்: திருவள்ளுவநாயனார் பொருள்: வேதாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவே துணை

எத்திசையும் புகழ்விளங்கு மேவந் தனக்குரைத்து
புத்திதனை யறியாமற் போட்டிருந்த புதுமையைப் போல்
சித்திதனை விட்டுலகிற் றடுமாறித் தவசிழந்தார்
வெற்றிபெற்ற கொங்கணர்க்கு விரித்துரைத்தேன் வள்ளுவனே !

நூல் — விருத்தம்

இருடனை யறுத்த சித்தரிணைத் திருப்பாதம் போற்றித்
துருவெளியக் கடிமடஞானச் சொக்கனார் அருளினாலே

முடிவு :

சிந்தையினா லுடலெடுத்த வாறுஞ் சொன்னேன்
செகதலமும் தழைத்த தவகை சொன்னே னாண்டே ! —557

முற்றிற்று முற்றும்.

காலம் :

1024-ஆம் வருஷம் அற்பிசை மாதம் 24-ந் தேதி திங்கட்கிழமையும் மிருக சீரிஷ நட்சேத்திரமும் கூடின சுபயோக சுபதினத்தில் எழுதி முகிந்தது. வள்ளுவ நாயனார் திருவாய் மலர்ந்து பாடிய ஞான வெட்டியான் அச்சுப் புத்தகத்தைப் பார்த்து எழுதியது. குலசேகர பட்டணம் ராமநாத பிள்ளையவர்கள் குமாரன் மாறியாடும் பெருமாள் கை எழுத்து. நீடுழிகாலம் வாழ்க.

குமரன் துணை. செப்பறை மடத்துக்கு

குறிப்பு :

இது. அச்சு நூலைப் பார்த்து மீண்டும் ஒலையில் எழுதப்பட்டுளது. ஞான வெட்டியான் கதை என்றும் ஒன்று உண்டு. இது, கூந்தர்பனை ஏட்டுச் சுவடி.



வரிசை எண் : 4171 சுவடி எண் : 1899-a

# சங்கற்ப நிராகரணம் உரையுடன்

ஏடுகள் : 69 கி. எண்ணிக்கை: 7000 அளவு : 26 × 4 செ.மீ.

பக்கத்திற்கு: 13 வரிகள் ஆசிரியர்: உமாபதிசிவம பொருள்: சைவ சித்தாந்தம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

திருச்சிற்றம் பலம்

அற்பு முதிர்ந் தறிவுக்காய பொருளே
யருள் சங்கற்ப நிராகரண
கற்புரைக்கு வெற்பினிடந் தரித்தாள
மைந்த னெழில் புதல்வ னெல்லாங்கடந்
தரித்தான் குஞ்சரத் தோன் காப்பு.

முடிவு :

சங்கிராந்த வாதியொன்று. அயிக்க வாதி யொன்று
பரிணாமவாதி யொன்று. சைவர் ஒன்று ஆகச் சமையமாறு
சங்கற்ப நிராகரணம் உரை எழுதி முடிந்தது. முற்றும்.
திருச்சிற்றம்பலம். குருபாதம்.

காலம் :

954-ஆம் வருஷம் பங்குனி மாதம் 21-ந் தேதி புதன்கிழமையும் உத்திர நட்சேத்திரமும் கூடின சுபதினத்தில் சிதம்பரத்து அய்யா அவர்கட்கு அரசப்பன் எழுதின சங்கற்ப நிராகரண உரை முற்றும். செப்பறை மடத்துக்கு

குறிப்பு :

இது, சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. உலகாயதன் முதலான பிற சமயிகளுடைய கொள்கைகளை எடுத்துக்காட்டி, அவற்றை மறுத்து சைவ சித்தாந்தத்தை நிலை நாட்டுவது. உரையுடன் அச்சாகியுளது.



வரிசை எண் : 4172 சுவடி எண் : 1899-b

# மாணிக்கவாசகர் ஞானம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 200 அளவு : 26×4 செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்&கிரந்தம்.

தொடக்கம் :

சுழியாகிய முனைகண்டபின்னுத் தாருற வத்தாயறுதும்
பலபொய் பேசிய தொழிலும் பிறர்க்கிட்டாய்
வழியாகிய துறை கண்டபினனுட்டானமு மத்தாய்
வணங்கும் பலநூல் சாத்திரம் நினவும் பிறர்க்கிட்டாய்

முடிவு :

யொருவாசக னறிவாகரன் புவிமீதினில் மகிழ்ந்தே
யுரைசெய்தனை தமிழ் தாழிசை நெறியின்படி நின்றோர்
கரு வாசலி லணுகாமலே பிறவாநெறி பெறுவார்
கடவுள்செய லறியாதவர் கருவாசலில் புகுவார். —11

மாணிக்கவாசகர் ஞானம் முற்றும்.

காலம் :

969-ஆம் வருடம் ஆனி மாதம் 13-ந் தேதி சுபமஸ்து சங்கரலிங்கம் எழுத்து. அகிலாண்டநாயகி முன்னிற்க திருவக்கினீசுரர் துணை. ஸ்ரீராம ஜெயம்.

சிவகாமி அம்மன் துணை சுபமஸ்து

குறிப்பு :

மாணிக்கவாசகரின் நூலைப் படித்தலின் அவசியமும், அருமையும், பலனும் கூறப்பட்டுளது.



வரிசை எண் : 4173 சுவடி எண் : 1899-c

# திருவருளிரங்கல்

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 100 அளவு : 26×4 செ மீ.

பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர் திருச்சிற்றம்பல குரவன் பொருள்: தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

யிலவக் கிளிபோல் மனம்
யேங்கித் திரியாமல்
மல மற்றிட யுனையுற்றிட
யெனை யற்றிடவாக
தலவர்க்கருள் பணியே செய்யத்
தாழ்ந்த மனமாகத்
திலமுற்றிடு நெய்போலுனைத்
தேடும்வகை காணேன். —1

முடிவு :

கின்பா உயிர் சிவமும் யிரண்டாகா வகையாகும்
முன்பார்த்து வைதந்தனை பொழியுங் குருவாமோ ! —10

திருச்சிற்றம்பலம்

திருவாவடுதுறை வாழ் திருச்சிற்றம்பல குமரன்
கருத்தா லருளிரங்கல் பகர்நூலைக் கனிவாக
யுருகா மனத்தொடுந் துதிப்போர்களினிப்பிறவார்.........
× × × × ×

சீரார் திருச்சிறறம்பல குரவன் திருவடியை
ஆராதனை செய்வோர் பவம் அகிலுங் கெதியாமே —2

திருவருளிரங்கல் முற்றும் சுபமஸ்து
சங்கரலிங்கம் எழுத்து செப்பறை மடத்துக்கு

குறிப்பு :

திருவருள் இறையருள் பெறவேண்டி திருவாவடுதுறை ஆதின திருச்சிற்றம்பல குரவர் எழுதியது.



வசை எண் : 4174 சுவடி எண் : 1899-d

## அனுஷ்டான தர்ப்பண மந்திரம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 25 அளவு : 26×4 செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்+கிரந்தம்.

தொடக்கம் :

ஓம் ஆம் சறுவேப்பியோ மந்திரேப்பியோ சுவாகா
ஓம் ஆம் சறுவேப்பியோ தேவேப்பியோ சுவாகா
என்று கை நுனிகளினாலே தற்பித்து
ஓம் ஆம் சறுவேப்பியோ ரிஷப்பியோ நம

முடிவு :

என்று அங்குட்ட மூலத்தினால்த் தற்பித்து
பின்பு ஓம் ஆம் ஆதித்தேப்பியோ சுவாகா
ஓம் ஆம் வசுப்பியோ சுவாகா
ஓம் ஆம் ருத்திபேப்பியோ சுவாகா
ஓம் ஆம் ——— ———

குறிப்பு :

இது, காலையில் அனுட்டானம் செய்யும்போது எண்ணப்படுவதான மந்திரம் போலும்.



வரிசை எண் : 4175 சுவடி எண் : 1900

# திருச்சிற்றம்பலக் கோவையார்

ஏடுகள்: 38 கி. எண்ணிக்கை: 3500 அளவு : 26×4 செ.மீ.

பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : மாணிக்கவாசகர் பொருள் : திருமுறை

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம் நன்றாக

எண்ணிறைந்த தில்லை யெழுகோ புரத்திகழக்
கண்ணிறைந்து நின்றருங் கற்பகமே ... நண்ணியசீர்
தேனூறுஞ் செஞ்சொற் றிருக்கோவை யென்கின்ற
நானூறு மென்மனத்தே நல்கு

நூல் மூலபாடம்— இயற்கை காட்சி

திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள் தொண்டோங்கு
மருவளர் மாலையொர் வல்லியினொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வெற்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே !

முடிவு :

காரணி கற்பகங் கற்றவர் நற்றுனை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் தக்கோர்தஞ் சங்க நிதிவ்திசேர்
ஊரணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே !

இரும்பரிசி லேற்றவர்க் கருளி
விரும்பினர் மகிழ மேதவு லுரைத்தது. --400

திருச்சிற்றம்பலக் கோவையார் மூலபாட மெழுதி நிறைந்தது
வயிரவலிங்கம் சற்குருவே நம.

குறிப்பு :

இது, தில்லையில் அம்பலத்தாடுவார் திருமடத்தில் எழுந்தருளியிருக்கும் போது, ஒரு இரவில், தில்லைக்கூத்தன் அந்தணர் வடிவில் வந்து, மாணிக்கவாசகரிடம் திருவாசகம் கேட்டு எழுதினால். அதிலிருந்த திருபெம்பாவையில் மகிழ்ந்த இறைவன் 'பாவை பாடிய வாயால் கோவை பாடுக' என்றலும் இத்திருக்கோவையாரைச் சொல்ல அம்பலவன் எழுதி, ''மாணிக்கவாசகன் சொல்ல அழகிய திருச்சிற்றம்பல முடையான் கையெழுத்து'' என்று கைச்சாத்திட்டு, தில்லைக்கூத்த மூலவர் திருவடிகளில் வைத்து மறைந்தார். சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள், திருவாசகமும் இத்திருக்கோவையாகும் 8-ஆம் திருமுறையாக வைத்து வணங்கப்பெறுகிறது. திருச்சிற்றம்பலக் ''கோவையார்'' என்ற பெயரும் உண்டு, இதற்கு மட்டும் 'திரு' என்ற அடைமொழிச் சிறப்பும் 'ஆர்', விகுதிச்சிறப்பும் உண்டு. அச்சாகியுளது.



வரிசை எண் : 4176 சுவடி எண் : 1901-a

## சிவப்பிரகாசக் கட்டளை

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 500 அளவு : 34 × 3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : சிவஞான வள்ளலார் பொருள் : சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது

எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சுப மஸ்து

பூதங்களாவன: பிரிதிவு அப்பு தேயு வாயு
ஆகாசம் ஆக — 5.

ஞானேந்திரியங்களாவன: சுரோத்ரம், தொக்கு சிட்சு
சிங்றுவை ஆக்கிராணம் ஆக — 5

முடிவு :

சிவபோகமாவது: பராசத்தியினிடமாக நின்று அனுபோகத்துடனே கலந்து பேரின்ப மாகிய சிவனெனத்தானென விரண்டற்றுச் சிவானு போகம் பிறக்கச் சிவனுடனே அக்கினிக்கு வெம்மை போலவும், நீருக்குத் தட்பம் போலவும் சிவத்திலே யழுந்துமது சிவபோகம்.

சிவப்பிரகாசக் கட்டளை முற்றும் குருபாதமே கெதி.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 171-a/D-774 போன்றது. அச்சாகியுள்ளது.



வரிசை எண் : 4177 சுவடி எண் : 1901-b

# சிவஞான யோகிகள் வரலாறு

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 34×3½ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : சுப்பிரமணிய தேசிக மூர்த்திகள் பொருள் : வரலாறு நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர் மெய்ஞ்ஞான பானுவாகிக்
குயிலாலும் பொழிற் றிருவாவடுதுறை வாழ் குருநமச்சிவாய தேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி தழைக மாதோ!

திருக்கைலாச மலையிலே அருள்வடிவாகிய
கல்லால மரநிழலிலே தக்ஷிணாமூர்த்தியாய்
எழுந்தருளி யிருந்த ஸ்ரீகண்ட பரமசிவன்

முடிவு :

சிவஞான சித்தியாருக்குச் சிவஞான யோகிகளால்
அரிதினுணர்தற்பால தாகச் செய்தருளப்பட்ட
மொழிப்புரைக் கிணங்க எளிதினுணர்தற்பாலதாகப்

பதவுரை செய்தருளிய சுப்பிரமணிய தேசிக மூர்த்தி
கட்டளையிட்டருளிய படி இவ்வரலாறு எழுதப்பெற்றது.

குறிப்பு :

இது, திருவாவடுதுறை ஆதின பரம்பரையில் ஒளிரும் சிவஞான முனிவர் வரலாறு ஆகும்.



வரிசை எண் : 4178 சுவடி எண் : 1901-c

## ஞான தீட்சை

ஏடுகள் : 16 கி. எண்ணிக்கை : 900 அளவு : 34 × 3½ செ.மீ

பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவம் பொருள் : சைவ சாத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி ஓம்

ஐயிரு பகுதியான யாகமப் பொருளைக் கூறு
மையறு காரணமி யாது வாய்த்த நற்கால மியாது
சைவரி லியாவர் கேட்குந் தகுதி யாரென்று சாற்றந்
தெய்வமா முனிவர் போற்றுஞ் செழுந்தவக் குரிசில் செப்பும். —1.

முடிவு :

பரிகலந் திருத்தியான பாற்பத முதலளித் தன்னாரை
யுரிமையா லமுது செய் வித்துரும் பெருஞ் சேட மாந்தி
யிருண்மல வலிகடீர விம்மையே சீவன்முத்தி
மருவின ஞான தீக்கை வாழ்விது வெகுவளித்தான். — 41

ஞான தீக்கை முற்றும்
ஆகத்திருவிருத்தம் – 100

காலம் :

திங்கள் மிக வருஷம் செவ்வாய் கதிரப்பம்
பொங்கு புதனரை பொன் முக்கால் — நங்காய்கேள்
வெள்ளி நல் வருஷம் வெஞ்சனிக்கிச் சூனியமாம்
உள்ளபடி சித்திரையென் றோது.

குறிப்பு :

இதில், சீடன் இலக்கணம், சற்குருலட்சணம், குருபூசை விதி, ஞானதீட்சை, ஆகிய தலைப்புகள் உள்ளன.



வரிசை எண் : 4179 சுவடி எண் : 1902-a

# மெய்கண்ட சாத்திரம்

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 900 அளவு : 28 × 3½ செ மீ.

பக்கத்திற்கு : 11 வரிகள் ஆசிரியர் : மெய்கண்டார் ? பொருள் : சைவ சாத்திரம்

நிலைமை : மிக மிகப் பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

இப்படி பதி லட்சண மறிக
இனி யாற்மா வாவது அனேக ............
நிற்கிற தல்லவாய் சித்தாய்
இச்சிப்பித்தா விச்சிக்கு மிச்சை ............

முடிவு :

சிவாகமங்கள்லே விதித்தலைச் செய்து
விலக்குத லொழிந்து அஞ்ஞான முடையவர்கள்
சார்வை விட்டுச் சிவஞான முடையவர்கள்
சார்வா யிருக்கக் கடவன்

இது மெய்கண்ட சாத்திரத்தின் மாற்க மென வறிக

குறிப்பு :

முதலேடு இல்லை. பதி, பசி, பாசம் ஆகியவற்றின் நிலையும் விளக்கமும் கூறுகிறது.

வரிசை எண்: 4180 சுவடி எண் : 1902-b

# தசகாரியக் கட்டளை

ஏடுகள் : 14 கி. எண்ணிக்கை : 1200 அளவு : $28 \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ கட்டளை நிலைமை : பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

பூதங்களாவன : பிருதுவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் —5
இதில் பிருதுவி யாவது காரண தத்துவமென்றுங் காரிய
தத்துவமென்று மிரண்டு வகைப்படும்
இதிற் காரியம் — 1. இது கெந்தத்தையுடைத்தா யழிந்துபோம்.

முடிவு :

கேவலப்பட்ட வாற்மாப் போலவும்
பரசிவத்துடனே யனுபவம் பிறக்க
வழுந்துமதே சிவபோகம்.
இப்படி தெசகாரியந் தெரிசிப்பான்.

தெசகாரியக் கட்டளை முற்றும்.

குறிப்பு :

இது, சைவ சித்தாந்த சாத்திரங்களுள் பண்டார சாத்திரம் பதினான்கனுள் ஒன்று. தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசித்தி, ஆன்மரூபம், ஆன்மதரிசனம், ஆன்மசுத்தி, சிவரூபம், சிவதரிசனம், சிவபோகம், சிவயோகம் ஆகிய பத்து காரியங் களின் தன்மைகளைக் கட்டளையிட்டுக் கூறுவது.



வரிசை எண் : 4181 சுவடி எண் : 1902-c

## சரஸ்வதி பூஜாவிதி

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 300 அளவு : 28×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : கிரந்தம்.

தொடக்கம் :

சிவமயம்.

சுராசுரர் சேவித பாத பங்கஜா |
கரேவிராஜத் கமனீய புஸ்தகா ||
விரிஞ்ச பத்னீ கமலாசன ஸ்திதா |
சரஸ்வதீ ந்ருத்யது வாசினே சதா ||

முடிவு :

சமஸ் சங்கேந்து வர்ணாயை
நமஸ்தே பிரம்மணப்ரியே |
நமோ வேதாந்த வேத்யாயை
சாரதாயை நமோ நம : ||
நமஸ்காரம். இதி சரஸ்வதீ பூஜா விதி : சமாப்த :
சுபமஸ்து

குறிப்பு :

இது வடமொழி சுலோகங்களால் சரசுவதி பூசை செய்யும்முறை, தோத்திரம் கூறப்பட்டுள்ளன.

முதலேட்டில் மந்திரங்கள் எழுதப்பட்டுள்ளன.



வரிசை எண் : 4182 சுவடி எண்: 1902-d

## கொடுமளூர் சுப்பிரமணியர் பேரில் வண்ணம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 200 அளவு : 28×3½ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் ; வண்ணம்
நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சத்தி பயிரவி காளி துற்கை பகவதி நீலி
யத்தி முகனுடதாய் குறத்தி மனமகிழ் மாமி
தருணி முதிராதிருந்த குமரி யுலகேழ் பயந்த
கிழவி அதிபாலை அன்ப ரிதையமதிலே நடஞ்செய்

முடிவு :

குண்டலத்தா யெனமுனெழுந்தருளி வந்தே
கருணை செய வேணுமையா
கொடுமளூர்வரு குமரக் கடவுளானே ! — 1

திருச்சிற்றம்பலம்

கடம்பங்குடி பெரியனாயகியம்மன் பேரில் தாண்டவராயன் சொன்னது.
அரியயன் மாலுந் தேடற்கரிய வளர் ........
குரியவள் கடம்பனேய ரொருபிறத்திருக் கும்மமை
தருவளர் பாண்டிநாடு தனிலரசிருக்கு மெங்கள்
பெரியனாயகி ...... ...ப் பெத்தனாகியா மன்றே !

சொக்கலிங்கந் துணை

குறிப்பு :

இது, முருகன் மீது பாடப்பட்ட வண்ணமாம்.



வரிசை எண் : 4183 சுவடி எண் : 1903-a

# கோயிற்புராணம்

ஏடுகள் : 25 கி. எண்ணிக்கை : 2500 அளவு : 27 × 5 செ.மீ. பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள் : தலபுராணம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

வியாக்கிர பாதச் சருக்கம்

பொற்பதப் பொதுவார் புலியூர் புகழ்
சொற்பதப் பொருளா(ய்) குவர்தூயவ

ஏற்ப கற்றொழ வாழணி கோபுரக்
கற்ப கத்தினி யானை கழல்களே !

முடிவு :

மழை வழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள மெல்லாம் பிறங்குக.
தழைக வஞ்செழுத் தோசை தவிரயெலாம்
பழைய வைதிக சைவம் பரிக்கவே! —53

திருவிழாச் சருக்கம் முற்றும்.
கோயிற் புராணம் முற்றும்.
ஆக சருக்கம் 5-க்குத் திருவிருத்தம் 475.

திருச்சிற்றம்பலம்

குறிப்பு :

இது, சிதம்பரத்தின் சிறப்பினைக் கூறுவது உரையுடன் அச்சிடப்பட்டுளது. இது, எமது சுவடி எண் 313/D-502 போன்றது.



வரிசை எண் : 4184 சுவடி எண் : 1903-b

# திருவாலவாய்க் கட்டளை

ஏடுகள் : 6½ கி. எண்ணிக்கை : 800 அளவு : 27×5 செ.மீ. பக்கத்திற்கு : 18 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவக் கட்டளைகள் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

திருச்சிற்றம்பலம்

கைக்குலவு ஞானக் களிற்றொருமுக் கட்கடத்து
மெய்க்குலவு சித்தி விநாயகர் — பொய்க்குலவா
மட்டளவி லாதசிவம் வாய்த்ததிரு வாலவாய்க்
கட்டளைக்குன் பாதமே காப்பு.

நூல்

பதிபசு பாசமூன்று மனாதி. நித்திய மிவைகளிற்
பதியாவது பரிபூரணமா யொன்றாய் அறிவுக்கறிவாய்

முடிவு :

இப்படி நேயத்தி லழுந்தல் முதலாக
வெந்த நிலை நின்றாலு மாசாரியரையுந்
திருக்கோயிலையு ந்திருவேடத்தையு
மிகவும் வழிபட வென்றவாறு

திருவாலவாய்க் கட்டளை முற்றும்
குருபாத முன்னிற்க

குறிப்பு :

இது, பதி இலக்கணம், பசு இலக்கணம், பாசஇலக்கணம் ஆகிய முப்பொருள் பற்றி உரைநடையில் உள்ளது.



வரிசை எண் : 4185 சுவடி எண் : 1903-c

# சிவப்பிரகாசக் கட்டளை

ஏடுகள் : 4½ கி. எண்ணிக்கை : 500 அளவு : 27 × 5 செ.மீ.
பக்கத்திற்கு : 18 வரிகள் ஆசிரியர் சிவஞானவள்ளலார் பொருள் : கட்டளை
நிலைமை : நல்ல நிலை முழுமை முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூதங்களாவன பிரிதிவி அப்பு தேயு
வாயு ஆகாசம் ஆக — 5
ஞானவிந்திரியங்களாவன: சோத்திரம்
தொக்கு, சட்சு, சிங்குவை
ஆக்கிராணம் ஆக — 5

முடிவு :

சிவனென்னத் தானென்ன இரண்டற்று
சிவானுபோகம் பிறக்கச் சீவனுடனே
அக்கினிக்கு வெம்மைபோலவு நீருக்குத்
தட்பம் போலவுஞ்சிவத்திலே யழுந்துமது
சிவபோகம்.

சிவமயம். நமசிவாய மூர்த்தினார்த தேசிகனே துணை.

குறிப்பு :

இது, எண் 1901-a போன்றது. ஏட்டின் மத்தியில் ஆரம்பம். மேலும் எண் 171-a/D-774 போன்றது. அச்சாகியுளது.



வரிசை எண் : 4186 சுவடி எண் : 1903-d

## உண்மை விளக்கம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 300 அளவு : 27×5 செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : மனவாசகங்கடந்தார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிவமயம்

வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள் வழுவா
துண்மை விளக்க முரை செய்யத் — திண்மதஞ்சே
ரந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியில் வைப்பாம்.

முடிவு :

மன்னதிகை வாழு மனவா சகங்கடந்தான்
மின்னனைய வாழ்விலுறு மெய்கண்டான் - பன்மறைகள்
வண்மைதரு மாகமநூல் வைத்த பொருள் வழுவாது
துண்மை விளக் கஞ்செய்தா னுற்று. — 55

உண்மை விளக்கம் முற்றும்

குருபாதம்

குறிப்பு :

இது, சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. ஆசிரியர் மெய்கண்ட தேவரது மாணாக்கருள் ஒருவர். இந்நூல் அச்சிடப்பட்டுளது. இது, எமது சுவடி எண் 54-m/D-700 போன்றது.

வரிசை எண் : 4187 வடி எண் : 1903-e

# திருவருட் பயன்

ஏடுகள் : 2½ கி. எண்ணிக்கை : 300 அளவு : 27×5 செ.மீ.
பக்கத்திற்கு / 16 வரிகள் ஆசிரியர் : உமாபதிசிவம் பொருள் : சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

பதிமுதனிலை

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண். — 1
அகர வுயிர்போ லறிவாகி யெங்கு
நிகரி லிறைநிற்கு நிறைந்து. — 2

முடிவு :

மும்மை தருவினைகள் மூளாவா மூதறிவார்க்
கம்மையு மிம்மையுமே யாம். — 9
கள்ளத் தலைவர் துயர்கருதித் தன்கருணை
வெள்ளத் தலைவர் மிக. — 10

அணைந்தோர் தன்மை முற்றும்

திருவருட் பயன் அதிகாரம் 10-க்கு குறள் 101

குறிப்பு :

இது, சைவசித்தாந்த 14 சாத்திரங்களுள் ஒன்று இது, எமது சுவடி எண் 54-f/D-693 போன்றது.



வரிசை எண் : 4188 சுவடி எண் : 1903-f

# போற்றிப் பஃறொடை

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 300 அளவு : 27×5 செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : உமாபதி சிவாச்சாரியார் பொருள் : சைவ சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூ மன்னு நான்முக புத்தேளிர் ஆங்கவர் கோன்
மாமன்னு சோதி மணிமார்பன் நாமன்னும்
வேதவே தாந்தம் விளக்கஞ் செய் விந்துவுட
னாதநா தாந்த நடுவேதம்.

முடிவு :

மானந்த மாக்கடலி லாரா வமுதளித்துத்
தன்வந்து செய்யுந் தகுதியினா—லூனுயிர்தான்
முன்கொண்ட காலத்து நீங்காத முன்னோனை
யென்கொண்டு யோற்றிசைப்பேனி யான்
போற்றிப் பஃறொடை முற்றும்.
குருபாதம்.

குறிப்பு :

இதுவும் சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினாள்கனுள் ஒன்று. இது, எமது சுவடி எண் 553-h/D-721 போன்றது.



வரிசை எண் : 4189 சுவடி எண் : 1903-g

# நெஞ்சுவிடு தூது

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 500 அளவு : 27×5 செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : உமாபதிசிவாச்சாரியார் பொருள் : சித்தாந்த சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பூமேவு புந்திப் புயல்வண்ணன் பொற்ப மைந்த
நாமேது மாதுபுணர் நான்முகத்தோன் — றாமேவிப்

பன்றியு மன்னமுமாய்ப் பாரிடந்தும் வான் பறந்தும்
மென்று மறியா வியப்பினான்.

முடிவு :

வெம்பும் பிறவியலை வீழாமல் வீடளித்த
சம்பந்த மாமுனிவன் றார்வாங்கி — யம்புந்தும்
வஞ்சமே வும்விழியார் வல்வினையெல் லாமகல
நெஞ்சமே வாராய் நினைந்து.

நெஞ்சுவிடு தூது முற்றும்.

குறிப்பு :

இதுவும் 14 சைவசித்தாந்த சாத்திரங்களு ளொன்று. அச்சிட்டப்பட்டுளது. இது, சுமது சுவடி எண் 553-q/D-730 போன்றது.



வரிசை எண் : 4190 சுவடி எண் : 1903-h

## சிவப் பிரகாசம்

ஏடுகள் : 1 கி. எண்ணிக்கை : 150 அளவு : 27 × 5 செ.மீ.
பக்கத்திற்கு: 16 வரிகள் ஆசிரியர் : உமாபதிசிவாச்சாரியார் பொருள் : சித்தாந்த சாத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு
களியார வருமானை கழனாளு மறவாம
லளியாளு மலர்தூவு மடியார்க ளுளமான
வெளிதாகும் வலிதாய வினைகூட நினையாவே.

முடிவு :

கிரியை யெனமருவு மவையாவு ஞானங் கிடைத்தற்கு
நிமித்தமெனக் கிளக்கு முன்மைச்
சரியை கிரியா யோகத் தன்மை ——— — 10

குறிப்பு :

இதுவும், சைவ சித்தாந்த பதினான்கு சாத்திரங்களுள் ஒன்று. இது எமது, சுவடி எண் 54-e/ D-692 போன்றது.



வரிசை எண் : 4191 சுவடி எண் : 1903-i

## புள்ளிருக்குவேளூர் பிள்ளைத்தமிழ்

ஏடுகள் : 8 கி. எண்ணிக்கை : 800 அளவு : 27×5 செ.மீ. பக்கத்திற்கு : 14 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : பிள்ளைத் தமிழ். நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

காப்பு

பொன்பூத்த குடுமிப் பொலங் குவட்டிமவான்
பொருப் ——— பொழிநிலவு தவழு முழுவெள்ளி
வேதண்டத்தோர் போர்க்களிற்றைப்
புணர்ந்து

முடிவு :

தையனாயகியையும் வைத்துச் சீராட்டி
சீராட்டி விளையாடுஞ் சேனா பதிக்கடவுள்
சிறுதே ருருட்டி யருளே ! — 10
திருவளர் வளர்கந்த புரிவள ரிறங்குமர
சிறுதே ருருட்டி யருளே !
சிறுதேர் முற்றும். ஆக கவி 101.

காலம் :

984.ஆம் வருடம் தைமாதம் 2-ந் தேதி குருவாரமும் துவாதேசியும் அனுட நட்சேத்திரமும் கூடின சுபதினத்தில் புள்ளிருக்கு வேளூர் சுவாமி முத்தையன் பிள்ளைத் தமிழ் முற்றும்.

இந்தச் சுவடி எழுதின சங்கரலிங்கம் பிள்ளையவர்கள் குமாரன் சொக்கலிங்கத்துக்கு சுவாமி சண்முக குருஞான தேசிக சுவாமி கிருபா கடாட்ச முன்னிற்க.

மும்மலங் கடியுஞ் செம்மலைக் குமரன் திருவடிகளே சரணம்.

குமர நாயகன் துணை.

குறிப்பு:

இதில், இடையிடையே ஏடுகள் இல்லை வைத்திசுவரன் கோவிலில் எழுந்தருளி யுள்ள முத்துக்குமாரசுவாமி பேரில் பாடப்பட்ட பிள்ளைத் தமிழாகு மிது.



வரிசை எண் : 4192 சுவடி என் : 1902-j

## கன்மாட(த)பாதன் சரிதை

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 600 அளவு : 27 × 5 செ.மீ.
பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : கதை
நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஞானமெய்திடு மனை வாக்கு நம்பனார் நயக்குந்
தான மெய்தி நற்குரவராற் பெற்றவர்தங்கட்
கானசித்தியு முத்தியு மக்கணத்தா மால் —28

முடிவு :

கூறுபல் பெருந்தீர்த்தம் யாவுக்கும்
மேலாங் கோடி தீர்த்தம்
பெறுதரு ———————— .

குறிப்பு :

இது, 3-ஆம் ஏடு முதல் தொடங்குகிறது. முதல் 2 ஏடுகள் இல்லை. முதல் அத்தியாயம் பஞ்சாக்கர அத்தியாயம் (பாடல் 54) முற்றும் என்றுளது. 'கல்மாத(ட) பாத சரிதை' இரண்டாவது என்று 4-ஆம் ஏட்டில் உளது.

பின்னர் ஒரு உதிரி ஏடு உளது



வரிசை எண் : 4193 சுவடி எண் : 1903-k

# சிவப்பிரகாசக் கட்டளை

ஏடுகள் : 6 கி. எண்ணிக்கை : 400 அளவு : 27 × 5 செ.மீ. பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : சம்பந்தர் முதலியோர் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து தமிழ்.

தொடக்கம் :

முதலங்கம் தத்துவநாமம்
உண்ணிலைக் கருவிகள்

பூதங்கங்களாவன : பிருதுவி, அப்பு, தேயு, வாயு
ஆகாசம் ஆக — 5
ஞானேந்திரியங்களாவன : சுரோத்திரம், துவக்கு,
சக்ஷு, சிங்ஙவை, கிராணம் ஆக — 5

முடிவு :

சிவபோகமாவது பராசக்தியினிடமாக நின்று
அனிபவத்து-னே கலந்து சிவானுபவம் பிறக்கச் சிவனுடனே
அக்கினிக்கு வெம்மை போலவும் நீருக்குத் தண்மை போலவும்
சிவத்திலே அழுந்துவது
சிவப்பிரகாசக் கட்டளை முற்றுப் பெற்றது.
சிவமயம். ஸ்ரீ காந்திமதி சாலீ வாடீசுவர வேணுவன்
மகாலிங்கம் சகாயம்.

காலம் :

1019-ம் வருஷம் சோபகிருது வருஷம் அற்பிசி மாதம் 23-ந் தேதி யெழுதி முகிந்தது. முற்றும்.

குறிப்பு :

இது, அச்சு நூலைப் பார்த்தெழுதிய குறிப்புளது பிற்பகுதி இடம் மாறியுளது. எமது சுவடி எண் 1903-c போன்றது.



வரிசை எண் : 4194 சுவடி எண் : 1903-l

# சைவ சித்தாந்த நூல்

ஏடுகள் : 5 கி. எண்ணிக்கை : 300 அளவு : 27 × 5 செ மீ.
பக்கத்திற்கு : 15 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சித்தாந்த சாத்திரம் நிலைமை : பழுது முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

——— யோர்க்குச் சாலோக சாமீபங்
கண் மருவியிடு முயர்ஞான மிரண்டா
மாறாமல மகல வகலாத மன்னு போதத்
திருவரு

முடிவு:

நிறைந்த கேவலமா நீர்மைச்
சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந்
தன்மையாகு மூக்கமி லாண்டுங்
கூடா தொழிய வோர் ———

குறிப்பு :

பக்க எண்களும் இல்லை, தலைப்புகளும் இல்லை.



வரிசை எண் : 4195 சுவடி எண் : 1903-m

# சுத்த பஞ்சாட்சர தெரிசனம்

ஏடுகள் : 4 கி. எண்ணிக்கை : 350 அளவு : 27 × 5 செ.மீ
பக்கத்திற்கு : 12 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

பஞ்சாக்ஷரம்— பப்பிரமம்—பாரபவினாசம்
பரமஞான மந்திர மஸ்த்தஞ் சிவயோகஞ்
சிவனென்பது சிவனென்கிர பஞ்சாட்சரம்
விதிப்படி பரப்பிரம்மாய் மூல பராசக்தியாய்

முடிவு :

அதினதின் சுருபமுந் தன்னிற மாக்கிக் கொண்டு
தானும் உள்ளும் புறம்புமாய் நின்று பிரவேசிக்கிறாப்
போலவும் பஞ்சாட்சரத்தையும் மேகாட்சர
மாகிய சிகாரத்திலே காணும் படி யென்றவாறு
சிவபோகம்-ஸ்ரீநமஸ்து

குறிப்பு :

இது, விபூதி மகிமை யுரைப்பது. திருநீற்றின் தன்மை, உயர்வு, பெருமை முதலானவற்றைக் கூறுகிறது.



வரிசை எண் : 4196 சுவடி எண் : 1903-n

## சிவ ஞான போதம் உரையுடன்

ஏடுகள்: 8 கி. எண்ணிக்கை: 5000 அளவு: 27×5 செ.மீ.

பக்கத்திற்கு: 16 வரிகள் ஆசிரியர் : மெய்க்கண்டார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை : பழுது முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே !

சனற்குமா ரேனத்திக் தொழ வியல்பாய்
நந்தியுமேத்தருளுரு ஞான நூல் சிந்தை செய்து
தானுரைத்தான் மெய்கண்டான் தாரணியோர்
தரமுணரவேத் திருட்டாந்தத்தா லின்று
பன்னிரண்டாஞ்சுத்திர முற்றும்.
சிவஞான போத மெழுதி முகிந்தது.

குறிப்பு :

இது, சைவ சித்தாந்த நூல்கள் 14-னுள் ஒன்று. உரையுடனச்சிடப்பட்டுளது. எமது சுவடி எண் 945/D-1245 போன்றது.



வரிசை எண் : 4197 சுவடி எண் : 1903-ο

# சிவஞான சித்தியார்

ஏடுகள் : 27 கி. எண்ணிக்கை : 5000 அளவு : 2 × 5 செ.மீ. பக்கத்திற்கு : 16 வரிகள் ஆசிரியர் : அருணந்தி சிவாச்சாரியார் பொருள் : சைவ சித்தாந்தம் நிலைமை: பழுது முழுமை: முற்றுமுளது எழுத்து: தமிழ்.

தொடக்கம் :

ஒரு கோட்ட னிருசெவியன் மும்மதத்த
னால்வா யைங்காத்த னாறு
தருகோட்டம் பிறையிதழித் தாழ்சடையான்
றருமொறா வாரணத்தின் றாள்க
ளுருகோட்டன் பொடு வணங்கி யோவாதே
யிரவுபக லுணர்வோர் சிந்தை
திருகோட்டு மயன்றிரு மால் செல்வமும்
மொன்றோ வென்னச் செய்யுந் தேவே ! — 1.

முடிவு :

மீனண்டஞ் சினையை யியல் பினோடும் பரிசித்து நினைந்தும்
பார்த்தும் பரிந்திவை தானாக்குமாப் போல் சிவமேயாக்கும்
பரிசித்து சிந்தித்தும் பார்த்தும் தானே ! — 327.

12-ஞ் சூத்திர முற்றும்.

தொழுது நெறிகண்டென் றாய்பரந் தரனே
முழுதுமாய் நின்ற முறைகண்டோன் — பழுதிலா
வெண்ணெய் நல்லூர் மெய்கண்டதேவன் விரைமலர்த்தாள்
நண்ணிநாம் பெற்ற நலம்.

சிவக்கியான சித்தியார் முற்றும்.

வேதமென சாத்திரமென வேறுபல நூல்களு மென
ஓதி முழுதுணர் வோர்க்குப் — போதத்த
தவஞானம் பெற்ற சதாசிவர்தாஞ் சொன்ன
சிவஞான சித்தி தெரிந்தால். சிவமயம்

ஸ்ரீகாந்திமதி சாலீவாடீசுவர வேணுவன மகாலிங்கம்
பாதார விந்தமே கெதி

குறிப்பு :

இது, சுபக்கம், பரபக்கம் என இருபகுதிகளையுடையது. சைவசித்தாந்தசாத்திரங்கள் பதினான்கனுள் ஒன்று. அச்சாகியுளது.



வரிசை எண் : 4198 சுவடி எண் : 1904-a

# செப்பறை சபாபதி பேரில் கட்டளைக்கலிப்பா

ஏடுகள் : 26 கி. எண்ணிக்கை : 400 அளவு : 23 × 3 செ.மீ.
பக்கத்திற்கு : 6 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : தோத்திரம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சிதம்பர மதனின் முனும்பர்கள் பணியத் திருவுக்கொண்ட போழ்கைத்
தெரிசனை செய்த விரணிய வற்மன்றிரும்பவு மிவ் வடிவாக்கப்
பதம் பெறக் கனக மயமதாய்ச் செய்த பரிசுகண்டிங்கு நாந்தரி யோம்
பகர்வருங் கயிலை சிதம்பரங்காசிப் பலன்றரு தெட்சண மேவற

முடிவு :

யாதலா லெனைக்கை விட்டிடா மனம்மடிமை யென்றுன்னருட்
பணிகொள்ளுவாய்.
கோதிலாத் வமுதே யருட்பெருங் குன்றமே
யென்னழகிய கூத்தனே ! — 66

குறிப்பு :

இது, இராசவல்லிபுரம் என்றழைக்கப்படும் செப்பறையின்கண் எழுந்தருளியுள்ள நடராசப் பெருமான் தோத்திரமாகும். இவ்வூர்தான் 'தாமிரசபை' உள்ள ஊர். சிலர் திருநெல்வேலியைச் சொல்வர். இவ்வூர் சபையினைப்பார்க்க அறியலாகும்.

இதன்பின்னர் ஒரு சாதக ஏடு உளது.



வரிசை எண் : 4199 சுவடி எண் : 1904-b

# கெணித அமுர்தம்

ஏடுகள். 91 கி. எண்ணிக்கை: 3000 அளவு : 23×3 செ.மீ.
பக்கத்திற்கு : 7 வரிகள் ஆசிரியர் : திருக்கோட்டி நம்பிகள் பொருள் : (கணிதம்) சோதிடம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்

தொடக்கம் :

ஹரி ஓம் நன்றாக

விளங்கிய சகார்த்தமான வாயிரத் திருநூற் றிங்கள்
வளம் பெரும் பாண்டி மங்கை மாமுனி மாயவன்சே
யுள்ம்புகள் மடவார்கா ஹுயர் திருக்கோட்டி நம்பி
விளம்பிய கெணித நூலை விதித்தன் றுலகுக் கெல்லாம் — 1.

முடிவு :

ஆன லெக்கினத்தின் பொன்னாயந்த வேள் புகாரய்ச் செயு
மூனமில் சனியதாக வுயர்தனு வோரை யாக
போனமே டாங்கிஸத்தின் பொருந்திடப் பிறந்த மைந்தன்
றேனனாய்ப் பாமா பரதஞ் சிறந்த மோட்சங்களாமே — 16

பன்னிரண்டாமிடம் பாவகபலம் முற்றும்
ஆக பாவகம் 12-க்கு விருத்தம் 511.

கெணிதா அமுற்தம் முற்றும். சுபமஸ்து.

காலம் :

முதல் பாடலேயாகும்.

குறிப்பு :

இது, சோதிடத்தின் பாவகபலன் 12-ஐயும் தெளிவாகக் கூறும் நூல்.



வரிசை எண் : 4200 சுவடி எண் : 1905-அ

# கொக்கோகம்

ஏடுகள் : 89 கி. எண்ணிக்கை: 2000 அளவு : 16½ × 3 செ.மீ

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர் : வரதுங்கபாண்டியர் பொருள்: காமநூல்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக
முதச்சாதி பதுமினிக்கு

செண்பகப் பூப்போலே சிவந்த மேனியும்
மதுர வாக்கும் பொய் சொல்லாண்மையும்
திவ்விய வாசத்துடைய சரீரமும் மான்போலப்
பார்வையும் பூவிலும் மெல்லிய சரீரமும்

முடிவு :

வெள்ளி பகல்க் கண்ணிமை ராத்திக்கு அல்குலில்
சனிப் பகலு மார்த்திரிக்குங் கழுத்தந் தண்டு நனி
நகதாடனம் நெத்தி பல்குறி சம்பள தாடனம்
கண் சும்பனம்—பிடரி ......................

குறிப்பு :

இது, வடமொழி மதன நூலின் மொழி பெயர்ப்பு. இதற்கு சம்பராரிப் புராணம் என்றும் பெயர். இதில் மாதர் ஆடவர்களின் சாதி, பருவம், குணம் பிறவும் விரித்துக்

கூறப்பட்டுள்ளன. இதன் ஆசிரியர் தமிழில் நைடதம் பாடிய அதிவீரராம பாண்டிய னுடைய சகோதரர் என்பர்.

இது, எமது சுவடி எண் 433/D-1038 போன்றது.



வரிசை எண் : 4201 சுவடி எண்: 1905–b

# தன்வந்திரி சிந்தாமணி

ஏடுகள் : 13 கி. எண்ணிக்கை : 400 அளவு : 16½ × 3 செ.மீ.

பக்கத்திற்கு: 8 வரிகள் ஆசிரியர்: தன்வந்திரி-மாதையன் பொருள்: மருத்துவம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

ஹரி : ஓம் நன்றாக குருவே துணை

செய்ய மாதுக்கிறைவன் முன் செப்பிய
துய்ய ஆயுள் மறையில்த் துலங்கிய
மெய்ய மாதையா நோதிய விற்பொருள்
அய்யன் தன்மந்திரர்க் கருளக் கூறினோம்

நந்தக்குறி

நிளம்பிய வாதரோகி தந்தமே மிகக் கருக்கும்
வளம்படு பித்தரோகி பல்லு மஞ்சனிக்கு மானே
யுளங்கொளா சேற்ப ரோகி பல்வெளுத் திருப்ப துண்மை
துளங்கிடா தறிந்து கொண்டு சொல்லுமிக் குணங்கள் தானே! —56

தன்மந்திரி சிந்தாமணி முற்றும்.

குறிப்பு :

இது, எமது சுவடி எண் 186/D-293; எண் 317-f/D-584 போன்றது. வேறுபாடு காணப்படுகிறது.



வரிசை எண் : 4202 சுவடி எண் : 1905-c

# சுந்தரமூர்த்தி தன்வந்திரி சிந்தாமணி

ஏடுகள் : 50 கி. எண்ணிக்கை : 1000 அளவு : 16×3 செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : சுந்தரமூர்த்தி பொருள் : மருத்துவம்
நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து: தமிழ்

தொடக்கம் :

நமசிவாயம்
ஆனந்த வாயுவுக்குப் பத்து

சந்தனம் ராமிச்சம் வேர் சுக்கு வசம்பு
இதுவெல்லா மரைத்து கொதிக்க வைத்து
பத்துப் பூசவும்

முடிவு :

கையிரண்டையும் கழுவிப் போட்டு
கருடருக்க எலிவிசந் தீரும்
அஞ்சுவருச மாறு வருச ம்வ்விசங்
கொண்டிருக்கிற பேருக்குக் குடுக்குர மருந்து
கை கண்டது

தன்மந்திரி சிந்தாமணி சுந்தரமூர்த்தியேடு

காலம் :

998-ஆம் வருடம் வைகாசி மாதம் 3-ந் தேதி எழுதியது. முகிந்தது. அது அறியவும். யெடுத்தவர்கள் குடுக்கவும்.

குறிப்பு :

இது, தன்வந்திரி சிந்தாமணி உரைநடையாக உள்ளது.



வரிசை எண் : 4203 சுவடி எண் : 1905-d

# வைத்தியத் திரட்டு

ஏடுகள் : 7 கி. எண்ணிக்கை : 150 அளவு : 16½×3 செ.மீ.
பக்கத்திற்கு: 7 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : மருத்துவம்
நிலைமை ; நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து ; தமிழ்.

தொடக்கம் :

சித்தான குழவிந்தம் மஞ்சள் வாங்கி
சிறுவில்லை போலே நறுக்கி உலத்தக்கேளு
மூத்தான கொக்கரக மூலி சாத்தில்
மூன்றுநாள் ஊரப்போட்டு வேளையிலுமே

முடிவு :

பதினெண்பேரும் திரமாகரச வாத மூதி
ஊதி சிகத்திலுள்ள மாந்தரையும் பிளைக்கச் சொல்லி
வரமான அவரவர்கள் நூல்கள் கட்டி
மானிர்கள் பிழைக்கவுந்தான் வகைசொன் னாரே !

குறிப்பு :

இதில், பலவித மருத்துவங்கள் கூறப்பட்டுள்ளன.



வரிசை எண்: 4204 சுவடி எண் : 1906-அ

# சூர்ணோ உற்சவம்

ஏடுகள் : 3 கி. எண்ணிக்கை : 50 அளவு : $13\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சாத்திரம் நிலைமை: நல்ல நிலை முழுமை: முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

அவத்தை நடக்கிறவனுக்கு விபூதி
சாத்தி அவனுக்கு மேற்காகச் சிவ
கும்ப மெழுந்தருளப் பண்ணி அவனைக் கொண்டு
அட்ட புட்பஞ் சாத்தி வித்து
வலது செவியிலே பஞ்சாட்சரத்தையு பதேசித்து

முடிவு :

மிருத்துவாமு நிச்சம சதிறாசிய பிரத்தியை
சதுஷ்பதாஞ் சத்துவிபதாம் விபூத்தியை
பெரீ மகமசம் பிருதி தாடயாமி............

குறிப்பு :

இறக்கும் தருவாயில் உள்ளவர்களுக்குச் செய்யும் கிரியை



வரிசை எண் : 4205 சுவடி எண் : 1906-b

# சமைய அத்தியேஷ்டி

ஏடுகள் : 53 கி. எண்ணிக்கை : 1000 அளவு : $13\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 8 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

தானம் பண்ணி யுடை யுத்தரீகம் தரித்து
விபூதி சாத்தி விபரீதமாகக் கர நியாசம்
பண்ணி வற்த்தனியை இடத்தோளிலே
பின்னே மூக்காக வைத்து

முடிவு :

சீவனிடத்திலே ரேசகத்தினாலே யோசிப்பான்
பின்பு பிராயச்சித்த முதலான மேலுள்ள
சறுவ கற்மங்களையும் விசேஷ தீட்சையினாலே
சொல்லப்பட்ட பிரகாசத்தினாலே செய்வன்
சமைய அந்தீட்டி முற்றும்.

குறிப்பு :

சமைய தீட்சை முதலானதுகள் பெற்ற சைவ சமயிகளுக்கு இறந்த பின்னர் உடலுக்குச் செய்யவேண்டிய காரியங்களைப் பற்றிக் கூறுகிறது.

இது எமது சுவடி எண் 532/D-760 போன்றது.



வரிசை எண் : 4206 சுவடி எண் : 1906-c

# விசேட அத்தியேஷ்டி

ஏடுகள் : 10 கி. எண்ணிக்கை : 200 அளவு : $13\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.

பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றுமுளது எழுத்து தமிழ்.

தொடக்கம் :

விசேட சங்கற்கார முடைய வனுக்கு
முன்புபோலே ஆசார வைகவ்விய சுத்தி
யாற்தமாக நாடி சந்தான மளவாக
யெல்லாக் கிரிகை களையுஞ் செய்து

முடிவு :

ஒவ்வொருக் கால் தற்பித்து மீளவும்
நானம் பண்ணிப் பிராயச் சித்தத்தாற்த மாக
அத்திரத்தி னாலே நூற்றெட்டுருச் செவித்து
பின்பு அத்தி சஞ்சயனம் பண்ணுவான்

விசேச அந்தீட்டி முற்றும்

குறிப்பு :

இது, முன்னது போல விசேட தீட்சை பெற்றவர்களுக்குச் செய்யும் காரியமாகும்.



வரிசை எண் : 4207 சுவடி எண் : 1906-d

## சாந்தியாதீத கலை முதலான வகைகளுக்குத் தானம்

ஏடுகள் : 29 கி. எண்ணிக்கை : 600 அளவு : 13½ × 3½ செ.

பக்கத்திற்கு: 9 வரிகள் ஆசிரியர்: அறியக்கூடவில்லை பொருள்: சைவ சாத்திரம்

நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : தமிழ்.

தொடக்கம் :

சாந்தியாதீத கலைக்குத் தானம் சிரசு

ஓம் ஔம் சாந்தியாதீத கலாய நம :
ஈசானம் நேத்திரம் அத்திரம் ஆக 3
பதம் ஓம் ஓம்—1 அச்சரம் அ. ஆ.
இ. ஈ. உ. ஊ. யீரோ யீரோ யில்லோ யில்லோ

முடிவு :

மேலே ஆகாச வெளியில் ஆடகம்
கூஸ்மாண்டம்—காலசக்கினி ஆக புவனம் - 3

பிறிதிவிக்குக் கீழே அண்டத்துச் சுவர்
முடிவாகக் கண்ட வெளியிலிருக்கும்.

ஆக புவனம்—108

குறிப்பு :

பஞ்ச கலா மந்திரங்கள் எனப்படும் மந்திரங்களின் விளக்கம் இதில் கூறப் பட்டுளது.



வரிசை எண் : 4208 சுவடி எண் : 1906-e

## சமைய அந்தியேஷ்டி

ஏடுகள் : 2 கி. எண்ணிக்கை : 50 அளவு : $13\frac{1}{2} \times 3\frac{1}{2}$ செ.மீ.
பக்கத்திற்கு : 9 வரிகள் ஆசிரியர் : அறியக்கூடவில்லை பொருள் : சைவ சாத்திரம் நிலைமை : நல்ல நிலை முழுமை : முற்றற்றது எழுத்து : கிரந்தம்.

தொடக்கம் :

ஆசார்ய சாயக புத்ராணாம்
அந்தியேஷ்டி: அத்வ சுத்தியுதா
கர்த்தவ்யாசமயின: சத்விவர்ஜிதா :

முடிவு :

வாமபாகே ஓம் ஹாம் பிரம்மணே நம :
கீலே ஷு ஓம் ஹாம் மாத்ருப்யோ நம :
சர்மேஷு நாகேப்யோ நம :

குறிப்பு :

இது, முன் சுவடியிலுள்ளது போல கிரந்தத்தில் எழுதப்பட்டுளது.



